# இயேசு
# மரித்தது எங்கே?

*ஆங்கிலத்தில்:*

**J.D. ஷம்ஸ்**

*தமிழாக்கம் :*

**S.S. அசன் அபூபக்கர் B.Sc., B.T.,**

*வெளியிடுவோர் :*

**நஸாரத் நஷ்ரோ இஷாஅத்**

**சதர் அஞ்சுமன் அஹ்மதிய்யா**

**காதியான், பஞ்சாப்.**



**'EASU MARITHADU ENKAE'**

Tamil Version of *WHERE DID JESUS DIE?*

by Moulana J.D. SHAMS

First Edition 1970

Second Edition 2005

Translated by

**S.S. Hassan Aboobacker B.Sc., BT.**

Published by :

NAZARAT, NASHR-O-ISHAAT

Sadr Anjuman Ahmadiyya

Qadian - 143516

PUNJAB STATE

# பதிப்புரை

*‘இயேசு மரித்தது எங்கே?’ என்ற இந்த நூல் மவ்லானா* J.D. *ஷம்ஸ் அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய ‘வேர் டிட் ஜீஸஸ் டை’* (Where did Jesus die?) *என்ற நூலின் தமிழ் வடிவமாகும்.*

*இயேசு சிலுவையில் இறக்கவில்லை. மாறாக, அதிலிருந்து உயிர்தப்பி, பாலஸ்தீனத்தை விட்டு வெளியேறி பல்வேறு நாடுகளைக் கடந்து இந்தியா வந்தார். காஷ்மீரில் தமது இறுதி நாட்களைக் கழித்து அங்கேயே காலமானார் என்ற உண்மையை முதன்முதலாக உலகிற்குச் சொன்னவர் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் என்ற அமைப்பை உருவாக்கியவரும் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (மெசாயா) ஆகிய ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களாவார்கள். இறையறிவிப்பின் மூலம் இறைவன் இவ்வுண்மையை தமக்கு அறிவித்ததாக அவர்கள் கூறினார்கள். 1899 ஆம் ஆண்டில் ‘மஸீஹ் ஹிந்துஸ்தான் மேய்ன்’ என்று உருது மொழியில் இவர்களால் எழுதப்பட்ட நூல் இயேசு பற்றிய முற்றிலும் புதிய ஒரு கருத்தை மக்களின் ஆய்வுக்கு வழங்கியது. இந்நூலை அடிப்படையாகக் கொண்டு பல அறிஞர்களால் எழுதப்பட்டுள்ள ஏராளமான ஆய்வுக்கட்டுரைகள் இக்கருத்து உண்மையானதே என்பதற்கு சான்று பகர்கின்றன.*

*இந்தக் கருத்துக்கு வலுவூட்டும் வகையில், இன்னும் பல சான்றுகளைத் திரட்டி ‘வேர் டிட் ஜீஸஸ் டைய்’ என்ற நூலை 1946 ஆம் ஆண்டில் வெளியிட்டார் மவ்லானா* J.D. *ஷம்ஸ் அவர்கள். இதில் வியப்பிற்குரியது என்னவென்றால் மவ்லானா ஷம்ஸ் அவர்கள் இலண்டனிலுள்ள அஹ்மதிய்யா பள்ளிவாசலின் இமாமாக பணியாற்றிய காலத்தில் இந்நூலை அங்கு வெளியிட்டதேயாகும். கிறிஸ்தவ திருச்சபைகள் அதிக செல்வாக்குப் பெற்றிருந்த அந்தக் காலத்தில் அவர்களின் கொள்கைகளை தகர்க்கின்ற முயற்சியாக இந்த நூலை வெளியிட்டிருப்பது மவ்லானா ஷம்ஸ் அவர்களின் அபார துணிச்சலை மட்டுமின்றி இறைவன் மீது அவர்கள் கொண்டிருந்த அசைக்க முடியாத நம்பிக்கையையும் எடுத்துக் காட்டுகிறது. தமது கருத்திற்கு ஆதாரவாக* J.D. *ஷம்ஸ் அவர்கள் இந்நூலில் தரும் சான்றுகளில் பைபிள்*





*சான்றுகளுடன் திருக்குர்ஆன், நபிமொழி, மருத்துவ, வரலாற்று சான்றுகளும் இடம் பெற்றுள்ளன.*

*இந்த நூல் அக்காலத்தில் இலண்டனில் வெளிவந்தபோது மக்களிடம் வியப்பையும் திகைப்பையும் ஏற்படுத்தியது. எனினும் இந்த நூலில் காணப்பட்ட கருத்துக்களை மறுத்துக்கூற எவரும் முன்வரவில்லை. இதிலிருந்து இந்நூலில் கூறப்பட்ட கருத்துகள் முற்றிலும் உண்மையே என்ற முடிவிற்கே வரவேண்டியுள்ளது.*

*‘வேர் டிட் ஜீஸஸ் டைய்’ என்ற நூல் பல்வேறு உலக மொழிகளிலும் இந்திய மொழிகளிலும் மொழியாக்கம் செய்யப்பட்டு வெளிவந்திருக்கிறது. இந்த நூல் மேலப்பாளையத்தைச் சேர்ந்த ஜனாப்* S.S. *ஹஸன் அபூபக்கர்* B.Sc., B.T. *அவர்களால் 1970 ஆம் ஆண்டில் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு ‘இயேசு மரித்தது எங்கே?’ என்ற தலைப்புடன் மேலப்பாளையம் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தால் வெளியிடப்பட்டது.*

*இப்போது காதியானிலுள்ள* **நஸாரத் நஷ்ரோ இஷாஅத்** *(அஹ்மதிய்யா தலைமையக வெளியீட்டுத்துறை) இதனை வெளியிடுகிறது.*

*இந்நூலை ஜனாப்.* A. *நாஸிர் அஹ்மது, மவ்லவி* O.M. *முஸ்ஸம்மில் அஹ்மது* H.A., *மவ்லவி* M. *ரஃபீக் அஹ்மது* H.A., *ஜனாப்.* M. *கலீல் அஹ்மது ஆகியோரைக் கொண்ட குழு சரிபார்த்து தேவையான திருத்தங்களைச் செய்துள்ளது. தமிழ்நாடு தென்மண்டல அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் அமீர் ஜனாப்* A.P.Y. *அப்துல் காதிர் அவர்களும் இந்த நூல் வெளிவர தேவையான உதவிகளைச் செய்துள்ளார். இவர்கள் அனைவருக்கும் இறைவன் இந்த நற்பணிக்கான நற்கூலியை வழங்குவானாக. இந்நூலை அழகிய முறையில் டைப்செட் செய்து தந்த ஜனாப்* A. *முஹம்மது நிஸார் அவர்களுக்கும் அல்லாஹ் நற்கூலியை வழங்குவானாக.*

*இந்த அரிய நூல் மூலமாக மக்கள் உண்மையை உணர்ந்து தவறான கொள்கைகளைக் கைவிட எல்லாம் வல்ல இறைவன் அருள்பாளிப்பானாக!*

*- வெளியீட்டாளர்*

# உள்ளே...

# அணிந்துரை

மவ்லவி ஷம்ஸ் அவர்கள், சுவையானதும், அறிவூட்டக் கூடியதுமான தமது ஆய்வு நூலுக்கு என்னிடம் ஒரு முன்னுரை எழுதிக் கேட்டு, என்னை மிகவும் கௌரவித்துள்ளார்கள். அப்பணியை நிறைவேற்றுவதில் நான் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

ஆன்மீக வாழ்வில் மதத்திற்கு இயல்பான தகுதிமிக்க ஓர் இடம் கிட்டவேண்டுமாயின், அம்மதம் சத்தியத்தின் மீது நிர்மாணிக்கப்பட வேண்டும். இஸ்லாமோ, உண்மையைத்தேடி, அதனைத் கிரகித்துக் கொள்ளுவதைத் தன்னுடைய கொள்கைகளில் ஒன்றாகக் கொண்டிருக்கிறது. மவ்லவி ஷம்ஸ் அவர்கள் தம்முடைய **‘உண்மையைத் தேடும் பணியில்’** ஆழ்ந்த கவனம் செலுத்தி தனித் திறமையோடு அதன் முடிவுகளை வெளியிட்டிருக்கிறார். அவரது திறமை உன்னத நிலையிலுள்ள வழக்கறிஞரிடத்தில்கூட பொறாமை யைத் தூண்டிவிடும் தன்மையது. **‘நிரூபிக்க இயலாத ஏதோ ஒன்றுக்கு அடிபணிதலே மதம்’** எனப்படும் என்று வரையறுப்பவர்களால் அவருடைய தெளிவான முடிவுகளை ஏற்றுக் கொள்ள முடியாமல் இருக்கலாம். இருப்பினும் அவரது முடிவுகள் தெளிவாகவும், திட்டவட்டமாகவும் வரிசைப்படுத்தித் தரப்பட்டுள்ளன. பல தவறான கருத்துக்களின் அடிப்படைத் தன்மையை அவர் தெளிவுபடுத்தியுள்ளார். உண்மையில், அவர் ஈவிரக்கமற்ற தன்மையில் இவ்வேலையைச் செய்திருப்பினும், எவரையும் ஏளனத்திற் குள்ளாக்கவில்லை. கிறிஸ்தவ மதம் ஓர் உச்சநிலையை அடைந்திருப்பதாகச் சில வேளைகளில் வாதிக்கப்படுகிறது. எவற்றின்மீது கிறிஸ்தவ மதம் நிர்மாணிக்கப் பட்டுள்ளதோ, அந்த மத





கொள்கைகளும் அல்லது விவரங்களும் தடுமாறிக் கொண்டிருக்கின்றன என்று நிரூபிக்கப்பட்டுள்ளபோது, இத்தகைய வாதம் நியாயமாவது எவ்வாறு? இயேசு காணாமற் போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு சத்தியத்தை அறிவிப்பதற்காக இறைவனால் அனுப்பப்பட்ட தீர்க்கதரிசியாவர். இன்று அவ்வுண்மை மதக் கொள்கைகளும் சமயக் கோட்பாடுகளும் கொண்ட ஒரு குறுகிய வேலைத் திட்டத்திற்குள் அடக்கப்பட்டுக் கிடப்பதாகவே கொள்ளப்படுகிறது. இக்கொள்கை கோட்பாடுகளுமே கிறிஸ்தவ மதமென, இப்பூமியில் மக்கள் வசிக்கும் ஒவ்வொரு பகுதியிலும் போதிக்கப்படுகிறது. ஆனால் எல்லாப் பகுதியினரும் இயேசுவின் போதனையிலிருந்து விலகியே செல்கிறார்கள். தற்காலத்திய கிறிஸ்தவ மதம் இயேசுவால் அறிவிக்கப்பட்ட போதனைகளை குறைவாகவோ கூடுதலாகவோ, எந்த அளவுக்குப் பிரதிபலிக்கிறது? இவ்வளவு தூரம் அதனுடைய அடிப்படை உண்மையிலிருந்து கிறிஸ்தவ மதம் விலகிச் சென்றிருக்கும்போது, அது உச்ச நிலையை அடைந்துவிட்டதென்ற வாதத்திற்கு என்ன ஆதாரமிருக்கிறது?

இந்நூல் அளவில் பெரியதாயில்லாவிடினும், இது ஒரு பெரும் வெற்றியாகும். உயிர்த்தெழுதல், பரமேறுதல் ஆகியவற்றிற்கு ஒதுக்கப்பட்டுள்ள பகுதி - அதிலும் குறிப்பாக இரண்டாவதாக சொன்ன பரமேறுதல் பற்றிய பகுதி - தங்களை மிகவும் கவர்ந்ததாக அநேக வாச கர்கள் அறிவித்த போதிலும், இந்நூலின் எல்லா அத்தியாயங்களும் சம அளவில் முக்கியத்துவமும், சுவையும் கொண்டவை. அவர் நம்முன் வைத்துள்ள புதிய ஆதாரம் தற்செயலாகக் கிடைத்ததல்ல. தப்பெண்ணமில்லாமலும், ஒருதலைப்பட்சமான கருத்துக்களால்

உணர்ச்சி வேகத்திற்கு இடம் கொடாமலும் இந்தப் புதிய ஆதாரம் நன்கு பரிசோதிக்கப்பட்டு, ஆலோசிக்கப்பட வேண்டுமேயொழிய விரைவானதொரு முடிவுக்கு எவரும் வரக்கூடாது.

இவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்த ஒரு பிரச்சனையைப் பற்றிய பேச்சு வார்த்தைகளிலிருந்து கிறிஸ்தவர்கள் பின்வாங்கும் விதத்திலிருந்தே வைதீகக் கிறிஸ்தவர்களின் நிலைமையிலுள்ள இயலாமை – அதிலும் குறிப்பாகப் பரமேறுதலைப் பொருத்த வரையிலும் – நன்கு புலனாகின்றது. டபிள்யூ. கேரியூ ஹேஸ்லிட் என்பார் கூறுகிறார்: "**பரமேற்ற நிகழ்ச்சியை கண்ணால் கண்டு மற்றவர்களிடம் விவரத்தை எடுத்துக்கூறி அதனை நமக்கு எட்ட வைத்தவன் என்று சொல்லத்தக்க விதத்தில் நம்பிக்கைக்குரியவன் ஒருவனாவது உண்டா? என்பதே நம்முன்னுள்ள கேள்வியாகும்.**" வைதீகக் கிறிஸ்தவர்கள் மட்டுமின்றி விஸ்கௌண்ட் ஆம்பெரேலி டபிள்யூ. ஆர். காஸல்ஸ் போன்ற திறனாய்வாளர்கள்கூட இத்தகைய வினாக்களை விட்டுப் பொதுவாகத் தப்பித்துக் கொள்ளவே பார்க்கிறார்கள். ஆதாரம் காட்டுவதற்கு எத்தகைய முயற்சியும் எடுத்துக் கொள்ளாமல், டாக்டர் மோஸ்லி என்பார், '**வரலாற்றிலுள்ள ஒரு சம்பவம் எவ்வளவு உறுதியானதோ, அவ்வளவு உறுதியானது பரமேற்றமும்**' என்கிறார். டாக்டர் ஆர்.ஜே. காம்பெல் என்பாரும், எவ்வித அத்தாட்சியும் சமர்ப்பிக்காமல் '**முழுக்கதையும், அதன் சொற்பொருள்படி மிகத்துல்லியமாக உண்மையானதாகும்**' என்று வாதிக்கிறார். இருப்பினும் உயிர்த்தெழுதலையோ பரமேற்றத்தையோ நிரூபிக்கும் வகையில் மறுக்க முடியாத சான்றுகளை எவரும் காட்டவில்லை. தற்கால மக்கள் அறிந்துகொள்ள விரும்புவது என்னவென்றால், '**பரமேற்றம் உண்மையிலேயே நடைபெற்றதா?**'





என்பதைத்தான் என்று எழுதுகிறார் எப்.சி. கோனிபர் என்பார். பிஷப் கோர் என்பாரும் பிறரும் – வைதீகர்களும், திறனாய்வாளர்களும் – தட்டிக் கழிப்பதாகத் தோன்றும் தெளிவான கேள்வியும் இதுதான். ஆனால் மவ்லவி ஷம்ஸ் அவர்களோ இக்கேள்விக்கு முழுமையாகவும், தெளிவாகவும் விடை தந்திருக்கிறார்கள்.

இக்கேள்விக்கு தாங்கள் தனித்திருந்து ஆராயும்போதும், நூலகத்தினுள்ளும் பலரும் விடை கண்டிருக்கிறார்கள். இவ்விடத்தில் எப்.சி. கோனிபர் அவர்களின் கூற்றையே மீண்டும் கூறுவோம். இறுதியில், "பொதுமக்களைப் பார்த்து தெளிவான வார்த்தைகளில், '**ஒரு கட்டுக்கதை எப்போதும் கட்டுக்கதையே**' என்று சொல்லி விடுவது எளிய காரியமல்லவா? அவர்கள் எடுப்பார் கைப்பிள்ளைகள் அல்லர். சான்றோர் பேசும் அநேக சொற்பொழிவு மன்றங்களில் கேள்விப்படுகின்றதும், தனித்த ஆராய்ச்சியின் போது அடிக்கடி தனக்குத் தட்டுப்படக்கூடியதுமான கருத்துக்களை, ஆலய மேடையில் ஏறி நின்று வெளிப்படையாகக் கூறுவதென்பது ஒரு மதபோதகருக்கோ அல்லது ஒரு மதகுருவுக்கோ இவ்வளவு பயங்கரமாகத் தோன்றுவது ஏன்?"

டட்லி ரைட்

(Phil.D., F.S.P.)

# அறிமுகம்

இச்சிறு நூலில், ஆராயும் பொருட்டு நான் எடுத்துக் கொண்ட பொருள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். ஏனெனில் முப்பெரும் மதங்களாகிய யூத மதம், கிறிஸ்தவ மதம், இஸ்லாம் ஆகியவற்றின் நம்பிக்கைகளோடு அவ்விஷயம் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டதாயிருக்கிறது.

இயேசுவை சிலுவையில் அறைந்து, ‘சபிக்கப்பட்ட மரணத்திற்கு’ அவரை ஆளாக்கியதால் [உலகெங்கிலுமுள்ள யூதர்கள் இவ்வாறே நம்புகிறார்கள்] சந்தேகத்திற்கிடமில்லாமல் அவர் ஒரு கள்ளத் தீர்க்கதரிசியே எனத் தாங்கள் நிரூபித்துவிட்டதாக யூதர்கள் நம்புகிறார்கள்.

கிறிஸ்தவர்களோ, இயேசு உண்மையிலேயே சபிக்கப்பட்ட மரணமடைந்தார் என்பது வரையிலும் யூதர்கள் கூறுவதை அப்படியே ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் மனித குலத்தைக் காப்பாற்றுவதற்கே, அவர் இவ்வாறு சபிக்கப்பட்ட மரணத்தை அடைந்தார் என்று கூறுகிறார்கள். கலாத்தியர் 3 : 13ல் ‘மரத்திலே தூக்கப்பட்ட எவனும் சபிக்கப்பட்டவன் என்று எழுதியிருக்கிறபடி கிறிஸ்து நமக்காகச் சாபமாகி, நியாயப்பிரமாணத்தின் சாபத்திற்கு நம்மை நீங்கலாக்கி மீட்டுக் கொண்டார்’ என்று பவுல் கூறுகிறார்.

உபாகமம் 21:23ல் “தூக்கில் போடப்பட்டவன் தேவனால் சபிக்கப்பட்டவன்” என்று எழுதப்பட்டுள்ள வசனமே இங்கு குறிப்பிடப்படுகிறது. இயேசுவின் சிலுவை மரணமும் அதைத் தொடர்ந்து, அவர் உயிர்பெற்றெழுந்ததும் கிறிஸ்தவ மதத்தின் முக்கியமான அடிப்படையாக அவர்கள் கருதுகிறார்கள். பவுல் கொரிந்தியருக்கு எழுதின முதலாம் நிருபத்தில், ‘கிறிஸ்து எழுந்திருக்கவில்லையென்றால், எங்கள் பிரசங்கமும் விருதா, உங்கள் விசுவாசமும் விருதா’, என்று கூறுகிறார். பழக்கத்திலிருக்கும் இந்த நம்பிக்கைக்கு நேர் மாறாக இறைவன் திருக்குர்ஆனில், இயேசு தன்னுடைய தூதர்களில் ஒருவரென்றும், காணாமற்போன ஆடுகளாகிய, இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு அனுப்பப்பட்டவரென்றும் அவரது எதிரிகள் திட்டமிட்ட சபிக்கப்பட்ட மரணத்தினின்றும் தன்னுடைய கருணையால் அவரைக் காப்பாற்றி, மற்ற இறைதூதர்களைப் போலவே அவரையும் இயற்கை மரணமடையச் செய்தான் என்றும் அறிவிக்கிறான்.

எனவே, இயேசு சிலுவையில் மரணமடையவில்லை என்றும் நினைவிழந்த நிலையில் சிலுவையிலிருந்து கீழே இறக்கப்பட்டு அதன்





பின்னரும் தொடர்ந்து உயிர் வாழ்ந்து தம் வருகையின் நோக்கத்தை நிறைவேற்றிவிட்டார் என்றும், இறுதியில் இயல்பான முறையில் மரணமடைந்தார் என்று நம்மால் நிரூபிக்க முடிந்தால், யூதர்களும் கிறிஸ்தவர்களும் தங்கள் நம்பிக்கையின் மிக முக்கியமான பகுதியில் தவறிழைத்து விட்டார்கள் என்பதையும் நாம் நிரூபித்தவர்களாவோம். இயேசுவின் சபிக்கப்பட்ட மரணத்தின்மீது நிர்மாணிக்கப்பட்டுள்ள இன்றையக் கிறிஸ்தவ மதமும் அக்கணமே விழுந்து நொறுங்குவது நிச்சயம் என்று கூறினால் அது மிகையாகாது.

இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்ற நம்முடைய வாதத்தில் அடங்கியுள்ள உண்மைக்கு ஆதாரமாக சுவிசேசங்களைக் கையாளுகையில், நாம் கீழ்க்கண்ட விஷயங்களை மனதில் இருத்திக் கொள்ள வேண்டும்.

1] தாமஸ் பெய்ன் என்பவர் இவ்வாறு எழுதுகிறார்:

> “இயேசு உயிர்த்தெழுந்ததாகக் கூறப்படும் காலத்திற்கு ஏறத்தாழ 350 வருடங்களுக்குப் பிறகு நிசி, லயோடீசியா சபைகள் கூட்டப்பட்டன. அப்போது தற்காலத்தில் ஒரு சட்டம் அமுலாவதற்கு நாம் ஓட்டுப்போடுவதைப் போலவே, இப்போது புதிய ஏற்பாட்டில் அடங்கியுள்ள புத்தகங்கள், ‘வேண்டும்’ என்றோ ‘வேண்டாம்’ என்றோ கூறுவதன் மூலம் ஓட்டுக்கு விடப்பட்டன. ஓட்டுக்கு நிறுத்தப்பட்ட ஏராளமான புத்தகங்கள் ‘வேண்டாம்’ என்ற வாக்குகளையே பெரும் பகுதி பெற்றதால், அவை தள்ளுபடி செய்யப்பட்டன. புதிய ஏற்பாடு அமுலுக்கு வந்த வழி இதுதான்: “அவர்கள் திரட்டியிருந்த புத்தகங்களில் எது கர்த்தருடைய வார்த்தையாகக் கருதப்பட வேண்டும்; எது கருதப்படக்கூடாது என்பதை ஓட்டளிப்பதன் மூலமாகவே அவர்கள் முடிவு செய்தார்கள். அவர்கள் ஏராளமானவற்றைத் தள்ளுபடி செய்து விட்டார்கள். அபோகிரைபா [தள்ளுபடியாகமம்] என்றழைக்கப்படும் புத்தகங்கள் போன்றவற்றை ‘சந்தேகத்திற்குரியன’ என்று ஓட்டளித்தார்கள். பெரும்பான்மையான ஓட்டுகளைப் பெற்ற புத்தகங்களையே கர்த்தரின் வார்த்தையாகத் தேர்ந்தெடுத்தார்கள். அவர்கள்சற்று வேறுவிதமாக ஓட்டளித்திருந்தால் தங்களைக் கிறிஸ்தவர்கள் என்று அழைத்துக் கொண்டிருக்கும் எல்லா மக்களும் வேறுவிதமாக விசுவாசம் கொண்டிருப்பார்கள். ஏனெனில், ஒருவனுடைய விசுவாசத்திற்கு, இன்னொருவனுடைய ஓட்டு காரணமாக இருக்கிறது.” [தி ஏஜ் ஆஃப் ரீஸன்]

2] எனவே, அப்புத்தகங்கள் கர்த்தருடைய வார்த்தையல்ல. சுவிசேசகர்கள் அவ்வாறு வாதிக்கவுமில்லை.

3) அப்புத்தகங்கள் சிலுவை சம்பவத்திற்குப் பிறகு பல்லாண்டுகள் கழித்து எழுதப்பட்டன. அக்காலத்தில், சங்கிலித் தொடரென விரைந்த சம்பவங்கள் கல்வாரி மலையில் உச்சக்கட்டத்தை அடைந்ததைப் பற்றி அவர்கள் உள்ளங்களில் பதிந்த அவசர அபிப்பிராயங்களிலிருந்து மிக நுட்பமான உண்மை விவரங்களைப் பதிவு செய்வதும் நம்பத்தகுந்த விவரங்களைச் சேகரிப்பதும் சுவிசேசகர்களுக்கு மிகமிகக் கஷ்டமாக இருந்திருக்கும்.

4) சுவிசேஷங்களில் அடங்கியுள்ள விஷயங்கள் சந்தேகத்திற்குரியன என்பதற்கும், அவை சரியாகவோ அல்லது தவறாகவோ இருக்க முடியும் என்பதற்கும், அவை நான்கிலும் காணப்படும் எண்ணற்ற வேறுபாடுகளும் முரண்பாடுகளுமே அத்தாட்சியாக அமைந்துள்ளன.

5) நான்காவது சுவிசேஷத்தை எழுதியவர், இயேசுவின் சீஷராகிய யோவான் அல்லர் என்று தற்கால ஆராய்ச்சி எடுத்துக் காட்டியுள்ளது. அச்சுவிசேஷத்தில் கடைசி அதிகாரத்தின் 24ஆம் வசனம்கூட இவ்வுண்மையை வெளிப்படுத்திக் காட்டுகிறது. இதே போன்று எபிரேய மொழியில் அமைந்த மத்தேயு சுவிசேஷத்தின் மூல நூல் காணாமற்போய் விட்டது. தற்போதுள்ள மொழிபெயர்ப்பை எழுதியவர் யாரென எவருக்கும் தெரியவில்லை. மற்ற இருவரும் (மாற்கு, லூக்கா) இயேசுவுடைய அப்போஸ்தலர்கள் அல்லர்.

6) சரித்திர ஆசிரியனுடைய தனிப்பட்ட சொந்த நம்பிக்கைகள், அவனது மனோபாவம் ஆகியவற்றால் ஒரு வரலாற்று நூல் சாதாரணமாகவே பெரிதும் பாதிக்கப்படுகிறது என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

7) மற்ற வரலாற்று ஏடுகளை நாம் எவ்வாறு சோதித்து அறிவோமோ அதேவிதமாக, சுவிசேஷங்கள் நான்கிலும் குறிப்பிடப்பட்டுள்ள பிறப்பு விவரம், சிலுவைச் சம்பவம், உயிர்த்தெழும் நிகழ்ச்சி போன்ற வரலாற்று விவரங்களைச் சோதித்து அறிய வேண்டும். சாதகமான சான்றுகளைச் சமர்ப்பிக்கும்படிக் கேட்க வேண்டும். கடந்த காலச் சம்பவங்களை அலசி ஆராயும்போது நம்பத் தகுதியற்றவற்றிலிருந்து நம்பத்தகுந்தவற்றை கவனத்தோடு பிரித்தறிய வேண்டும். இவற்றைப்போன்று மற்ற வரலாற்று நிகழ்ச்சிகளை மனதில் கொண்டு ஏற்றுக்கொள்ளத் தக்கதாயும், மனிதனுடைய அறிவாற்றலுக்கு இசைந்ததாயுமுள்ளவற்றை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

8) கடைசியாக, இயேசு சிலுவையில் அறையுண்ட சம்பவம், அவர் மீண்டும் உயிர் பெற்றெழுந்த சம்பவம் ஆகிய குறிப்பிட்ட நிகழ்ச்சிகளை ஆராயும்போது இதனை நாம் மனதிலிருத்திக் கொள்ள





வேண்டும். தங்களைக் கிறிஸ்தவர்கள் என்றழைத்துக் கொண்ட எல்லாப் பிரிவினராலும் இல்லாவிட்டால்கூட, பெரும்பான்மையான கிறிஸ்தவர்களால் ஏதோ ஒரு காரணத்தால் இயேசுவின் சிலுவை மரணம் ஏற்கனவே நம்பப்பட்டு வந்த காலத்தில்தான் சுவிசேஷங்கள் எழுதப்பட்டன. எனவேதான், (நிகழாமலேயே) மிகவும் பிரபலமாகி விட்ட சம்வங்களை வரலாற்றுப் புத்தகத்திலிருந்து அப்புறப்படுத்த முடியாது போய்விட்டது.

நாம் ஆராய எடுத்துக்கொண்டுள்ள பொருளின் முக்கியத் துவத்தைக் கருதி, இந்நூலில் அடங்கியுள்ள யாவற்றையும் மிகுந்த கவனத்துடனும் நடுநிலை நின்றும் ஆராயும்படி வாசகர்களை நான் உளப்பூர்வமாக வேண்டிக் கொள்கிறேன். அப்போதுதான் அவர்களால் சரியான முடிவுக்கு வர இயலும்.

மூன்றாவது பதிப்பிற்காக இந்நூல் அச்சுக்குப் போய்க் கொண்டிருக்கும் இவ்வேளையில், மேலே சொன்ன முகவுரையுடன் கீழ்க்கண்டவற்றையும் சேர்த்துக்கொள்ள விரும்புகிறேன்.

1939 ஆகஸ்டில் இரண்டாம் உலகப் பெரும் போர் தொடங்கும் முன்னர், இந்தியாவில் இயேசு கிறிஸ்துவின் கல்லறை என்ற தலைப்பில் நூறாயிரம் பிரதிகள் அச்சிட்டேன். பெரிய இலண்டனிலும், அதன் புறநகர்ப் பகுதிகளிலுமாக அவற்றில் 4000 பிரதிகள்கூட விநியோகிக்கப் பட்டிராது. அதற்குள் சூழ்நிலைகள் மாறிவிட்டதன் காரணமாக, போர் முடியுமட்டும் பிரதிகளை விநியோகிக்கும் வேலையை வேண்டுமென்றே தள்ளி வைத்தேன். போர் முடிந்து, நாகரீக உலகுக்கு சுதந்திரக் காற்றை மீண்டும் சுவாசிக்க வாய்ப்புக் கிட்டியபோது, இந்தியாவிலுள்ள காதியானி லிருந்து ஆறு முஸ்லிம் மார்க்கப் பிரச்சாரகர்கள் இலண்டனுக்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் யாவரும் இலண்டன் 63 மெல்றோஸ் வீதியில் அமைந்துள்ள ஃப்ஸ்ல் பள்ளிவாயிலில் என்னுடன் பணியாற்றுமாறு அமர்த்தப்பட்டனர். இந்தப் பிரச்சாரகர்களுடைய உதவியுடன் மேலே கூறிய விளம்பரப் பிரதிகளை விநியோகிப்பதற்கென ஒரு திட்டம் வகுத்தேன். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலுமுள்ள பலதரப்பட்ட மற்ற நகரங்களுக்கும் பிரதிகள் அஞ்சல் மூலமாக அனுப்பப்பட்டன. விளம்பரப் பிரதிகளை விநியோகித்ததுமல்லாமல் ‘வேர் டிட் ஜீஸஸ் டை’ என்ற புத்தகத்தையும் வெளியிட்டேன். விளம்பரப் பிரதியும் புத்தகமும் சேர்ந்து இலண்டனை, அதிலும் குறிப்பாகத் திருச்சபை அதிகார பீடத்தை ஒரு கலக்குக் கலக்கின. புதிய புத்தகத்தையும் விளம்பரப் பிரதிகளையும் அவர்கள் கடுமையானதாகக் கருதினார்கள். இலண்டன் பத்திரிகைகளில் பல இவ்விஷயத்தைக் குறித்து நீண்ட குறிப்புகள் எழுதின. ‘விம்பிள்டன்

பாரோ நியூஸ்' இயேசுவின் கல்லறை கண்டுபிடிக்கப்பட்டதைப் பற்றி 300 வார்த்தைகள் அடங்கிய கட்டுரையொன்றை வெளியிட்டது. இக்கட்டுரையில் ''விம்பிள்டன் உள்ளிட்ட மிகப்பரந்த நிலப்பரப்பில் நூறாயிரம் பிரதிகள் விநியோகிக்கப்பட்டுள்ள ஒரு விளம்பரத்தில் இமாம் ஷம்ஸ் அவர்கள் தேவையான உண்மை விவரங்களைச் சுருக்கமாக எடுத்துக் காட்டியுள்ளார்.'' [வி.பா. நியூஸ் பிப்ரவரி 22, 1946] என்று எழுதப்பட்டிருந்தது.

இக்கட்டுரை வாசகர்களிடமிருந்து விமர்சனங்களைக் கிளப்பி விட்டது. அப்பத்திரிகையின் ஆசிரியர், தமது கட்டுரையைத் தொடர்ந்து 1946 மார்ச் 1, 8, 29 ஆகிய நாளிட்ட இதழ்களில் நேயர்களின் கடிதங்களை, 'கல்லறையை ஏன் திறக்கக்கூடாது?', 'சிலுவை தரும் படிப்பினை', 'இயேசு எங்கு மரித்தார்?', 'இயேசுவின் கல்லறை' போன்ற இன்னும் பல தலைப்புகளில் வெளியிட்டார்.

திரு. எம்.ஜே. என்ற ஒரு நேயர், ''கடந்த வாரம் தங்கள் பத்திரிகையில் வெளியாகியிருந்த இமாம் ஷம்ஸ் என்ற ஒரு முஸ்லிமின் நம்பிக்கை – அதாவது இயேசு கிறிஸ்து சிலுவையில் மரணிக்கவில்லை என்ற நம்பிக்கை – சில கிறிஸ்தவர்களால்கூட ஏற்றுக் கொள்ளப்படும் ஒன்றாகும்'' என்று எழுதினார்.

ஜே. டி. டர்னர் இவ்வாறு எழுதினார்: ''உண்மையில் புதிய ஏற்பாட்டில் கூறப்பட்டுள்ளபடி சிலுவை மரணமும், உயிர்த்தெழுதலும் இல்லாவிட்டால் நன்கு நிர்மாணிக்கப்பட்டுள்ள கிறிஸ்தவ மதத்தின் அடிவாரமே அடித்துச் செல்லப்பட்டுவிடும் என்று எனக்குத் தோன்றுகிறது. அப்படியானால் திருச்சபை எங்கு நிலைத்து நிற்கும்?'' [1946 மார்ச் 13–ம் நாள் இதழ்].

'கல்லறையை ஏன் திறக்கக்கூடாது' என்ற கேள்விக்கு என்னுடைய பதில் இதுதான்: காஷ்மீர்வாசிகள் அக்கல்லறையை ஒரு தீர்க்கதரிசியினுடையதாக நம்பி வருவதால், 'கிறிஸ்தவ உலகம்' அதனைத் [தங்களுடையதென உரிமைகோரி] கடுமையாக வற்புறுத்தா விடில், அக்கல்லறையைத் திறப்பதற்கு அவர்கள் ஒருபோதும் சம்மதிக்க மாட்டார்கள். எது எவ்வாறாயினும் நான் எனது 'வேர் டிட் ஜீஸஸ் டை?' என்னும் இந்த நூலில் அக்கல்லறையைப் பற்றி விரிவாகவே ஆராய்ந்திருக்கிறேன். குறிப்பிட்ட கல்லறை தீர்க்கதரிசியாகிய இயேசுவைத் தவிர மற்றவருடையதுமல்ல என்பதை ஆதாரப்பூர்வமான சரித்திரச் சான்றுகளைக் கொண்டு நிரூபித்திருக்கிறேன்.

ஓக் ஹில் கல்லூரியின் முதல்நிலை ஆசானாகிய மறை திரு. ஜே. ஸ்டாபோர்டு ரைட்டு எம்.ஏ., 'இங்கிலாந்தில் முஸ்லிம்களின்





படையெடுப்பு' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். இக்கட்டுரை 'தி லைஃப் ஆஃப் ஃபெய்த்' என்னும் வாரப் பத்திரிகையில் வெளி வந்துள்ளது. அப்பத்திரிகையின் 15–5–46 இதழில் எனது பிரசுரத்தைப் பற்றியும், புத்தகத்தைப் பற்றியும் அவர் எழுதியுள்ளதாவது:

'ஒரு சில வாரங்களுக்கு முன்பு இந்தியர் ஒருவரிடமிருந்து ஒரு மாணவனுக்கு பிரசுரம் ஒன்று கிடைத்திருக்கின்றது. அது ஒரு கிறிஸ்தவப் பிரசுரமல்ல; முஸ்லிம் பிரசுரமாகும். ஆங்கிலேயர்களை மதம் மாற்றுவதற்காக வந்துள்ள முஸ்லிம் பிரச்சாரகர் குழுவுடைய போட்டோக்கள் இலண்டன் பத்திரிகைகளில் ஏற்கனவே வெளி வந்துள்ளன. அவர்கள் வேலை செய்யத் தொடங்கி விட்டனர் என்பதற்கு இதோ ஆதாரம் கிடைத்து விட்டது. அன்றிலிருந்து இதைப்போன்ற ஏராளமான சிறு பிரசுரங்கள் விநியோகிக்கப்பட்டுள்ளன.

வாக்களிக்கப்பட்ட மஸீஹ், ஹஸ்ரத் அஹ்மத் [அலை] [1835–1908] அவர்களின் உருவில் தோன்றி விட்டார்கள் என்பதே இந்தப் பிரசுரத்தின் வாதமாகும். காஷ்மீர் ஸ்ரீநகரிலுள்ள 'இயேசுவின் கல்லறை' என்று கூறப்படும் ஒரு கல்லறையின் புகைப்படம் இப்பிரசுரத்தில் இருந்தது. இயேசு சிலுவையில் மரணமடையவில்லை; அவர் இந்தியாவுக்குப் பயணம் சென்று அங்கேயே மரணமடைந்தார் என்பதற்கான ஆதாரங்களைப் பற்றிய ஒரு சிறு விளக்கமும் அதில் அடங்கியிருந்தது'.

"இலண்டன் பள்ளி வாயிலுக்கு ஒரு கடிதம் எழுதியதில் இன்னும் விரிவானதொரு புத்தகம் – வேர் டிட் ஜீஸஸ் டை? என்ற பெயருடையது – வந்து சேர்ந்தது. இந்நூல் 128 பக்கங்களைக் கொண்டது. இலண்டன் பள்ளிவாயிலின் இமாம் ஆகிய மவ்லவி ஜே.டி. ஷம்ஸ் அவர்களால் எழுதப்பெற்று அவர்களாலேயே பதிப்பிக்கப்பட்டது. இத்தகைய பிரச்சாரத்திற்குப் பொறுப்பேற்றுள்ள முஸ்லிம் பிரிவு அஹ்மதிய்யா இயக்கமேயாகும். இவ்வியக்கத்தைப் பற்றி மறைதிரு. ஏ.ஆர். பிட்வே எழுதியதோர் கட்டுரை சில மாதங்களுக்கு முன்னர் 'தி லைஃப் ஆஃப் ஃபெய்த்' இதழில் வெளியாகியிருந்தது. இக்கட்டுரையாசிரியர் கென்யாவில் மதப்பிரச்சாரகராக இருப்பதுடன் அஹ்மதிய்யா இயக்கப் பிரச்சாரகர்களில் ஒருவரைச் சந்தித்துமிருக்கிறார். இது திட்டவட்டமாக ஒரு பிரச்சார இயக்கமாகும். சில முஸ்லிம்கள் இதனைச் சமய விரோத மானதாகக் கருதினாலும், முஹம்மது நபியின் வாழ்விற்கும் வாக்கிற்கும் போதிய அளவு நெருங்கியதாகவே இவ்வியக்கம் இருக்கின்றது. எனவே முஹம்மது நபியின் மார்க்கத்தினுடைய முழுமையான பிரதிநிதிகளாகவே இவர்கள் எண்ணப்பட வேண்டும்".

"இப்புத்தகம் மிகுந்த கவனத்தோடும் ஆதாரத்தோடும் கிறிஸ்தவ மதத்தின் மீது ஏவப்பட்ட தாக்குதலேயாகும். இதில், இயேசு இந்தியாவுக்குச் சென்று அங்கேயே மரணமடைந்தார் என்ற கருத்து விரித்துரைக்கப்பட்டுள்ளது. உண்மையில் தாக்குதலுக்கு உள்ளாகியுள்ள கிறிஸ்தவ சமயத்தின் மூன்று முக்கியமான விஷயங்கள் – 1) கிறிஸ்துவின் மரணம் 2) உயிர்த்தெழுதல் 3) பரமேற்றம் ஆகியவைதான். இவை யாவற்றையும் இந்நூலில் அதன் ஆசிரியர் பொய்யென்று நிரூபிக்க வேண்டியவராகிறார். ஏனென்றால் இயேசு சிலுவையில் மயங்கிய நிலையிலிருந்து கல்லறையில் கிடந்து பின்னர் பழைய நிலையை அடைந்து, அங்கிருந்து, வெளியேறி அவரது சீஷர்களைச் சந்தித்தார். பின்னர் இந்தியாவுக்குத் தப்பியோடி இறுதியில் அங்கேயே மரித்தார் என்பதுதான் அவரது கொள்கையாகும். இத்தகைய கொள்கை கொண்ட முஸ்லிம்களின் படையெடுப்பை நம்நாடு இப்போது அனுபவித்துக் கொண்டிருப்பது – நாமெல்லாரும் கிறிஸ்தவர்கள் என்ற முறையில் – என்றுமழியாத அவமானமாகும். ஆனால் நம் பிரிட்டீஷாரின் சகிப்புத் தன்மையினால், இப்பிரச்சாரம் ஓரளவு பரவும் என்பது சாத்தியமே. அப்படியானால் அதனை எதிர்க்கத் தயாராக இருக்க வேண்டியதும் அவசியமே."

இலண்டனிலிருந்து வெளிவரும் சைகிக் நியூஸ் ஏப்ரல் 20, 1946 பத்திரிகை காஷ்மீர் ஸ்ரீநகரில் அமைந்துள்ள இயேசுவின் கல்லறைப் போட்டோவை வெளியிட்டு இந்த விளக்கத்தையும் தந்திருந்தது. இவ்விடத்தில் – காஷ்மீர், ஸ்ரீநகர், கான்யார் வீதியில் இயேசுவின் கல்லறை என முஸ்லிம்களால் நம்பப்படும் ஒரு கல்லறை உள்ளது. இது பற்றிய ஆராய்ச்சியை அவர்கள் வரவேற்கிறார்கள்.

இயேசுவின் மரணம் சம்பந்தமாக அஹ்மதிய்யா இயக்கத்தவர் காட்டும் அத்தாட்சியைப் பற்றி அப்பத்திரிகை ஒரு விளக்கம் வெளியிட்டிருந்தது. அக்கட்டுரையை எழுதியவர் கீழ்க்கண்ட வார்த்தைகளோடு தொடங்கியிருந்தார்.

"2000 ஆண்டுகளாகத் திருச்சபையால் போதிக்கப்படுவது போன்று, கல்வாரியில் இயேசு மரணமடையவில்லை என்ற வாதத்தைப் பற்றி ஏதுமறியாதிருக்கக்கூடிய அநேக ஆன்மீகவாதிகளின் ஆர்வத்தைத் தூண்டும் என்ற நம்பிக்கையிலேயே இந்தப் படத்தையும், இதைப்பற்றிய விவரத்தையும் நாங்கள் பிரசுரித்துள்ளோம்."

இவ்விஷயம் வரலாற்று உண்மைகள் நிறைந்தது. ஆயினும் நாம் இதில் எவ்விதத்திலும் பங்கெடுத்துக் கொள்வதில்லை. வாசகர்கள் கீழ்க்கண்ட விவரத்தைத் தாங்களே சிந்தித்துப் பார்ப்பார்களாக. வேர் டிட்





ஜீஸஸ் டை? என்ற எனது நூலில் நான் வாதித்துள்ள விஷயங்களைத் திரட்டிச் சுருக்கமாகக் கூறிய பின்னர், அப்பத்திரிகை அந்தக் கட்டுரையை இவ்வாறு முடித்திருந்தது:

"தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களுக்கு ஓர் அரிய சந்தர்ப்பம் இதோ இருக்கிறது."

சைகிக் நியூஸ், (மே 11, 1946) இதழில் அதன் ஆசிரியர் இவ்வாறு எழுதினார். "இயேசுவின் கல்லறையாக நம்பப்படும் காஷ்மீர் ஸ்ரீநகரிலுள்ள ஒரு கல்லறையைப் பற்றி நாம் சமீபத்தில் வெளியிட்டதன் காரணமாக, வாசக நேயர்களிடமிருந்து ஏராளமான கடிதங்கள் வந்திருந்தன. அவற்றுள் சில முஸ்லிம் பிரிவினரின் கொள்கையை ஏற்றுக் கொண்டும், மற்றும் சில அதனை எதிர்த்தும் இருந்தன. தேர்ந்தெடுத்த சில கடிதங்களை இங்கு படைக்கின்றோம்."

அத்தகைய இரண்டு கடிதங்களிலுள்ள கருத்தை நான் கீழே தந்திருக்கிறேன்.

தமது நீண்ட கடிதத்தில் நியூகாஸில் – ஹீட்டனைச் சேர்ந்த ஜார்ஜ் ரல்ஃப் எழுதுவதாவது: "இயேசுநாதர் சிலுவையில் மரிக்காமல் பெர்ஷியா, ஆப்கானிஸ்தான் வழியாக காஷ்மீருக்குப் பயணம் செய்து, இறுதியில் ஸ்ரீநகரில் மரணமடைந்தார்; அங்கேயே அவரது உடல் அடக்கம் செய்யப்பட்டுள்ளது என்ற முஸ்லிம் பிரிவு ஒன்றின் வாதம் பற்றிய உங்களுடைய கட்டுரை எனக்குப் பெரிதும் உற்சாமளித்தது. பிரபலமான ஆன்மீக வழிகாட்டி ஒருவரால் பல்லாண்டுகளுக்கு முன்னர் நிகழ்த்தப்பட்ட ஓர் அற்புதமான சொற்பொழிவு இந்தக் கொள்கைக்கு ஒத்ததாக அமைந்திருந்தது. உண்மையை அடிப்படையாகக் கொள்ளாத மத சம்பந்தமான பொய்க்கதைகளை உண்மையென்று ஏற்றுக்கொள்ளாமல் அவற்றை விலக்கித் தள்ளும் காலம் இப்போது வந்திருப்பதாக நான் கருதுகிறேன். ஆன்மீகவாதி அந்தக் கேள்வியை நாம் அவரிடம் ஒருபோதும் கேட்கமாட்டோம் என்று நம்பியிருப்பதாகக் கூறினார். ஆனால் நாம் அந்தக் கேள்வியைக் கேட்டு விட்டதாலும் அவர் நம்மிடம் எப்போதும் உண்மையையே கூறுவதாக வாக்களித்திருந்ததாலும் அவர் நம்மிடம் உண்மையான கதையையே கூறுவார் – வைதீகச் சார்புடைய அநேக மக்களுக்கு அது உவப்பாக இல்லாமலிருக்கும் என்று அவர் பயந்தபோதிலுங்கூட.

"நமக்கிடையே ஸ்மித் என்ற பெயர் எவ்வளவு சாதாரணமானதோ, இதேவிதமே அக்காலத்தில் இயேசு என்ற பெயர் சாதாரணமாக நிலவியது என்று கூறித் தம் உரையை அவர் தொடங்கினார்."

"இது குறித்து எனது விரிவுரை என்னவெனில் இயேசுநாதர் தம்முடைய காலத்தில் **இயேசு (Jesus)** என்ற பெயரால் அறிமுகமாகி யிருக்கவில்லை. ஆனால் **யோசுவா (Joshua)** என்ற பெயராலேயே அழைக்கப்பட்டார். வெகு காலத்திற்குப் பின்னரே, சுவிசேஷ சம்பவங்கள் தொகுத்தெழுதப்பட்டபோது, தொகுப்பாளர்கள் அப்பெயரை கிரேக்க மொழியில் **யாஸஸ் (Yayzous)** என்று மாற்றுவதென முடிவு செய்தனர். [இதுவே ஆங்கிலத்தில் ஜீஸஸ் (Jesus) என்றாகியது.] ஏனெனில் யோசுவா என்ற பெயரில் ஒரு தீர்க்கதரிசி இருந்ததாலும் தங்கள் தலைவரை இரண்டாம் யோசுவா என அழைத்தால் அது குழப்பத்தை ஏற்படுத்தும் என அவர்கள் எண்ணியதாலும் இம்முடிவுக்கு வந்தனர். இவ்விஷயத்தில் அவர்கள் செய்தது நியாயமென்றே நான் நினைக்கிறேன்."

"அந்தப் பிரச்சாரகர் மேலும் கூறியதாவது: ஒரு கிளர்ச்சிக்கார உயர் அதிகாரி, ஒரு கள்ளன், யாரோ ஒரு நபர், [என்னுடைய குறிப்புக்கள் வேறொரு இடத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளதால் நான் ஞாபகத்திலிருந்தே இதனைக் குறிப்பிடுகிறேன்.] அத்துடன் பயணம் செய்யும் ஒரு போதகர் ஆகிய நான்கு வித்தியாசமான நபர்களைப் பற்றிய விசாரணையையும் அவர்களது மரணத்தையும் பற்றிய ஒரு 'திரட்டு' தான் சிலுவையில் தொங்கி துன்பம் அனுபவித்த கதையாகும்."

"தற்செயலாக எல்லாருமே யோசுவா என்னும் பெயரை கொண்டிருக்கும்படி நேர்ந்தது. பிற்காலத்திய வரலாற்றாசிரியர்களுக்கு இது ஒரு பெருங்குழப்பமாய்ப் போய் விட்டது. இவர்களுடைய விசாரணையையும், மரணத்தையும் ஒன்றுடன் ஒன்று சேர்த்துக் குழப்பி, அதிலிருந்து ஒரு கதையை உருவாக்கியிருக்கிறார்கள். உண்மையில் இயேசுநாதர் முதிய வயது வரை வாழ்ந்திருந்து பிறநாடுகளுக்கும் பயணம் செய்தார். ஆனால் இப்படிக் கூறுவதானது, தாம் பெரும் நேசத்துடனும், மரியாதையுடனும் புகழ்ந்து ஏற்றும் பேரன்புக்குரிய தலைவரின் பெருமைக்கு எவ்விதக் குந்தகமும் ஏற்படுத்தாது என்றார் அந்தப் பிரச்சாரகர்.

இது பற்றி என்னுடைய இறுதியான வார்த்தைகள் என்னவெனில், சிலுவை இரட்சகர் கதை 5–6 ஆம் நூற்றாண்டு 7 ஆம் நூற்றாண்டு கிறிஸ்தவ திருச்சபையைச் சேர்ந்த எழுத்தாளர்களால் திரித்தெழுதப்பட்ட சுத்தமான புனைக்கதையாகும் என்பதே. அக்காலத்திய மக்கள் தங்கள் தலைவரின் உருவத்தைக் கொண்ட சிலுவைகளை அணியும்படி கேட்டுக் கொள்ளப்பட்டபோது அவர்கள் மிகுந்த கோபமடைந்ததுடன், இந்தக் கருத்தைக் கடுமையாக எதிர்த்து ஒதுக்கினர். ஆனால் பயம், பரிதாப உணர்வு மரியாதை காரணமான அச்ச உணர்ச்சி, போன்றவற்றை





மக்களிடையே உண்டாக்குவது தங்களுடைய காரியத்துக்குப் பொருத்த முடையதாதலால் கிறிஸ்தவ சமய அதிகார பீடம் மேற்கண்ட காரியத்தைச் செய்யுமாறு வற்புறுத்தியது. இவ்விதமாக பெரிய வெள்ளி **(Good Friday)** என்றழைக்கப்படும் வைதீகத்தின் கரும்புள்ளி இவ்வுலகின்மீது குத்தப்பட்டது. தம்முடைய மரணத்தின் மூலம் விசுவாசம் கொண்ட கிறிஸ்தவர்கள் அனைவருடைய பாவத்தையும் தம் தோள்களின்மீது இயேசு ஏற்றுக்கொண்டதாகவும் இவ்விதம் தம்மால் காக்கப்படாத மற்ற யாவரும் நேரிடையாக நரகத்தில் விழுவார்கள் என்றும் கருதக் காரணமான இரட்சகரின் கதையும் வலுக்கட்டாயமாக இவ்வுலகின்மீது திணிக்கப்பட்டது.

திருமதி. என்.ஈ. கிளார்க், ஹீதராஃபட், **N.W.II** அவர்கள் கூறியதாவது: "இயேசுவின் கல்லறை பற்றிய கட்டுரைக்கு எழுத்துச் சான்று – இந்தியா, பர்மா, இலங்கை சம்பந்தமான 'முராரீஸ் ஹேண்ட் புக்' என்ற நூல் – பதேஃபூரில் உள்ள பள்ளிவாயில் ஒன்றில் செதுக்கப்பட்டுள்ள **I.S.A.** [ஜீஸஸ்] என்ற எழுத்துக்களைச் சுட்டிக்காட்டுகிறது. இதைப் போன்று செதுக்கப்பட்டுள்ள பிற எழுத்துச் சான்றுகளை ஆக்ராவில் அச்சிடப்பட்டதும் கொன் எல்லிஸ் எழுதியதுமான மிஃப்தாஹுல் தவாரிக் என்னும் நூலில் காணலாம். 'பெர்ஷியாவின் அதிபதி' என்ற நூலில் இயேசு இந்தியாவுக்குப் பயணம் செய்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

### சுதந்திரச் சிந்தனையாளர்கள்

'ஃப்ரீ திங்கர்ஸ்' என்ற பிரபல இலண்டன் பத்திரிகையில் சுதந்திரச் சிந்தனையாளர்களில் 1946 ஜூன் 2 ஞாயிறு இதழில் கிறிஸ்தவ அத்தாட்சிகள் என்ற தலைப்பில் தரப்பட்டுள்ள ஒரு கட்டுரையிலிருந்து சில பகுதிகளை இங்கு எடுத்துத் தருகிறேன்.

"காக்ஸ்டன் ஹாலில் நடைபெற்ற கிறிஸ்தவ அத்தாட்சிக் கழகத்தின் **(Christian Evidence Society)** வருடாந்திரக் கூட்டத்தில், இலண்டன் பேராயர் நிகழ்த்திய தலைமையுரையே இங்கு முக்கியக் கருப்பொருளாகும்."

ஏறக்குறைய ஐம்பது பேர் – பெரும்பாலும் வயதானவர்கள். ஒரு ஆணுக்கு ஐந்து பெண்கள் என்ற விகிதத்தில் – கூட்டத்திற்கு வந்திருந்தனர். கிறிஸ்தவ மதம் தன்னுடைய பிடிப்பை வேகமாக இழந்து வருகிறது. குறிப்பாக ஆண்களே அதன் பிணைப்பை விட்டு வெளியேறுவதில் முதலாவதாக நிற்கிறார்கள் என்ற உண்மைக்கு இது ஓர் தெளிவான ஆதாரமாக அமைகின்றது.

"களத்தைக் கைப்பற்றியுள்ளவர்கள் நாமே என்று எண்ணி வருவது நமது வழக்கமாக இருந்து வருகிறது. மதத்தைப் பரப்புவதற்கு முயற்சி செய்வோர் நாம் மட்டுமல்ல என்பதை இப்போது நாம் உணர

வேண்டியவர்களாயிருக்கிறோம். நமது நம்பிக்கைகள் தாக்கப்படுவதோடு மட்டுமல்ல; நமக்கு எதிராகப் புதியதோர் மதமே வந்து நிற்கிறது.”

வளமற்ற கெட்ட அறிகுறிகளடங்கிய எதிர்காலத்தை இவ்வார்த்தைகள் சுட்டிக்காட்டி விட்டன. எதற்காக இந்த வார்த்தைகள்? இஸ்லாத்தின் பட்டாளம் நமது புனிதத் தலங்களிலே படையெடுக்க ஆயத்தமாயிருந்ததா? புத்த மதத்தின் செல்வாக்கு வெல்ல முடியாத அளவுக்கு வளர்ந்திருந்ததா? ஒருபோதுமில்லை. ஒரு ஸ்டேஷனில் கீழை நாட்டவர் சிலர் ஒரு விளம்பரப் பிரதியை விநியோகித்துக் கொண்டிருந்ததை கனம் பேராயர் பார்த்துவிட்ட காரணத்தாலேயே இந்த முக்கியமான எச்சரிக்கை பிறந்திருக்கிறது. அவ்விளம்பரப் பிரதியில் ஓர் இந்தியக் கட்டடத்தின் படம் காட்டப்பட்டிருந்தது. அக்கட்டிடத்தின் அடியிலேயே இயேசு கிறிஸ்துவின் சடலம் அடக்கப்பட்டுள்ளதாக நம்பப்படுகிறது. பேராயர் விநோதமான முறையில் மேலும் கூறியதாவது: “கல்லறை திறக்கப்பட்டால், அங்கு அவரது சடலம் காணப்படும் என்ற ஊகம் விஞ்ஞான அடிப்படையற்றது.”

இந்தக் கூட்டத்திற்குச் சென்று வந்த பின்னர், மேலே குறிப்பிட்ட புத்தகத்தை நான் பெற்றுக்கொண்டேன். வேர் டிட் ஜீஸஸ் டை? என்பது அதன் பெயர். அதன் ஆசிரியர் ஜே.டி. ஷம்ஸ் ஆவார். விம்பிள்டனிலுள்ள பள்ளிவாயிலிலிருந்து அந்நூல் வெளிவந்திருக்கிறது. வரலாற்றுப் பூர்வமான இயேசுவை மறக்காதவர்களுக்கு இது குறிப்பிடத்தக்க அளவு உற்சாகம் தரத்தக்கது. இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்றும், சிலுவை சம்பவத்திற்குப் பின்னர், அவர் பாலஸ்தீனத்தைவிட்டு நீங்கினார் என்றும் சொல்வது இந்நூலின் கருத்தாகும். தோமஸ் ஹென்ரி ஹக்ஸ்லியின் கருத்தும் இதுவே. ஜார்ஜ் மூர் என்பார் இயற்றிய ‘தி புக் கெரித்’ என்னும் நூலில் இக்கருத்து புனை கதை வடிவில் விவரிக்கப்பட்டுள்ளது.

### எனது முடிவான பிரசுரம்

1946 மே மாதம் கீழ்க்கண்ட பிரசுரத்தை ஆயிரக்கணக்கில் வெயிளிட்டேன். திருச்சபை அதிகார பீடத்தை சேர்ந்தவர்களுக்கு இவை தபால் மூலமாக அனுப்பப்பட்டதுடன், பெரிய இலண்டனில் ஆயிரக் கணக்கானோருக்கு நேரிடையாகவும் விநியோகிக்கப்பட்டது.

## “திருச்சபைக்கு ஒரு சவால்”

**☛ இயேசு இயற்கையாக மரணித்தார்**

**☛ இந்தியாவில் அவரது கல்லறை காணப்படுகிறது**

இப்படி ஒரு பிரசுரத்தின் நூறாயிரம் பிரதிகள் சமீப காலத்தில் இலண்டனில் விநியோகிக்கப்பட்டது. இயேசு சிலுவையில் மரிக்காமல்,





மரணத்திலிருந்து தப்பி, இந்தியாவுக்குச் சென்று அங்கேயே இயற்கை மரணமடைந்தார்; இந்தியாவில் பஞ்சாப் – காதியானைச் சேர்ந்த ஹஸ்ரத் அஹ்மது நபி [அலை] அவர்களால் இந்தியாவில் இயேசுவின் கல்லறை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இயேசுவின் இரண்டாவது வருகை பற்றி தீர்க்கதரிசனம் அன்னாரின் வருகையால் நிறைவேற்றப்பட்டு விட்டது என்பதே அப்பிரசுரத்தின் சுருக்கமாகும்.

சில செய்திப் பத்திரிகைகள் இப்பிரசுரத்தைப் பற்றிக் குறிப்பிட்ட அளவு விவரம் தந்திருந்ததுடன் வாசக நேயர்களின் உற்சாகம் ததும்பும் கடிதங்களையும் வெளியிட்டிருந்தன. ஒரு பத்திரிகை கல்லறையின் புகைப்படத்தையும் வெளியிட்டிருந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக என்னிடம் ஒரு கடிதக் குவியலே சேர்ந்து விட்டது. அவற்றை அனுப்பி வைத்தவர்கள் பெருமளவு ஆர்வம் காட்டியதோடு, அதிகப்படியான விவரங்களையும் கேட்டிருந்தார்கள். அத்தகையோருக்கு “வேர் டிட் ஜீஸஸ் டை?” என்ற எனது நூல் அனுப்பி வைக்கப்பட்டது. அந்தப் புத்தகத்தில் இவ்விஷயத்தை விரிவாக ஆராய்ந்து, நடுநிலை தவறாத ஒவ்வொரு வாசக நேயரும் மனநிறைவு கொள்ளும்படி, இயேசு சிலுவையில் மரிக்காமல் இறைவனின் மற்றத் தீர்க்கத்தரிசிகளைப் போன்றே இயற்கை மரணமடைந்தார் என்று நிரூபித்திருக்கிறேன்.

வாசகர்களில் பலர் இவ்விஷயம் மிகவும் பலனுடையதென்று கருதி அதிகப்படியான விவரங்களை வேண்டியிருக்கிறார்கள். ஒருவர் எழுதுவதாவது: “இவ்விவரத்தில் காணப்படும் விஷயம் முற்றிலும் நடக்கக்கூடியதென்றே தோன்றுகின்றது.”

மற்றொருவர் எழுதுவதாவது: “வைதீகப் பற்றற்ற கிறிஸ்தவன் என்ற முறையிலும் உண்மையைத் தேடிக் கண்டுகொள்ள விரும்புபவன் என்ற முறையிலும் உங்களுடைய கருத்து என்னைப் பெரிதும் கவருகின்றது. ஏனெனில் அது என்னுடைய சுயநம்பிக்கையையே ஆதரிக்கின்றது....”

என்னுடைய புத்தகத்தைப் படித்தவர்களில் அநேகர் அப்புத்தகம் ஆர்வத்தைத் தூண்டக்கூடியதாகவும், மன நிறைவைத்தரக்கூடியதாகவும் அமைந்திருக்கக் கண்டார்கள். எடுத்துக்காட்டாக, மேலும் சில பிரசுரங்கள் கேட்டிருந்த ஒருவர் இவ்வாறு எழுதுகிறார்:

“இது மிகுந்த மனநிறைவைத் தருகிறது. ஆகவே நான் இதனை உண்மையென்று நம்பி, இஸ்லாத்தைப் பின்பற்றியவனாக இருப்பதையே விரும்புகிறேன்.”

வேறு சிலர் அதிலும் குறிப்பாக ரோமன் கத்தோலிக்கர்கள் அதிகப்படியான விவரங்களைத் தேடிப் பெறுவதற்குப் பதிலாக, எழுதுவதாவது:

1. இக்கண்டுபிடிப்பு அவமானமும் மோசடியுமாகும்.
2. இது, தேவனின் அருள்வாக்கான வேதாகமத்தின்மீது ஏவப்பட்ட நேர்மையற்ற தாக்குதல்.
3. இயேசு கிறிஸ்து உயிருடன் இருக்கிறார்.
4. அவர் வாழ்கிறார் – காக்கும் பொருட்டே.

ரோமன் கத்தோலிக்கர் ஒருவர் எழுதியதாவது:

"தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ளும் ஒரு கொள்கை வெறியனாலோ, அரைகுறை போலி அறிஞனாலோ நீங்கள் முழுக்க முழுக்க ஏமாற்றப்பட்டிருக்கிறீர்கள். இந்த நாட்டிலும் எங்களுக்கு ஏற்றார்போல் பெயர் சூட்டிக் கொண்டு இத்தகைய போலி ஆசாமிகள் இருக்கிறார்கள் என்று நான் உறுதி கூறுகிறேன்."

பிரசுரங்களை விநியோகித்துக் கொண்டிருந்தவர்களிடமிருந்து அவற்றைப் பிடுங்கிக் கிழித்தெறிய முயலும் அளவுக்கு திருச்சபை குருமார்கள் முரட்டுத்தனமாகவும், வெறி கொண்டவர்களாகவும் இருந்தார்கள். மேலும் சிலர் அவற்றைப் பெற்றுக் கொண்ட பின்னர் கிழித்தெறிந்தனர். இவர்களின் நடவடிக்கைகள் ஆக்கப்பூர்வமானதல்ல என்பதோடு, இத்தகைய போக்கினால் அவர்களுக்கு எப்பயனுமில்லை என்றும் நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இயேசு கிறிஸ்துவே அவர்களது எதிரிகளான வேதபாரகர்களாலும், பரிசேயர்களாலும் இதை விட இழிவான முறையில் பழித்துரைக்கப்பட்டிருக்கிறார் என்பதையும் அவர்கள் அறிவார்களாக.

மத விஷயங்களில் நாம் ஒருவருக்கொருவர் பகையுணர்ச்சி கொண்டிருக்கக்கூடாது. முஸ்லிம்களாகிய நாங்கள், இயேசு கிறிஸ்துவை இறைவனின் உண்மையான தீர்க்கதரிசி [நபி] என்றும், மற்றெல்லாத் தீர்க்கதரிசிகளையும் போன்று அவரும் அவரது எதிரிகளால் துன்பத்திற் குள்ளாக்கப்பட்டார் என்றும், சபிக்கப்பட்ட கேவலமான மரணத்தை அவருக்குத் தரவேண்டுமென்ற எதிரிகளின் நோக்கம் நிறைவேறவில்லை என்றும் நம்புகிறோம். உயிர்த்தெழுதல், பரமேற்றம், மனித குலத்தைக் காக்கும்பொருட்டு அவர் வானத்தில் உயிருடன் இருந்து கொண்டிருக்கிறார் என்ற வாதம் இவையாவும் பொய்க்கருத்துக்களாகும். நபிகள் நாயகம் முஹம்மது [ஸல்] அவர்கள் பரிபூரணமான நியாயப் பிரமாணத்தை அருளப் பெற்ற இறைவனின் உண்மையான தீர்க்கதரிசியாவார்கள். மற்ற வேத நூற்களிலே காணப்பெறும் எல்லா நற்கருத்துக்களும் இஸ்லாத்தின் போதனையில் ஒருமித்துக் காணப்படுகின்றன என்றும் நாங்கள் நம்புகிறோம்.

எந்த பேராயராயினும் அல்லது மத குருவாயினும் அல்லது திருச்சபை பீடத்தைச் சேர்ந்த மற்ற எவராயினும், வேறுவிதமாகக்





கருதுவாரானால் அவர் முன்வந்து வேர் டிட் ஜீஸஸ் டை? என்ற என்னுடைய வாதங்களை மறுக்கட்டும். என்னுடைய வாதத்தை நிரூபித்துக் காட்ட நான் எப்போதும் ஆயத்தமாயிருக்கிறேன். இவ்விஷயத்தில் அக்கறை காட்டி நடுநிலை நிற்கக்கூடிய ஏதாவதொரு சங்கம் ஏற்பாடு செய்யுமானால், இவ்விஷயத்தை பொதுமக்கள் மத்தியில் வைத்து வாதிடவும் தயாராக இருக்கிறேன்.

இது திருச்சபையினருக்கு நான் விடுக்கும் சவாலாகும்.

இறுதியாக, குருட்டுத்தனமாக எதையும் பின்பற்றாமலும், எவ்விதத் தப்பெண்ணத்திற்கும் இடம் கொடாமலும் அறிவு – ஆராய்ச்சி ஆகியவற்றின் துணைகொண்டு ஒவ்வொரு விஷயத்தையும் சோதித்து அறியும் ஆங்கில மகனுக்கு எனது உளமார்ந்த பாராட்டைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். முடிவில் மன அமைதியையும் சமாதானத்தை யும் அனுபவிப்பவர்கள் அவர்களே.

கராச்சி பல்கலைக்கழக உளநூல் துறைத் தலைவரான பேராசிரியர் குவாஸி எம். அஸ்லம் எம்.ஏ. அவர்கள் எனது நூலுக்கு எழுதிய மதிப்புரையின் கடைசிப் பாகத்தை இங்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

"மவ்லனான ஷம்ஸ் அவர்கள் முக்கியம் வாய்ந்த இனிய நூலொன்றை இயற்றியுள்ளார்கள். இந்நூல் இஸ்லாத்தின் வளர்ச்சிக்கான முயற்சிகளின் வரலாற்றில் ஒரு மைல் கல்லாக நிற்கும் தகுதி பெற்றது. மேலை நாடுகளில் அஹ்மதிகளின் இம்முயற்சிகள் பெருவெற்றி தரும் முறையில் அமைந்துள்ளன." [தி சன்ரைஸ் ஆக. 3, 1946]

மேல்நாடுகளில் நமது பிரச்சாரகர்கள் மேற்சொன்ன கருத்துக்களை எல்லா இடங்களிலும் பரப்பி வருவதால், மதிப்புரையில் தெரிவிக்கப்பட்டுள்ள நம்பிக்கை இறையருளால் உண்மையாகிக் கொண்டிருக்கிறது. இப்புத்தகத்தின் டச்சு மொழிபெயர்ப்பு 1959ல் நெதர்லாந்தில் என். குலூவர் டீவன்டர் அவர்களால் பதிப்பிக்கப்பட்டது. 1958ல் மலையான மொழிபெயர்ப்பு வெளி வந்துள்ளது.★

ஜெர்மானிய மொழியில் மொழி பெயர்ப்பு வேலை தற்போது நடந்து கொண்டிருக்கிறது. குறுகிய காலத்தில் அது மக்களுக்குக் கிடைக்கும்.

ஏக தெய்வ வழிபாட்டைக் பரப்புவதற்காக அனுப்பப்பட்ட ஒரு மனிதரை வணங்கிவரும் நம் கிறிஸ்தவ சகோதரர்களின் பாவங்களை, எல்லாம் வல்ல இறைவன் நிவர்த்தி செய்யும்படி நாம் அவனிடம் வேண்டுதல் புரிவோம்.

**ஜே.டி. ஷம்ஸ்**

***1959***

★ 1970-ல் இந்நூலின் தமிழாக்கம் முதன்முதலில் வெளியிடப்பட்டது. (பதிப்பகத்தார்)

# இயேசு மரித்தது எங்கே?

## அத்தியாம் - 1

## சுவிசேஷங்கள் காட்டும் அத்தாட்சிகள்

### 1. இயேசுவின் பிரார்த்தனை

இயேசு தன்னை மேசியா என்று அறிக்கையிட்டபோது, அவர் தமது சொந்தப் பாதுகாப்புக்கு வேண்டிய எல்லா முன்னேற்பாடுகளையும் செய்து கொண்டார். ஒருமுறை, அவர் தமது சீஷர்களைப் பார்த்து, தாமே கிறிஸ்துவாகிய இயேசு என்று எவருக்கும் சொல்லக்கூடாதென்று கட்டளையிட்டார்.[1] மற்றொரு முறை, அவரது விரோதிகள் ஒன்றுசேர்ந்து அவரைக் கொலை செய்ய ஆலோசித்தபோது, அவர் பகிரங்கமாக யூதர்களுக்கு மத்தியில் சஞ்சரிக்காமல், வனாந்தரத்துக்குச் சமீபத்திலுள்ள ஒரு ஊருக்குச் சென்றுவிட்டார்.[2] அவர்களை விட்டு அவர் மறைந்தும் இருந்தார்.[3] அவரது நடவடிக்கைகளை பலவந்தமாக நிறுத்தி விடவும் முடியுமானால் அவரைக் கொன்று போடவும், அவரது விரோதிகள் முடிவு செய்திருக்கிறார்கள் என்பதை அவர் அறிந்த போது, இயேசு தம்முடைய சீஷர்களோடு தங்களுக்குப் பழக்கமான மறைவிடத்திற்குப் போய் விட்டார்.[4] பின்னர் இறை அறிவிப்பின் மூலமோ அல்லது திடச்சித்தமில்லாத விசுவாசம் வைத்திருந்த யூதாஸ் அந்த நேரத்தில் அவருடன் வராததாலோ, யூதாஸால் தாம் கைதுசெய்யப் படுவோம் என்பதையும் வெகு விரைவில் அறிந்து கொண்டார். அப்போது எல்லாம் வல்ல இறைவனின் முன்னிலையில், தமது நெற்றியைப் பதித்து மிகுந்த பணிவோடு பிரார்த்திப்பதைத் தவிர தப்பிச் செல்லக்கூடிய வேறு வழி ஒன்றும் அவருக்குத் தெரியவில்லை. இறைவன் ஒருவன்தான் அவரை மரணத்தின் கொடிய பிடியிலிருந்து தப்பச்செய்து, அவரது விரோதிகளின் திட்டங்களை முறியடிக்க இயலும்.





மத்தேயு 26, மாற்கு 14, லூக்கா 22 ஆகியவற்றில் கொடுக்கப் பட்டுள்ள வசனங்களிலிருந்து, இயேசு தமது சீஷர்கள் சிலரோடு கெத்சேமெனேக்குச் சென்று, அவர்களை பிரார்த்தனை புரியுமாறு ஏவினார் என்றும், ஆனால் அவர்களோ தூங்கிவிட்டார்கள் என்றும், அவர் அவர்களை இரண்டு முறை எழுப்பியும் வெற்றி அடையவில்லை என்றும் தெரிகிறது.

அவரே மிகுந்த பணிவோடு “அப்பா, பிதாவே எல்லாம் உம்மாலே கூடும். இந்தப் பாத்திரத்தை என்னிடத்திலிருந்து எடுத்துப்போடும். ஆகிலும் என் சித்தத்தின் படியல்ல. உம்முடைய சித்தத்தின்படியே ஆகக் கடவது” என்று சொல்லிப் பிரார்த்தித்தார்.[5]

இவ்விதமாக, இரவின் பெரும் பகுதியைப் பக்தி சிரத்தையுடன் பிரார்த்திப்பதிலேயே அவர் செலவிட்டார். பரலோகத்திலிருந்து ஒரு தூதன் தோன்றவே, தமது பிரார்த்தனை ஒப்புக்கொள்ளப்படுவதற்கு அதனையே அடையாளமாகக் கொண்டு, இன்னும் ஊக்கத்துடன் பிரார்த்தித்தார்.

“அவருடைய வேர்வை இரத்தத்தின் பெருந்துளிகளாய்த் தரையிலே விழுந்தது.”[6]

மரணத்திலிருந்து தாம் காப்பாற்றப்பட வேண்டும் என்று இயேசு பிரார்த்தித்தது, இறைவனுடைய பாதையில் தம்முடைய வாழ்க்கையைத் தத்தம் செய்வதற்கு அவர் பயந்து விட்டார் என்பதற்காக அல்ல. அவருடைய எதிரிகளின் சித்தத்திற்கு எதிராக, இறை தூதரைப் பற்றிய இறைவனின் சித்தம் நிறைவேற்றப்பட வேண்டும் என்பதற்காகத்தான். இதுவே இயேசு பிரார்த்தித்ததின் கருத்தாகும். “என்னுடைய சித்தத்தின் படியல்ல. உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது” என்று இயேசு கூறுவதன் பொருளும் இதுதான் என்று நான் கருதுகிறேன்.

சிலுவையில் அவர் மரிக்க வேண்டுமென்பது இறைவனுடைய சித்தம் என்று இயேசு அறிந்திருந்தால், “எல்லாம் உம்மாலே கூடும். இந்தப் பாத்திரத்தை (அதாவது அவர் குடிக்குமாறு அவரது எதிரிகள் அவருடைய உதடு வரைக்கும் உயர்த்திப் பிடித்திருந்த மரணப்

பாத்திரத்தை) என்னிடமிருந்து எடுத்துப்போடும் என்று ஒருபோதும் பிரார்த்தனை செய்திருக்கமாட்டார்.

## *2. மரணப் பாத்திரம் அகற்றப்பட்டது*

மேலே கூறப்பட்ட இயேசுவின் பிரார்த்தனை இறைவனால் கேட்கப்பட்டு ஒப்புக் கொள்ளப்பட்டது என்று நாம் நம்புகிறோம். நமது நம்பிக்கைக்கு கீழ்க்கண்டவையே ஆதாரங்கள்.

1. "பிதாவே நீர் எனக்கு செவி கொடுத்த படியினால் ஸ்தோத்திரிக்கிறேன். நீர் எப்பொழுதும் எனக்குச் செவிக் கொடுக்கிறீர் என்று நான் அறிந்திருக்கிறேன்" என்று இயேசுவே, தம்முடைய பிரார்த்தனையை இறைவன் கேட்டுக் கொண்டதாகக் கூறுகிறார். மற்றவர்களையும் பிரார்த்தனை செய்யும்படிப் பணிப்பதோடு, இறைவன் அவர்களுடைய பிரார்த்தனைக்கும் பதிலளிக்கிறான் என்று கூறுகிறார்.[8] "உங்களில் எந்த மனுஷனானாலும் தன்னிடத்தில் அப்பத்தை கேட்கிற தனது மகனுக்குக் கல்லைக் கொடுப்பானா? மீனைக் கேட்டால் அவனுக்குப் பாம்பைக் கொடுப்பானா?"[9] என்று அவர் மேலும் கூறுகிறார். சிலுவை தண்டனையின் மூலம் மரணம் விளையக் கூடுமென்ற பயம் சூழ்ந்துள்ள முக்கிய நேரத்தில், மிக்க பக்தி சிரத்தையோடும் உண்மையோடும் பெரிய துன்பத்தில் சிக்கிய இயேசுவுடைய பிரார்த்தனையே புறக்கணிக்கப்பட்டால், தமது சீஷர்களைப் பார்த்து அவர்களின் தேவைகளை இறைவனிடம் பிரார்த்திக்கவேண்டுமென்று கூறிய இயேசுவின் கட்டளைக்கும், அவர்களுடைய பிரார்த்தனை களுக்கு விடை கிடைக்கும் என்று கூறிய இயேசுவுடைய சொற்களுக்கும் கொஞ்சமும் பொருளே இல்லை என்று கூறத் தோன்றும். ஆகவே அவரது பிரார்த்தனையை இறைவன் கேட்டு, அவரைச் "சபிக்கப்பட்ட" மரணத்திலிருந்து காப்பாற்றினான் என்று நம்புவதைத் தவிர நமக்கு வேறு வழி இல்லை.
2. அவரது பிரார்த்தனை ஒப்புக் கொள்ளப்பட்டது என்பதைக் குறித்து "சங்கீத" த்திலிருந்து கீழ்க்கண்ட வாக்கியங்களைக்





குறிப்பிடலாம். "நாய்கள் என்னைச் சூழ்ந்திருக்கிறது. பொல்லாதவர்களின் கூட்டம் என்னை வளைத்துக் கொண்டது. என் கைகளையும், கால்களையும் உருவிக் குத்தினார்கள். ஆனாலும் கர்த்தாவே, நீர் எனக்குத் தூரமாகாதேயும். என் பெலனே, எனக்குச் சகாயம் பண்ணத் தீவிரித்துக் கொள்ளும்... உபத்திரவப்பட்டவனுடைய உபத்திரவத்தை அவர் அற்பமா -யெண்ணாமலும், அருவருக்காமலும், தம்முடைய முகத்தை அவனுக்கு மறைக்காமலுமிருந்து தம்மை நோக்கி அவன் கூப்பிடுகையில் அவனைக் கேட்டருளினார்."[10] மேலும் சங்கீதம் 34-ல் "நீதிமானுக்கு வரும் துன்பங்கள் அநேகமாயிருக்கும். கர்த்தர் அவைகளெல்லாவற்றிலும் நின்று அவனை விடுவிப்பார். அவனுடைய எலும்புகளையெல்லாம் காப்பாற்றுகிறார்; அவைகளில் ஒன்றும் முறிக்கப்படுவதில்லை"[11] என்று எழுதப் பட்டிருப்பதை நாம் படிக்கிறோம். யோவான் 19:23,36-ல் இரண்டு சங்கீதங்களும் இயேசுவோடு இணைத்து எழுதப் பட்டிருக்கிறது. இரண்டாவது சங்கீதத்தை படிக்கையில் சிலுவையில் அறையப்பட்ட இரண்டு கள்ளர்களுடைய கால்களும் ஒடிக்கப்பட்ட வேளையில், இயேசு யாதொரு தீங்கில்லாமலும் தப்பினார் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். இவ்விதம், இறைவன் அவரது பிரார்த்தனையைக் கேட்டு சபிக்கப்பட்ட மரணத்திலிருந்து அவரைக் காப்பாற்றினான்.

3. தமது பிரார்த்தனையை இறைவன் ஒப்புக் கொண்டதாகவும் ஆகவே தாம் சிலுவையில் மரிக்கமாட்டோம் என்றும் இயேசு நம்பியிருந்தார். எனவேதான் சிலுவையில் அறையப்பட்டுத் தமது பயங்கரமான நிலையை உணர்ந்தபோதும் தப்பிச் செல்லுவதற்குக் கொஞ்சங்கூட வாய்ப்பில்லை என்பதை அவர் கண்டபோதும் முதன்முறையாக ஒரு சந்தேகம் அவரை வந்து தாக்கியது. அதுவே "என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்"[12] என்ற நம்பிக்கையிழந்த கூக்குரலாக அவரிடமிருந்து வெளிப்பட்டது. இறைவன் அவரைக் கைவிடவில்லை. காப்பாற்றுவதற்குரிய ஏற்பாடுகளை

செய்திருந்தான். இப்படியிருக்கும்போது, அவர் சிலுவையில் மரித்தார் என்று நாம் கருதுவோமானால், உண்மையாகவே இறைவன் அவரைப் புறக்கணித்து விட்டான் என்று நாம் எண்ண வேண்டியது வரும். இப்படி எண்ணுவது அவரது வார்த்தைகளுக்கு முற்றிலும் முரணானதாகும். இதோ அவரது வார்த்தைகள்: "இதோ நீங்கள் சிதறுண்டு அவனவன் தன்தன் இடத்துக்குப் போய் என்னைத் தனியே விட்டு விடுங்காலம் வரும். அது இப்போது வந்திருக்கிறது. ஆனாலும் நான் தனித்திரேன். பிதா என்னுடன் கூட இருக்கிறார்."[13]

4. இறைவன் தன்னுடைய எதிரிகளின் பிரார்த்தனையையோ துஷ்டர்களின் பிரார்த்தனையையோ கேளாமல், நீதிமானுடைய பிரார்த்தனையை கேட்கிறான் என்று எல்லா வேத வாக்கியங்களும் ஒன்றுபட்டுச் சொல்லுகின்றன. உதாரணத்திற்கு, சங்கீதம் 18:6, 66:18-20, எரேமியா 29:13, யோபு 22:27 ஆகியவற்றைப் பாருங்கள். யோவான் சுவிசேஷத்தில் கூட "பாவிகளுக்கு தேவன் செவி கொடுக்கிறதில்லை என்று அறிந்திருக்கிறோம். ஒருவன் தேவ பக்தியுள்ளவனாயிருந்து அவருக்குச் சித்தமானதைச் செய்தால் அவனுக்குச் செவிகொடுப்பார்"[14] என்று எழுதப்பட்டிருப்பதைப் படிக்கிறோம். இதன் பின்னும், இயேசுவின் பிரார்த்தனையை இறைவன் கேட்டு, அவருக்குப் பதிலளித்தான் என்பதை மறுப்போமானால் இயேசு ஒரு பாவியே என்றும் இறைவின் சித்தத்தின்படி நடந்த நீதிமான் அல்லர் என்றும் நம்புவதைத் தவிர நமக்கு வேறு வழியில்லை. இறைவனுடைய தீர்க்கதரிசியாய் இருந்த இயேசுவைப் போன்ற ஒரு மனிதரைப் பற்றி இவ்வாறு நம்புவது நிச்சயமாக அவதூராகும். இயேசுவின் இந்த பிரார்த்தனையைக் குறித்து, எபிரெயரில், "அவர் மாம்சத்தில் இருந்த நாட்களில் தம்மை மரணத்தினின்று இரட்சிக்க வல்லமையுள்ளவரை நோக்கி, பலத்த சத்தத்தோடும் கண்ணீரோடும் விண்ணப்பம் பண்ணி வேண்டுதல் செய்து தமக்கு உண்டான பயபக்தியினிமித்தம் கேட்கப்பட்டு...."[15] என்று நாம் படிக்கிறோம். இவ்விதமாக





யூதர்கள் தங்களுடைய திட்டத்தில் தோல்வி கண்டார்கள். நீதிமானும், தெய்வ பக்தியும் கொண்ட இயேசுவை இறைவன் சபிக்கப்பட்ட மரணத்திலிருந்து காப்பாற்றி விட்டான்.

### *3. இயேசு சபிக்கப்பட்டவரா?*

"மாயக்காரராகிய வேத பாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ, மனுஷர் பிரவேசியாதபடி பரலோக ராஜ்யத்தைப் பூட்டிப் போடுகிறீர்கள். அதில் நீங்கள் பிரவேசிக்கிறதுமில்லை, பிரவேசிக்கப் போகிறவர்களைப் பிரவேசிக்க விடுகிறதுமில்லை"[16] என்று தம்மை எதிர்த்தவர்களை நோக்கி இயேசு கூறினார்.

"விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப் படுவான்"[17] என்று அவர் மேலும் கூறினார். இப்போது பாருங்கள் இயேசுவை சபிக்கப்பட்ட மரணத்திற்குள்ளாக்கினோம் என்று பரிசேயர்கள் நம்பினார்கள். இது உண்மையானால், பவுலும் இதனை ஆதரிக்கிறார் என்றால், அவர்களின் நியாயப் பிரமாணப்படி அவர்கள் இயேசுவைப் பொய்த்தீர்க்கதரிசி என்று திட்டமாக நிரூபித்து விட்டார்கள். ஆகவே அவர்கள் அவரை ஏற்றுக் கொள்ளாதது சரியே. அதற்காக அவர்கள் தண்டனைக்கு உள்ளாக்கப்படமாட்டார்கள்.

"சபிக்கப்பட்டவன்" என்ற வார்த்தையின் உண்மையான பொருளைப் பார்ப்போமானால், சபிக்கப்பட்ட மனிதன் ஒருவன் தீர்க்கதரிசியாகவும், இறைவனின் அன்பைப் பெற்றவனாகவும் இருக்க முடியாது. ஏனென்றால், ஒரு மனிதனுக்கு இறைவனுடைய தொடர்பு அற்றுப் போகாவிட்டாலும், இறையன்பும், இறைஞானமும் அவனுடைய மனதை விட்டு அகன்று, அவனது இதயம் வெறுமையாக ஆகாவிட்டாலும் அல்லது இறைவனுடைய கருணையும், அருளும் அவனைவிட்டு விலகாவிட்டாலும், ஒரு மனிதன் சபிக்கப்பட்டவனாக முடியாது. ஆகவே "சபிக்கப்பட்டவன்" என்பவன் சாத்தானைப் போன்று, தவறான வழியிலும், இறைவனோடு விரோதம் பூண்டுமே இருக்க வேண்டும். எனவேதான் சாத்தானுக்குச் "சபிக்கப்பட்டவன்" என்று பெயரிடப்பட்டிருக்கிறது.

உலகத்தின் ஒளியாகவும், தமது பிரார்த்தனையை ஏற்றுக் கொண்ட இறைவனுக்கு அன்பானவராகவும் வாதிட்ட கிறிஸ்துவைப் போன்ற நீதிமானையும், புனிதரையும் பற்றி, அவர் இறைவனால் "சபிக்கப்பட்டவர்" என்றும், இறையோனுடைய தொடர்பு அற்றவர் என்றும் நம்பமுடியுமா? அவர் உள்ளத்தைத் தவறான எண்ணங்களும், நம்பிக்கையின்மையும் வெற்றி கொண்டுவிட்டன என்று நம்ப இயலுமா? இந்த உண்மைகள் யாவற்றையும் மனதில் பதித்துக் கொண்டு, இயேசு சிலுவையில் மரித்திருக்கக் கூடும் என்பதை மறுத்துரைக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். சிலுவையில் இறந்து போவது அவரைச் சபிக்கப்பட்டவராக மாற்றியிருக்கும்.

### *4. உயிர் பெற்றெழுந்த பரிசுத்தவான்கள்*

இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்பதை நிரூபிக்கும் மூன்றாவது ஆதாரம், மத்தேயு 27 ஆம் அதிகாரத்தில் அடங்கி இருக்கிறது.

"கல்லறைகளும் திறந்தது, நித்திரையடைந்திருந்த அநேக பரிசுத்தவான்களுடைய சரீரங்களும் எழுந்திருந்தது. அவர் உயிர்த்தெழுந்த பின்பு இவர்கள் கல்லறைகளை விட்டுப் புறப்பட்டு பரிசுத்த நகரத்தில் பிரவேசித்து அநேகருக்குக் காணப்பட்டார்கள் [18]

இந்த நிகழ்ச்சியை வார்த்தைக்கு வார்த்தை அப்படியே பொருள்படுத்தக் கூடாது என்பது மிகவும் தெளிவானதாகும். அது, சொற்பொருள்படி உண்மையான நிகழ்ச்சியாக இருந்தால், இப்பேர்ப்பட்ட அசாதாரணமான - இதற்கு முன்னர் நடந்திராத - இயற்கைக்கு மீறிய நிகழ்ச்சியைப் பற்றி மற்ற சுவிசேசங்களிலும் எழுதப்பட்டிருப்பதைக் காணத்தவறியிருக்கமாட்டோம். ஆனால் அப்படியொன்றும் காணப்படவில்லை. மத்தேயு ஒருவர்தான் இதனைத் தமது சுவிசேஷத்தில் குறிப்பிட்டிருக்கிறார். மற்ற மூன்று சுவிசேசர்களும் இதனைப்பற்றி ஜாடையாக குறிப்பிடுவதற்குக் கூட கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. இந்த நிகழ்ச்சி உண்மையாக இருந்திருந்தால், உயிர்த்தெழுந்த பரிசுத்தவான்களிடம் இயேசுவின்





உண்மையைப் பற்றிக் கேட்டறிந்து கொள்ளுவதற்கு, யூதர்களுக்கு இது ஒரு ஈடு இணையற்ற வாய்ப்பாக இருந்திருக்கும். அவர்கள் இயேசுவின் உண்மையைப் பற்றி உறுதி கூறியிருந்தால், மேற்கொண்டு எவ்விதக் கேள்வியு மில்லாமல், யூதர்கள் அவரை ஏற்றுக் கொண்டிருப்பார்கள். இந்தக் கதையைப் பற்றி தாமஸ் பெய்ன் கூறுவதை நான் இங்கு எடுத்துக் காட்டுகிறேன்.

"ஒரு பொய்யைச் சொல்லிவிடுவது எளிது. ஆனால் சொன்ன பிறகு, அதை உறுதிப்படுத்துவது கஷ்டம். உயிர் பெற்றெழுந்து, நகரத்திற்குள் சென்ற பரிசுத்தவான்கள் யார்? பின்னர் அவர்களுக்கு என்ன நேர்ந்தது? அவர்களைப் பார்த்வர் யார்? - ஏனென்றால் சுவிசேசம் எழுதியவரே அவர்களைப் பார்த்ததாகச் சொல்லுமளவுக்கு தைரியமில்லை - அவர்கள் நிர்வாணமாக இயற்கையான நிறத்தோடு வந்தார்களா? அந்த பரிசுத்தவான்கள் ஆண்களா பெண்களா? அல்லது அவர்கள் முழுக்க முழுக்க ஆடையணிந்து வந்தார்களா? அப்படியென்றால் தங்களுடைய ஆடையணிகலன்களை எங்கிருந்து பெற்றார்கள்? தங்களுடைய பழைய இல்லங்களுக்குச் சென்று, தங்களது மனைவிமார், கணவன்மார், சொத்து ஆகியவற்றைத் திரும்பக் கேட்டுப் பெற்றுக் கொண்டார்களா? அல்லது தங்களது கல்லறைகளுக்கு உயிருடன் சென்று, தங்களைத் தாங்களே புதைத்துக் கொண்டார்களா? - என்பனவற்றையெல்லாம், மத்தேயு சுவிசேஷத்தை எழுதியவர் நமக்குச் சொல்லியிருக்க வேண்டும். பரிசுத்தவான்களின் பட்டாளம் ஒன்று மீண்டும் உயிர் பெற்று எழுந்து வந்திருக்கிறது. ஆனால், அவர்கள் யார் என்று ஒருவருக்குமே தெரியவில்லை. அவர்களைப் பார்த்ததுதான் யார் என்பதும் தெரியவில்லை. இந்த விஷயத்தைப் பற்றி அதிகமாகச் சொல்லுவதற்கு ஒரு வார்த்தைகூட இல்லை. அல்லது அந்த பரிசுத்தவான்களாவது நம்மிடம் ஏதும் சொல்லுகிறார்களா என்றால் அதுவும் இல்லை. உண்மையிலேயே இவையாவும் விந்தையாகத்தானே இருக்கிறது. (நமக்குச் சொல்லப்பட்டபடி) இப்படிப்பட்ட சம்பவங்கள் நடக்குமென்று முன்னரே தீர்க்கதரிசனமுரைத்த தீர்க்கதரிசிகளாக அவர்கள்

இருந்திருந்தால் நம்மிடம் சொல்லுவதற்கு நிறைய விஷயங்கள் அவர்களிடம் இருந்திருக்கும். நம்மிடம் ஒவ்வொரு விஷயத்தையும் அவர்கள் கூறியிருந்திருப்பார்கள். ஆகவே முன்னால் கூறப்பட்ட தீர்க்கதரிசனங்களும், அவற்றிற்கு குறிப்புரைகளும், விரிவுரைகளும் நமக்கு கிடைத்திருக்கும். அக்குறிப்புரைகளும் விரிவுரைகளும் நாம் தற்போது வைத்திருப்பதை விட சற்றேனும் சிறந்ததாகவே இருக்கும். அந்த பரிசுத்தவான்கள் மோசேயாகவும், ஆரோனாகவும், யோசுவாவாகவும், சாமுவேலாகவும், தாவீதாகவும் இருந்திருந்தால், எருசலேமில் ஒரு யூதனாவது கிறிஸ்தவனாக மதம் மாற்றப்படாமல் இருந்திருக்கமாட்டான். யோவான் ஸ்னானகனாகவும் அந்தக் காலத்தில் வாழ்ந்திருந்த பரிசுத்தவான்களாகவும் அவர்கள் இருந்திருந்தால், ஒவ்வொரு வருக்கும் அவர்களைத் தெரிந்திருக்கும். ஆகவே மற்ற எல்லா அப்போஸ்தலர்களைக் காட்டிலும் உண்மைகளை எளிதில் போதித்து, அதிகப் புகழும் பெற்றிருக்கக்கூடும். ஆனால் இந்தப் பரிசுத்தவான்களோ இதற்குப் பதிலாக யோனாவின் ஆமணக்குச் செடியைப்போல இரவிலே பழுத்து ஒன்றுக்கும் உதவாமல் காலையில் கருகிப்போய் விட்டார்கள்." (தி ஏஜ் ஆஃப் ரீஸன்)

மத்தேயு எழுதின சுவிசேசத்தில் வரும் வாக்கியங்களை நாம் மேலெழுந்தவாரியாகச் சொற்பொருளில் எடுத்துக் கொண்டால், இந்தக் கேள்விகள் யாவற்றையும் எதிர் நோக்க வேண்டியதிருக்கும். ஆனால் உண்மையென்னவெனில், வாக்களிக்கப்பட்ட மஸீஹ் ஆகிய ஹஸ்ரத் அஹ்மத் (அலை) அவர்கள் எழுதியுள்ளதுபோல, இந்த வசனம் சில நீதிமான்கள் கண்ட ஒரு (தரிசனக்) காட்சியைக் குறிக்கிறது. யோசேப்பு, பாரோனுடைய கனவுக்குப் பொருள் விபரித்ததுபோல, இத்தகைய காட்சிகளுக்குப் பொருள் கூறமுடியும் என்பதை யாவரும் அறிவர்.

கனவுகளுக்குப் பொருள் விவரித்துக் கூறுவதைக் குறித்து, 600 ஆண்டுகளுக்கு முன்னால், அத்துறையில் முன்னணியில் இருந்த, செய்க் அப்துல் கனி நப்லூசி எழுதிய "தஃதீருல் அனாம்" (பக்கம் 289) என்ற அரபி புத்தகத்தில் கீழ்க்கண்ட விளக்கத்தை





காணலாம். "இறந்து போனவர்கள் அவர்களுடைய கல்லறைகளில் இருந்து வெளியே வந்து அவர்களுடைய வீடுகளுக்கு செல்லுவதாக, யாராவது ஒருவன் கனவில் கண்டால் சிறையில் அடைபட்டிருக்கும் ஒரு பெரிய மனிதர் சிறையி லிருந்து விடுவிக்கப்பட்டு காப்பாற்றப் படுவார் என்பது அதன் பொருளாகும்." உயிரித்தெழுதல் நடைபெற்ற காலத்தில் இந்தக் காட்சி காணப்பட்டதால், இயேசு இறந்தவர்போல் தோன்றினார் என்பதும், மயக்க நிலையில் கிடத்தி வைக்கப்பட்டிருந்த கல்லறையிலிருந்து, அவருக்கு விடுதலை கிடைத்தது என்பதும், வெகு எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய விஷயங்களாகும். மயங்கிய நிலையிலிருந்தவரைத்தான், அவர் மீது வழக்குத் தொடர்ந்தவர்கள், மரணித்து விட்டதாக நம்பி விட்டார்கள். சுருங்கச் சொன்னால், ஏதோ சில இறைபக்தியுள்ள மனிதர்களால் காணப்பட்ட இக்காட்சி, இயேசு இறக்கவில்லை யென்பதையும், ஒரு கைதியைப் போலக் கல்லறையினுள் இருந்தார் என்பதையும் அங்கிருந்து பாதுகாப்பான ஓர் இடத்துக்குச் தப்பிச் சென்றார் என்பதையும் அவர்களுக்கு எடுத்துக் காட்டியது.

## *5. யோனா தீர்க்கதரிசியின் அடையாளம்*

யூதர்கள் இயேசுவை அழைத்துத் தங்களுக்கு ஓர் அடையாளத்தைக் காட்டும்படிக் கேட்டுக் கொண்டபோது, அவர் கூறினார்: "இந்தப் பொல்லாத விபசார சந்ததியார் அடையாளத்தைத் தேடுகிறார்கள். ஆனாலும் யோனா தீர்க்கதரிசியின் அடையாளமே அன்றி வேறே அடையாளம் இவர்களுக்குக் கொடுக்கப்படுவ தில்லை. யோனா இரவும், பகலும் மூன்று நாள் ஒரு பெரிய மீனின் வயிற்றில் இருந்ததுபோல மனுஷகுமாரனும் இரவும் பகலும் மூன்று நாள் பூமியின் இருதயத்தில் இருப்பார்."[19]

நம் முன்னுள்ள பிரச்சினையை இயேசுவின் இந்த வசனங்கள் தீர்த்து வைக்கின்றன. யூதர்கள் அவரைக் கொல்லுவதற்காகத் தேடினார்கள். ஆனால் அவர் மரணத்தை விட்டுத் தப்பி விட்டார். அவர்களைக் கொல்லுவதற்கு தங்களால் இயன்ற எல்லாவற்றையும் அவர்கள் செய்தார்கள். ஆனால் அவர்களுடைய

கைகளிலிருந்து இறைவன் அவரைக் காப்பாற்றினான். எனவே அவர் தப்பிச் சென்றது, யூதர்களுக்கு ஓர் அடையாளமாகும். அந்த அடையாளம் எந்த வழியில் காட்டப்படும் என்பதையும், அவரது கொலைகார எதிரியின் கைகளிலிருந்து எந்த முறையில் விடுவிக்கப் படுவார் என்பதையும், இயேசுவின் வார்த்தைகள் சுட்டிக் காட்டின. மரித்துப்போன ஒருவரைப்போன்று, பூமியின் இருதயத்தில் வைக்கப்படுபவராக அவர் இருந்தார். ஆயினும் மீனின் வயிற்றில் இருந்த யோனாவின் சம்பவத்தைப் போன்றே இயேசுவின் சம்பவமும் இருக்கும். மீனின் வயிற்றில் இருந்தபோது, யோனா தீர்க்கதரிசி மரித்துப்போகவில்லை - உயிருடனேயே இருந்தார். அது போன்றே இயேசுவும் பூமியின் இதயத்தில் இறந்து போகாமல் உயிருடனே இருப்பார். யோனாவின் சம்பவத்தோடு தம்முடைய சம்பவத்தை ஒப்பிடுகையில், அவர் எந்த வழியில் தப்பித்துப்போகப் போகிறார் என்பதை இயேசு தெளிவாகச் சுட்டிக்காட்டினார். யோனா எவ்வாறு தமது உயிருள்ள கல்லறையினுள் (அதாவது மீனுக்குள்) உயிருடனே நுழைந்து உயிருள்ளவராகவே வெளியே வந்திருந்தாரோ, அதே போன்று இயேசுவும் தமது கல்லறைக்குள் உயிருடன் நுழைந்து உயிருடன் வெளியே வருபவராகவே இருந்தார். இயேசு சிலுவையில் "சபிக்கப்பட்ட மரணமடைந்தார்" என்ற கருத்துக்கு இயேசுவின் இந்த தீர்க்கதரிசனம் சாவுமணி அடிக்கிறது.

### *6. பிலாத்துவுடைய மனைவி கண்ட கனவு*

"அவன் நியாயாசனத்தில் உட்கார்ந்திருக்கையில், அவனுடைய மனைவி அவனிடத்தில் ஆளனுப்பி, நீர் அந்த நீதிமானை ஒன்றும் செய்ய வேண்டாம். அவர் நிமித்தம் இன்றைக்குச் சொப்பனத்தில் வெகு பாடுபட்டேன் என்று சொல்லச் சொன்னாள்."[20]

விசாரணையின் ஆரம்பத்திலேயே, பிலாத்துவின் மனைவி மூலமாக பிலாத்துவுக்கு இறைவன் அனுப்பிய எச்சரிக்கையானது, இறைவனுடைய சித்தத்தை பிலாத்துவுக்குத் தெளிவாகக்காட்டக் கூடியதாக இருந்தது. பிலாத்துகூட, இயேசுவைக் குற்றமற்றவர்





என்றே நம்பியிருந்ததோடு, யூதர்கள் பொறாமையினாலே அவரை ஒப்புக் கொடுத்தார்கள் என்றும் அவர் அறிந்திருந்தார்.[21] இயேசுவை மரணத்திலிருந்து காப்பாற்ற வேண்டுமென்று இறைவன் விரும்பியிராவிட்டால், பிலாத்துவின் மனைவிக்கு இந்தக் கனவைக் காட்டியதன் நோக்கம்தான் என்ன? ஏரோது இயேசுவை அவரது குழந்தைப் பருவத்தில் கொல்லத் தேடியபோது, இயேசுவின் உயிரைக் காப்பாற்ற ஒரு கனவு மூலமாகத்தான் ஏரோதின் தீய எண்ணத்தை யோசேப்புக்குக் காட்டி, இறைவன் எச்சரித்தான். அதன்படியே இயேசுவையும், அவரது தாயாரையும் யோசேப்பு எகிப்துக்குக் கூட்டிச் சென்றார்.[22] இதேபோன்று பிலாத்துவுக்கு அவருடைய மனைவி மூலமாக இறைவன் தனது எண்ணத்தை வெளிப் படுத்திக் காட்டினான். பிலாத்து இயேசுவை விடுதலை செய்வதாக இருந்தால், அவரைப்பற்றி இராயனிடம் (சீசரிடம்) குற்றம்சாட்டப் போவதாக யூதர்கள் பயமுறுத்தவே, பிலாத்து இயேசுவை அவரது எதிரிகள் கையில் ஒப்படைத்தார். இருப்பினும் இயேசுவை மரணத்திலிருந்து காப்பாற்றுவதற்கு அவர் தம்மால் இயன்ற எல்லாவற்றையும் இரகசியமாகச் செய்தார். வெள்ளிக் கிழமை மாலை நெடுநேரமாகும் வரையிலும் அவர் விசாரணையை நீட்டிக் கொண்டு போனார். ஏனென்றால் ஓய்வு நாள் (சபத் நாள்) இரவு வந்த பின்னர் எவரையும் சிலுவையில் தொங்கும்படி விட்டு வைப்பது, யூதர்களுக்கு சட்ட விரோதமான காரியமாகும் என்பதை அவர் அறிந்திருந்தார். இயேசு சிலுவையில் அறையப்பட்டு தொங்கிய நேரம் மிகவும் குறுகியது. இந்தக் குறுகிய நேரத்திற்குள் இயேசு சிலுவையில் இறப்பதென்பது நடக்கக்கூடியதன்று. மூன்று மணி நேரம் மட்டுமே அவர் சிலுவையில் இருந்தார். இது அவரை மரணமடையச் செய்யப் போதிய நேரமேயல்ல. சிலுவை தண்டனை நிறைவேற்றி வைப்பதற்காக அமர்த்தப்பட்ட நூற்றுக்கதிபதி என்பவர், இயேசுவிடத்தில் பெரிதும் இரக்கம் காட்டினார். லூக்கா சுவிசேசகன் சொல்லுகிறபடி, அவர் இயேசுவை நீதிமான் என்று நம்பினார். இதைப்போன்றே, இயேசுவோடு சிலுவையில் கிடந்த

இரண்டு கள்ளர்களுடைய கால்களையும் முறித்த காவல் வீரர்கள், இயேசுவின் கால்களை முறிக்கவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக வெளிப்படையாக இயேசுவோடு எவ்வித சம்பந்தமும் இல்லாத ஒரு நபர் இந்த நேரத்தில் திடீரென்று அங்கு வந்து தோன்றினார். அவரே அரிமெத்தியாவைச் சேர்ந்த யோசேப்பு என்றழைக்கப்படும் செல்வந்தர். யோவான் எழுதிய சுவிசேசம், அவரை வருணிப்பது போலவே அவர் "யூதர்களுக்குப் பயந்ததினால்" இரகசியமாக இருந்து வந்த ஒரு இரகசிய சீடர். இவர்தான் இயேசுவுடைய உடலை எடுத்துக் கொண்டு போவதற்குப் பிலாத்துவிடம் மன்றாடிக் கேட்டார். இந்தப் புதிய நபரைப் பற்றிச் சிறிதுகூட விசாரிக்காமல், அப்போது நடைமுறையி லிருந்த வழக்கத்திற்கு மாற்றமாக, அவர் கேட்டுக் கொண்டபடியே செய்ய பிலாத்து சம்மதித்தார். பின்னர் அவரும் வைத்தியனான நிக்கொதேமு என்பவரும் சேர்ந்து இயேசுவின் உடலை எடுத்துக் கொண்டு போய்த் தங்களுடைய பராமரிப்பில் வைத்துக் கொண்டார்கள். எல்லாம் அவர்களுடைய திட்டத்தின்படியே நடந்தது. அவர்கள் பொது அடக்கத்தலத்தில் மற்றவர்களோடு சேர்த்து அவரையும் புதைக்க வில்லை. அதற்கு மாறாக, யோசேப்பு தமது சொந்தத் தோட்டத்தில் மலையைக் குடைந்து தோண்டியிருந்த ஒரு புதிய கல்லறையில், அவரை மிகவும் கவனத்தோடு கிடத்தினார்கள். யூதர்களுக்கு தெரியாமல் இங்கு அவருக்கு மருத்துவம் செய்ய முடிந்தது. ஏனென்றால் சப்பாத்து என்னும் ஓய்வு நாள் யூதர்களுக்கு நல்ல நாளாக இருந்தபடியால், அவர்கள் தங்களது மத சடங்குகளில் கவனமாகவே இருந்து விட்டார்கள். குணமடைந்த பின்னர், இயேசு கல்லறையைவிட்டு வெளியே வந்தார். இயேசுவை மரணத்திலிருந்து காப்பாற்றுவதற்காக பிலாத்து தமது திட்டங்களை வெற்றிகரமாக நிறைவேற்றி வைத்து, மேலே சொல்லப்பட்ட கனவை நிறைவேற்றி விட்டார் என்பதையும் இறைவனுடைய எண்ணத்தையும் செயல்படுத்திவிட்டார் என்பதையும் நாம் கண்டு கொள்கிறோம்.





## *தகவல் நூல்கள்*


1. *மத்தேயு 16 : 20*
2. *யோவான் 11 : 53,54*
3. *யோவான் 12 : 36*
4. *யோவான் 18 : 1,2*
5. *மாற்கு 14 : 36*
6. *லூக்கா 22 : 44*
7. *யோவான் 11 : 42*
8. *மாற்கு 11 : 24*
9. *மத்தேயு 7 : 9,10*
10. *சங்கீதம் 22 : 16,24*
11. *சங்கீதம் 34 : 19,20*
12. *மத்தேயு 27 : 46*
13. *யோவான் 16 : 32*
14. *யோவான் 9 : 31*
15. *எபிரேயர் 5 : 7*
16. *மத்தேயு 23 : 13*
17. *மாற்கு 16 : 16*
18. *மத்தேயு 27 : 52,53*
19. *மத்தேயு 12 : 39,40*
20. *மத்தேயு 27 : 19*
21. *மத்தேயு 27 : 18*
22. *மத்தேயு 2 : 13*
23. *யோவான் 19 : 12*

# அத்தியாயம் - 2

## நீதித் தீர்ப்பு

### *சூழ்நிலைகளின் சாட்சி* ★

இயேசுவின் சபிக்கப்பட்ட சிலுவை மரணத்தைப் பற்றியும் அவர் உயிர்த்தெழுந்தது பற்றியும், முஸ்லிம்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் இடையில் ஒரு காலத்தில் பெரிய கருத்து வேறுபாடு ஏற்பட்டது. முஸ்லிம்கள் சபிக்கப்பட்ட மரணத்தை, இறைவனுடைய பெருந்தூதர்களில் ஒருவராகிய இயேசுவுக்கு ஏற்பட்ட பெரும் பழியாகக் கருதினார்கள். கிறிஸ்தவர்களோ, அதனை மனித குலத்துக்குக் கிடைத்த தெய்வீக பாக்கியமாகக் கருதினார்கள். இப்படியிருக்க, கிறிஸ்தவர்கள் முஸ்லிம்களுக்கெதிராக நீதிமன்றத்தில் ஒரு வழக்கைத் தொடர்ந்தனர். கட்சி சார்பற்ற சான்றோர்களாகிய இரு நீதிபதிகள் வழக்கை விசாரித்தார்கள். விசாரணைக்குப் பின்னர் அவர்கள் கீழ்க்கண்டவாறு தீர்ப்பு வழங்கினர்.

(கி) என்ற ஒரு கிறிஸ்தவர் - வாதி

(மு) என்ற ஒரு முஸ்லிம் - பிரதிவாதி

விஷயம் : இயேசு கிறிஸ்துவின் சிலுவை மரணமும், அவர் உயிர்த்தெழுதலும்.

இது முக்கியத்துவம் வாய்ந்த ஒரு சரித்திர சம்பவத்தைப் பற்றிய வழக்காகும். வாதி (கி) என்பவர் ஏப்ரல் 8 ஆம் நாளன்று பிரதிவாதி (மு) என்பவருக்கு எதிராக இந்த வழக்கைத் தாக்கல் செய்தார். பிரதிவாதி (மு) இயேசுவுடைய சபிக்கப்பட்ட மரணத்தை மறுத்துரைத்தார். கட்சிக்காரர்களுடைய வாதங்களைக் கேட்ட பின்னர் கீழ்க்கண்ட விஷயங்களை விசாரணை செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது.

*1. இயேசு கிறிஸ்து சிலுவையில் மரித்தாரா?*

★ *வாசகர்கள் இதனை எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் ஒரு வழக்கு போன்று இதனை எழுதியுள்ளேன். - நூலாசிரியர்*





*2. மரித்தோரிலிருந்து அவர் உயிர் பெற்றெழுந்தாரா?*

*3. அவர் ஆவியாக எழுந்தாரா? அல்லது எலும்பும் சதையும் உள்ள உடலோடு எழுந்தாரா?*

விசாரணை இரண்டு தினங்கள் நீடித்தது. சம்பந்தப்பட்ட கட்சிக்காரர்கள் தங்களுடைய கருத்துக்கு ஆதரவாக வாதாடினார்கள். இருவரின் வாதங்களையும் கேட்டு, ஆதரவாகவும் எதிராகவும் உள்ளவற்றை அலசி ஆராய்ந்து நடுநிலையாக தீர்ப்பு வழங்கப்பட்டது.

மேற்கண்ட விஷயங்களுக்குரிய ஆதாரங்களைச் சமர்ப்பிக்க வேண்டியவர் வாதி (கி) என்பவர். அவரது ஆதாரங்கள் நான்கு எழுத்துப்பிரதிகள். இந்நான்கு எழுத்துப் பிரதிகளும், கண்ணால் கண்ட சாட்சிகளாகிய மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் ஆகிய நான்கு புனிதர்களால் எழுதப்பட்டதாகவும், அனைத்தையும் அறிந்த இறையோனின் அருள்வாக்கின் உதவியால் எழுதப்பட்டதாகவும் அவர் வாதிட்டார். ஆனால் நன்கு ஆராய்ந்து பார்த்ததில் எழுத்துப் பிரதிகள் மேற்கூறிய தன்மையுடையனவாக ஆதாரங்களால் நிரூபிக்கப்படவில்லை என்பது தெரிகிறது. சாட்களின் கையெழுத்து அவற்றில் இல்லை. இறை அருள் வாக்கைக் கொண்டு அவை எழுதப்பட்டதற்கான எவ்வித அத்தாட்சியும் அவற்றில் இல்லை. எவ்வாறிருப்பினும் அவை மிகப் பழமையான ஆதாரங்களாகக் கட்சிக்காரரால் கருதப்படுவதால், நாம் அவற்றைத் தள்ளிவிடுவதற்கு இல்லை. இவை எவ்வளவு தூரம் மேற்கூறப்பட்ட விஷயங்களை முடிவு செய்வதில் நமக்கு உதவுகின்றன என்பதை இங்கு பார்ப்போம்.

### *விசாரணைக்குரிய விஷயங்கள்*

விசாரணைக்குரிய மூன்று விஷயங்களும் ஒரே நேரத்தில் முடிவு செய்யப்பட வேண்டிய அளவுக்கு அவை அவ்வளவு நெருங்கிய தொடர்புடையனவாயிருக்கின்றன. வாதி (கி) என்பவருக்குரிய சாட்சியங்கள் மிகவும் முரண்பட்டவையாக இருக்கின்றன.

சாதாரண விஷயங்களைப் பற்றி மட்டுமல்லாமல் மிக முக்கியமான விஷயங்கள் பற்றிகூட சாட்சி கூறுவதில் நால்வருமே ஒருவருக்கொருவர் முரண்படுகின்றனர்.

### *1. காட்டிக் கொடுத்தவனும் அவனைத் தொடர்ந்து வந்தவர்களும்*

மத்தேயு, மாற்கு ஆகிய இருவரும் கூறுவது என்னவென்றால், பிரதான ஆசாரியரும், ஜனத்தின் மூப்பரும் அனுப்பின திரளான ஜனங்களோடு யூதாஸ் மாத்திரம் கெத்செமெனேக்கு வந்தான் என்பதாகும். ஆனால் லூக்காவோ, பிரதான ஆசாரியர்களும், தேவாலயத்து சேனைத் தலைவர்களும், மூப்பர்களும் ஆகிய இத்தனை பேரும் நேரிடையாக இயேசுவைச் சிறைபிடிப்பதற்காக வந்தனர் என்று கூறுகிறார்.[1]

### *2. இயேசு எவ்வாறு சிறை பிடிக்கப்பட்டார்?*

மத்தேயு, மாற்கு, லூக்கா ஆகியோர் யூதாஸ் இவ்வாறு கூறி இயேசுவை அடையாளம் காட்டியதாகக் கூறுகிறார்கள். "நான் எவனை முத்தஞ்செய்வேனோ அவன்தான், அவனைப் பிடித்துக் கொள்ளுங்கள் என்று அவர்களுக்கு அடையாளம் சொல்லி இருந்தான்."

"உடனே, அவன் இயேசுவினிடத்தில் வந்து; ரபீ, வாழ்க என்று சொல்லி, அவரை முத்தஞ்செய்தான். இயேசு அவனை நோக்கி: சினேகிதனே, என்னத்திற்காக வந்திருக்கிறாய் என்றார். அப்பொழுது அவர்கள் கிட்டவந்து இயேசுவின்மேல் கை போட்டு அவரைப் பிடித்தார்கள்."[2] ஆனால் யோவான், அவர் சிறைபிடிக்கப் பட்டதைப் பற்றி முற்றிலும் மாறுபட்ட விபரங்களைத் தருகிறார். அவர் சொல்லுகிறபடி யூதாஸ் கூட்டத்தோடு வந்ததும், இயேசு அவராகவே முன்சென்று "யாரைத் தேடுகிறீர்கள்" என்றார். அவருக்கு அவர்கள் பிரதியுத்தரமாக: நசரேயனாகிய இயேசுவைத் தேடுகிறோம் என்றார்கள். அதற்கு இயேசு : நான்தான் என்றார். அவரைக் காட்டிக் கொடுத்த யூதாஸும் அவர்களுடனே கூட நின்றான்." அவர் இதனைச் சொன்னவுடனே, அவர்கள் பின்னிட்டுச் சென்று தரையிலே விழுந்தார்கள். இயேசு மீண்டும் கேட்டார். அவர்கள்





தங்கள் பதிலை மீண்டும் கூறினார்கள். "இயேசு பிரதியுத்தரமாக: நான்தானென்று உங்களுக்குச் சொன்னேனே; என்னை தேடுகிறதுண்டானால், இவர்களைப் போகவிடுங்கள் என்றார். அப்பொழுது பேதுரு, பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனின் வலது காதை அறவே வெட்டி விட்டான். அப்பொழுது அவர்கள் இயேசுவைப் பிடித்துக் கட்டினார்கள்.[3]

*3.* பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனின் காது, இயேசு சிறைப்பிடிக்கப்படுமுன் வெட்டப்பட்டதாக லூக்காவும் யோவானும் கூறுகின்றனர். ஆனால் மத்தேயும் மாற்கும் இயேசு கைதாகப்பட்ட பின்னரே அது நடந்தது என்கின்றனர்.

*4.* யூதாஸ் தான் செய்த காரியத்திற்காக மனம் வருந்தி (காட்டிக் கொடுக்கக் கூலியாகப் பெற்ற) முப்பது வெள்ளிக் காசுகளை பிரதான ஆசாரியரிடமும் மூப்பரிடமும் திரும்பக் கொண்டு வந்து கொடுத்தான். அவர்கள் அதனை திரும்பப் பெற்றுக் கொள்ள மறுத்து விட்டனர். ஆனால் அவன் அதைத் "தேவாலாயத்திலே எறிந்து விட்டு புறப்பட்டுப் போய் நான்று கொண்டு செத்தான். பிரதான ஆசாரியனும், மூப்பர்களும் ஆலோசனை செய்து அந்நியரை அடக்கம் பண்ணுவதற்குக் குயவனுடைய நிலத்தை அதினாலே கொண்டார்கள். இதினிமித்தம் அந்த நிலம் இந்நாள் வரைக்கும் இரத்த நிலம் என்னப்படுகிறது என்று மத்தேயு கூறுகிறார்.[4]

மற்ற மூவரும் இதனைப்பற்றி ஏதும் கூறவில்லை. ஆனால் லூக்காவால் எழுதப்பட்டதாகக் கருதப்படும் "அப்போஸ்தலருடைய நடபடி" களில், பேதுரு இவ்வாறு சொன்னதாக நாம் படிக்கிறோம். "அநீதத்தின் கூலியினால் அவன் (யூதாஸ்) ஒரு நிலத்தை சம்பாதித்து தலைகீழாக விழுந்தான். அவன் வயிறு வெடித்து குடல்களெல்லாம் சரிந்து போயிற்று."[5]

### *5. சிலுவையைச் சுமந்தவர் யார்?*

மத்தேயுவும், மாற்கும் சிரேனே ஊரானாகிய சீமோன் என்னப்பட்ட ஒருவனை, கபாலஸ்தலம் என்று பொருள்படும் கொல்கொதா என்னும் இடம் வரை, அவரது சிலுவையைச்

சுமக்கும்படி பலவந்தம் செய்தார்கள்[6] என்று கூறுகிறார்கள். ஆனால் கபாலஸ்தலம் என்னும் இடம் வரையிலும் இயேசுவே தமது சிலுவையைச் சுமந்து கொண்டு சென்றார் என்பது யோவானுடைய கூற்று.[7]

*6.* இயேசுவின் தலைக்குமேல் சிலுவையில் எழுதி வைக்கப் பட்டிருந்ததாக அவர்கள் கூறும் ஒரு சிறிய பலகையின் வாசகத்தைப் பற்றிக்கூட அவர்களுக்குள் பெரிய வேறுபாடு உள்ளது.

மத்தேயு - இவன் யூதருடைய ராஜாவாகிய இயேசு

மாற்கு - யூதருடைய ராஜா

லூக்கா - இவன் யூதருடைய ராஜா

யோவான் - நசரேனாகிய இயேசு யூதருடைய ராஜா

*7.* இயேசுவோடு கூட சிலுவையில் அறையப்பட்ட திருடர்கள் இயேசுவை இகழ்ந்தனர் என்று மத்தேயுவும், மாற்கும் கூறுகிறார்கள். ஆனால் லூக்கா, அவர்களில் ஒருவன் அவரை இகழ்ந்துரைத்ததாகவும் அவனை மற்றொருவன் "நீ தேவனுக்குப் பயப்படுகிறதில்லையா" என்று ஏசிவிட்டு, இயேசுவை நோக்கி "ஆண்டவரே நீர் உம்முடைய ராஜ்யத்தில் வரும்போது அடியேனை நினைத்தருளும் என்றான். இயேசு அவனை நோக்கி: இன்றைக்கு நீ என்னுடனேகூடப் பரதீசிலிருப்பாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்."[8]

யோவானை எடுத்துக்கொண்டால், சிலுவையில் அறையப் பட்ட மூவருக்குமிடையே நடந்த இந்த முக்கியமான உரையாடலைப் பற்றி அவர் குறிப்பிடவே இல்லை.

### *8. சிலுவையிலறையப்பட்ட நேரம்*

"அவரைச் சிலுவையில் அறைந்தபோது மூன்றாம் மணி வேளையாயிருந்தது"[9] என்று மாற்கு கூறுகிறார். ஆனால் யோவான், பிலாத்து இயேசுவை யூதர்களிடம் ஒப்புவித்தபோது ஆறு மணி நேரமாக இருந்தது என்று கூறுகிறார்.[10] மத்தேயுவும், லூக்காவும் ஆறாம் மணி நேரத்திலிருந்து ஒன்பதாம் மணி நேரம் வரையிலும் உலகம் முழுவதும் இருளாக இருந்ததென்று கூறுகிறார்கள்.





### *9. இயேசு எவ்வாறு ஆவியை விட்டார்?*

**மத்தேயு :** இயேசு மறுபடியும் மகாசத்தமாய்க் கூப்பிட்டு ஆவியை விட்டார்.[11]

**மாற்கு :** இயேசு மகாசத்தமாய்க் கூப்பிட்டு ஜீவனை விட்டார்.[12]

**லூக்கா :** இயேசு: பிதாவே, உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன் என்று மகாசத்தமாய்க் கூப்பிட்டுச் சொன்னார். இப்படிச் சொல்லி ஜீவனை விட்டார்.[13]

**யோவான் :** இயேசு காடியை வாங்கின பின்பு, முடிந்தது என்று சொல்லி, தலையைச் சாய்த்து ஆவியை ஒப்புக்கொடுத்தார்.[14]

### *10. இயேசு நேர்மையாளர் என்றும், தேவகுமாரன் என்றும் நூற்றுக்கதிபதி எப்போது கூறினான்?*

**மத்தேயு :** நூற்றுக்கு அதிபதியும் அவனோடகூட இயேசுவைக் காவல் காத்திருந்தவர்களும், பூமியதிர்ச்சியையும் சம்பவித்த காரியங்களையும் கண்டு மிகவும் பயந்து: மெய்யாகவே இவர் தேவனுடைய குமாரன் என்றார்கள்.[15]

**மாற்கு :** அவருக்கு எதிரே நின்ற நூற்றுக்கு அதிபதி அவர் இப்படிக் கூப்பிட்டு ஜீவனை விட்டதைக் கண்டபோது: மெய்யாகவே இந்த மனுஷன் தேவனுடைய குமாரன் என்றான்.[16]

**லூக்கா :** மெய்யாகவே இந்த மனுஷன் நீதிபரனாயிருந்தான் என்று சொல்லி, தேவனை மகிமைப்படுத்தினான்.[17]

### *11. அரிமெத்தியாவைச் சேர்ந்த யோசேப்பு என்பவர் யார்?*

அவர் இயேசுவுக்குச் சீஷன் என்று மத்தேயு கூறுகிறார். கனம் பொருந்திய ஆலோசனைக்காரனும், தேவனுடைய ராஜ்யம் வரக் காத்திருந்தவனுமாகிய யோசேப்பு என்று மாற்கும், லூக்காவும் கூறுகிறார்கள்.

அவர் யூதருக்குப் பயந்ததினால் இயேசுவுக்கு அந்தரங்க சீஷனாக இருந்தார் என்று யோவான் கூறுகிறார்.

*12.* செல்வந்தனான யோசோப்பு பிலாத்துவிடம் சென்று, இயேசுவினுடைய உடலைத் தரும்படி கேட்டுக் கொண்டார். பிலாத்து

எவ்வித விசாரணையும் செய்யாமல், இயேசுவின் உடம்பை எடுத்துச் செல்ல அனுமதித்தான் என்று மத்தேயுவும், யோவானும் கூற இயேசுவினுடைய மரணத்தை நூற்றுக்கதிபதியினாலே அறிந்து கொண்ட பின்பு இயேசுவின் உடம்பை எடுத்துச் செல்ல அனுமதித்தான் என்று மாற்கும், லூக்காவும் கூறுகிறார்கள். அவர் மாத்திரமே தனித்தவராக, ஒரு லினன் துணியால் இயேசுவின் உடம்பை சுற்றி, கன்மலையில் தோண்டப்பட்ட தமக்குச் சொந்தமான புதிய கல்லறையில் கொண்டு வைத்தார் என்று மத்தேயுவும், மாற்கும், லூக்காவும் சொல்லும்போது, யோசேப்பும், நிக்கொதேமுவும் ஆக இருவர் சேர்ந்து கல்லறையில் கொண்டு வைத்தார்கள் என்று யோவான் கூறுகிறார்.

இதைப்போலவே சிலுவை தண்டனைக்குப் பின்பு நடந்த உயிர்த்தெழுதல் போன்ற இயேசு சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளிலும் அவர்கள் கூறுவதில் வேறுபாடு இருக்கின்றது.

### *1. கல்லறைக்கு முதலில் வந்தது யார்? அவர் வந்தது எப்போது?*

வாரத்தின் முதலாம் நாள் விடிந்து வருகையில் மகதலேனா மரியாளும் மற்ற மரியாளும் கல்லறையைப் பார்க்க வந்தார்கள் என்று மத்தேயு கூறுகிறார்.

“அதிகாலையிலே சூரியன் உதயமாகிறபோது” என்று மாற்கு கூறுகிறார்.

“அதிகாலையிலே” என்று லூக்கா கூறுகிறார்.

“காலை அதிக இருட்டோடே” என்று யோவான் எழுதி இருக்கிறார்.

மேலும், இரண்டு மரியாள்கள் அங்கிருந்தனர் என்று மத்தேயுவும், மாற்கும் கூறும்போது, அவர்கள் மகதலேனாமரியாளும் யோவன்னாளும், யாக்கோபின் தாயாகிய மரியாளும் இவர்களுடனே கூட இருந்த மற்ற ஸ்திரீகளுமே என்று லூக்கா சொல்லுகிறார்.

ஆனால் மகதலேனா மரியாள் மாத்திரம் தனியாக வந்தாள் என்பது யோவானுடைய கருத்து.





### *2. பூமியதிர்ச்சியும் கர்த்தருடைய தூதரும்*

“அப்பொழுது, பூமி மிகவும் அதிரும்படி, கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்திறங்கி வந்து, வாசலிலிருந்த கல்லைப் புரட்டித்தள்ளி, அதின்மேல் உட்கார்ந்தான்” என்று மத்தேயு கூறுகிறார். மற்ற மூவரும் இந்த இயற்கையின் நிகழ்ச்சியாகிய பூமியதிர்ச்சியைப் பற்றியோ கல்லைப் புரட்டித் தள்ளி, தூதன் அதன்மீது உட்கார்ந்ததைப் பற்றியோ எதுவும் கூறவில்லை. அவர்களின் எழுத்துப்படி, கல்லின் மீது யாரும் உட்கார்ந்திருக்க வில்லை. இரண்டு மரியாள்களும் பிரவேசித்து வெள்ளையங்கி தரித்தவனாய் வலது பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு வாலிபனைக் கண்டு பயந்தார்கள் என்றும் மாற்கு கூறுகிறார். லூக்காவோ, இரண்டு பேர் இருந்தார்கள். ஆனால் அவர்கள் உட்கார்ந்திருக்க வில்லை, “நின்றார்கள்” என்று சொல்லுகிறார். இரண்டு தூதர்கள் தலைமாட்டில் ஒருவனும் கால் மாட்டில் ஒருவனுமாக கல்லறையினுள்ளே உட்கார்ந்திருந்தார்கள் என்று யோவான் கூறுகிறார்.

### *3. இயேசு உயிர்த்தெழுந்த செய்தியை வெளியிட்டவர் யார்?*

கல்லின்மீது உட்கார்ந்து கொண்டிருந்த தூதன் இரண்டு மரியாளையும் பார்த்து, “அவர் இங்கே இல்லை, அவர் உயிர்த்தெழுந்தார்” என்று அறிவித்ததாக மத்தேயு கூறும்போது, இதே விஷயத்தை கல்லறையின் உள்ளே உட்கார்ந்திருந்த ஒரு வாலிபன் அவர்களிடம் கூறியதாக மாற்கு கூறுகிறார்.

பெண்கள் கல்லறையினுள்ளே சென்று இயேசுவின் உடம்பைக் காணாதவர்களாய் கலக்கமுற்றிருந்தபோது, அருகே நின்று கொண்டிருந்த இரண்டு மனிதர்கள், “அவர் இங்கே இல்லை, அவர் உயிர்த்தெழுந்தார்” என்று கூறியதாக லூக்கா சொல்லுகிறார்.

யோவான் முற்றிலும் வித்தியாசப்பட்ட ஒரு கதையைக் கூறுகிறார். அவர் கூறுவதாவது: கல்லறையிலிருந்து கல் அகற்றப் பட்டதைக் கண்டதும், மகதலேனா மரியாள் பேதுருவினிடத்திலும், இயேசுவுக்கு அன்பாயிருந்த மற்ற சீஷனிடத்திலும் ஓடிப்போய், கர்த்தரைக் கல்லறையிலிருந்து எடுத்துக் கொண்டு போய்

விட்டார்கள். அவரை வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லை என்றும் கூறினாள். அதன் பேரில் அவர்கள் அவ்விடத்திற்கு ஓடிவந்து, கல்லறையினுள் ஒருவருக்குப்பின் ஒருவராக நுழைந்தார்கள். அங்கு லினன் சீலைகள் கிடக்கிறதையும், அவருடைய தலையைச் சுற்றியிருந்த சீலை தனியே ஒரு இடத்திலே சுருட்டி வைத்திருக்கிறதையும் கண்டார்கள். பின்பு அவர்கள் தங்களுடைய இடத்திற்கு திரும்பிப் போனார்கள். ஆனால் கல்லறையினருகே நின்று அழுது கொண்டிருந்த மரியாள், குனிந்து கல்லறைக்குள்ளே எட்டிப்பார்த்து இரண்டு தூதர்கள் உட்கார்ந்திருப்பதைக் கண்டாள். அவர்கள் அவளை நோக்கி: 'ஸ்திரீயே, ஏன் அழுகிறாய்?' என்று கேட்டார்கள். அவள் விடை கூறி முடித்ததும் பின்புறம் திரும்பி இயேசு நிற்கிறதைக் கண்டாள். அவள் அவரை முதலில் தோட்டக்காரன் என்றே எண்ணினாள். ஆனால் அவர் அவளிடம் பேசியபோது அவரை அறிந்து கொண்டாள்.

### *4. இயேசுவின் தூதும் அதனை வெளிப்படுத்தியவர்களும்*

கல்லின்மீது உட்கார்ந்திருந்த தூதன் இரண்டு மரியாள் களையும் பார்த்து கீழ்க்கண்டவாறு சொன்னதாக மத்தேயு கூறுகிறார்: "சீக்கிரமாய்ப் போய், அவர் மரித்தோரிலிருந்து எழுந்தார் என்று அவருடைய சீஷர்களுக்குச் சொல்லுங்கள். அவர் உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போகிறார்; அங்கே அவரைக் காண்பீர்கள்; இதோ உங்களுக்குச் சொன்னேன்." அவர்கள் போய்க் கொண்டிருந்த போது இயேசுவும் அவர்களைச் சந்தித்து அதே செய்தியை அவர்களுக்குக் கூறினார்.

அதே செய்தியை கல்லறைக்கு உள்ளே உட்கார்ந்திருந்த மனிதன் வெளிப்படுத்தினான் என்று மாற்கு கூறுகிறார்.

சீஷர்களுக்கு எந்தவிதமான செய்தியையும் அவ்விரு மனிதர்களும் வெளியிட்டதாக லூக்கா குறிப்பிடவில்லை.

"நான் என் பிதாவினிடத்திற்கும், உங்கள் பிதாவினிடத்திற்கும், என் தேவனிடத்திற்கும், உங்கள் தேவனிடத்திற்கும் ஏறிப்





போகிறேன்" என்று தமது சகோதரரிடத்தில் சென்று கூறுமாறு அவரே மரியாளைக் கேட்டுக் கொண்டதாக யோவான் கூறுகிறார்.

### *5. அவர்கள் இயேசுவின் செய்தியை அறிவித்தார்களா?*

மத்தேயு இதைப்பற்றி எதுவும் கூறவில்லை. ஆயினும் 28-ம் அதிகாரம் 16-ம் வசனத்திலிருந்து அவர்கள் அந்தச் செய்தியை அறிவித்தார்கள் என்றே தெரிகிறது.

அவர்கள் சீக்கிரமாய் வெளியேறி, திகைப்போடும், நடுக்கத் தோடும் ஓடினார்கள். அவர்கள் பயந்திருந்ததனால் ஒருவருக்கும் ஒன்றும் சொல்லவில்லை என்று மாற்கு சொல்லுகிறார்.

"இயேசு உயிர்த்தெழுந்தார்" என்று சீஷர்களிடம் ஸ்திரீகள் சொன்னதாக லூக்கா கூறுகிறார். இயேசு தன்னிடம் சொல்லியவற்றை மரியாள் அவர்களிடம் அறிவித்தாள் என்று யோவான் கூறுகிறார்.

### *6. அவர்கள் அந்தச் செய்தியை எவ்வளவு தூரம் ஏற்றுக் கொண்டார்கள்?*

மத்தேயு அதைப்பற்றி எதுவும் கூறவில்லை.

"அவர் உயிரோடிருக்கிறாரென்றும் அவர்களுக்குக் காணப்பட்டார் என்றும் அவர்கள் கேட்டபொழுது, நம்பவில்லை" என்று மாற்கு கூறுகிறார்.

அவர்கள் வார்த்தைகள் அவர்களுக்கு வீண் கதைகளாகத் தோன்றியதாகவும், அவர்கள் நம்பவில்லை என்றும் லூக்கா இயம்புகிறார். யோவானோ, இவ்விஷயத்தைக் குறித்து ஏதும் கூறவில்லை.

### *7. இயேசு அவர்களை முதலில் எங்கு சந்தித்தார்?*

(விவரத்தை அவர்கள் கேள்விப்பட்ட உடனே) பதினொரு சீஷர்களும் கலிலேயாவிலே இயேசு தங்களுக்குக் குறிப்பிட்டுச் சொல்லியிருந்த ஒரு மலைக்குப் போனார்கள். அங்கே அவர்கள் அவரைக் கண்டு பணிந்து கொண்டார்கள். சிலரோ சந்தேகப்பட்டார்கள் என்று மத்தேயு கூறுகிறார்.

முதலில் அவர் மரியாளுக்குத் தரிசனமானார். பின்னர் வேறொரு உருவத்தில் அவர்களில் இரண்டு பேருக்குத் தரிசனமானார். அதற்குப் பின்னர், அவர்களில் பதினொரு பேர் உணவருந்த உட்கார்ந்திருந்த போது அவர்களுக்குத் தோன்றி, அவர்களது அவிசுவாசத்தைக் குறித்தும், இருதய கடினத்தைக் குறித்தும் அவர்களைக் கடிந்து கொண்டார். ஏனெனில் உயிர்த்தெழுந்த பிறகு, "இயேசுவைக் கண்ணுற்றவர்களை அவர்கள் நம்பவில்லை" என்று மாற்கு கூறுகிறார்.

மத்தேயு கூறுவதை அப்பட்டமாக மறுக்கிறார் லூக்கா. இயேசு உயிர்த்தெழுந்த அன்று மாலையே, எருசலேமில் வைத்து, தமது பதினொரு சீஷர்களையும் சந்தித்ததாக அவர் கூறுகிறார்.

"யூதர்களுக்குப் பயந்ததினால்"[18] (அதாவது யூதர்களுக்குப் பயந்து கொண்டு) சீஷர்கள் ஒருமித்துக் கூடியிருந்த இடத்திற்கு எதிர்பாராதவண்ணம் இயேசு வந்தார் என்று சொல்லுவதன் மூலம் லூக்கா கூறுவதையே யோவான் வலியுறுத்துகிறார்.

வாதியின் நான்கு சாட்சிகளுடைய வாக்குமூலத்திலிருந்து எடுக்கப்பட்ட மேலே கண்ட உதாரணங்களால், நாம் கீழ்க்கண்ட விஷயங்களை முடிவு செய்கிறோம்.

1. இந்த சொற்களைக் கர்த்தருடைய வார்த்தை என்றோ, அல்லது கர்த்தரால் அருளப்பட்டவை என்றோ சொல்ல முடியாது.

2. நான்கு சாட்சியங்களில் ஒன்றுகூட கண்ணால் கண்ட ஒருவருடைய சாட்சியமாகவோ, நம்பத்தக்க ஆதாரங்களை அடிப்படை யாகக் கொண்டதாகவோ நமக்குத் தோன்றவில்லை. உதாரணமாக இயேசு சிறைபிடிக்கப்படும்போது, பிரதான ஆசாரியர்களும், மூப்பர்களும் அங்கே இருந்தார்கள் என்று ஒருவர் கூறுகையில் மற்றொருவர் அதனை மறுக்கிறார். சீடர்களைச் சந்திப்பதற்காக கலிலேயாவிலுள்ள ஒரு மலையை இயேசு குறிப்பிட்டுச் சொன்னார் என்றும், அங்கேயே அவர்களைச் சந்தித்தார் என்றும் ஒருவர் சொல்லுகிறார். 'அவர் அவர்களை எருசலேமில் சந்தித்தார்' எனறு மற்றவர் கூறுகிறார். இயேசுவைச்





சீஷர்கள் சந்திக்கும் வேளையில், பதினொரு சீஷர்களும் பிரசன்னமாகியிருந்தார்கள் என்று இரண்டு சுவிசேஷர்கள் கூறுவதால் கலிலேயாவில் எந்த இடத்தில் வைத்து அவரைச் சந்திக்க வேண்டுமென்று சீஷர்கள் தெளிவாக அறிந்திருந்தார்கள். ஆகவே இந்த முரண்பாடான விவரங்கள் சீஷர்களால் எழுதப்பட்டிருக்க முடியாது. இதைப்போன்றே, யூதாஸ் இயேசுவின் கையை முத்தமிட்டு அதன் மூலம் அவரை கூட்டத்தாருக்கு இனம் காட்டிக் கொடுத்தான் என்று ஓரிருவர் கூறும்போது இயேசுவே தம்மைக் கூட்டத்தாருக்கு அறிவித்தார் என்று மற்றொருவர் சொல்லி முந்தியதை மறுக்கிறார்.

இன்னும் தொடர்ந்து கூறப்போனால் அவரவரது சாட்சியத்துக் குள்ளேயே முரண்பாடுகள் உள்ளன. ஆகவே இந்த விவரங்கள் யாவும் கண்ணால் கண்டவர்களுடைய சாட்சியங்களல்ல. அதற்கு மாறாக காதால் கேட்ட விஷயங்களை அடிப்படையாகக் கொண்டு இவை எழுதப்பட்டிருப்பதோடு, எவ்விடத்திலிருந்து அந்தத் தகவல்கள் கிடைத்தன என்பதையும் நமக்குத் தெரிவிக்க வில்லை. இந்த விவரங்களை எழுதியவர்கள் 'இயேசுவின் சீடர்கள்' என்று ஒப்புக்காக வைத்துக் கொண்டால்கூட 'இயேசு சிலுவையில் மரித்தார்; மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்தார்' என்ற சாட்சியங்களை நாம் உண்மையாகக் கருத முடியாது. ஏனெனில் இயேசு கிறிஸ்துவை சிறைப்பிடிக்கும் போது அவரது சீடர்கள் அவரை விட்டு விட்டு ஓடிப்போய் விட்டார்கள். பிரதான ஆசாரியனுடைய அரண்மனைக்கு இயேசுவுடன் சென்ற பேதுரு, மூன்று முறை வேண்டுமென்றே பொய் சொன்னதாக, நான்கு சாட்சிகளாலும் குற்றம் சுமத்தப்பட்டிருக்கிறார். இயேசு மரணமடைந்ததாகக் கருதப்பட்டபோதோ அவர் உயிர்த்தெழுந்த தாகக் கருதப்பட்டபோதோ இந்த சாட்சியங்களின்படி இயேசுவின் சீடர்களில் ஒருவர்கூட நேரில் அங்கு இருக்கவில்லை. உலக மக்களின் "இரட்சிப்பு" க்கு எந்த விஷயங்கள் அவசியமானவை என்று வாதியானவர் வாதிடுகிறாரோ, அந்த முக்கியமான விஷயங்களை நிரூபிப்பதற்குப் போதுமான சாட்சியங்கள் இல்லை. இவ்வாறு கூறுவதைத் தவிர எங்களுக்கு வேறு ஒரு வழியும் இல்லை.

இப்போது நாங்கள் பிரதிவாதியினுடைய சாட்சியத்திலிருந்து முக்கியமான கருத்துக்களை மாத்திரம் சுருக்கமாகக் கீழே தந்திருக்கிறோம். பிரதிவாதி தமது சாட்சியத்தில், 'இயேசு கிறிஸ்து சபிக்கப்பட்ட மரணமடைந்தார்' என்ற குற்றச்சாட்டை மறுத்துரைத்து சிலுவையிலிருந்து கீழே இறக்கப்படும் பொழுது இயேசு மயக்கமுற்ற நிலையில் இருந்தார் என்று கூறியிருக்கிறார்.★

1. மூன்று மணி நேரம் சிலுவையில் தொங்குவதானது மரணம் சம்பவிப்பதற்குப் போதிய நேரம் அல்ல. சில வேளைகளில் மூன்று நாட்கள் வரையிலும் சிலுவையில் அறையப்பட்டவன் மரணித்ததில்லை.★★

2. இயேசு அவ்வளவு சீக்கிரத்தில் எப்படி மரணித்திருக்கக் கூடும் என்று பிலாத்து ஆச்சரியப்பட்டார்.[20] இயேசு சிலுவையில் தொங்கிய நேரம் அவர் மரித்துப் போவதற்குப் போதிய நேரமல்ல என்ற அவரது அனுபவம்தான் அவர் ஆச்சரியப் பட்டதற்குக் காரணம். பிலாத்து, யோசேப்பு, நூற்றுக்கதிபதி ஆகிய மூன்று பேரும் இயேசுவின் பேரில் அனுதாபம் கொண்டவர்களாய் இருந்தார்கள். இயல்பாகவே அவர்கள் இயேசுவை மரணத்திலிருந்து காப்பாற்ற விரும்பினார்கள்.

3. இயேசு சிலுவையில் தரித்திருந்த அதே அளவு நேரத்திற்கு, சிலுவையில் அறையுண்டு கிடந்த இரண்டு கள்ளர்களும் உயிரோடே இருந்தார்கள். அவர்களைக் கொல்லுவதற்காக

★ முந்திய அத்தியாயத்தில் ஏற்கனவே ஆராயப்பட்டுள்ள கருத்துக்கள் இங்கு நீக்கப்பட்டுள்ளன.

★ நூற்றுக்கதிபதி உள்ளிட்ட காவல் வீரர்களின் திட்டவட்டமான நோக்கம், இயேசுவின் சடலத்தை சீஷர்கள் அப்புறப்படுத்திவிடாமல் தடுப்பதேயாகும். சில வேளைகளில் சிலுவையில் அறையுண்டவர்கள் மூன்று தினங்களாகியும் மரிப்பதில்லை. உறுப்புகள் செயலற்றுப் போவதாலும், பட்டினியாலும் இறுதியில் மரணம் நேர்கிறது. சிலுவையின் மீது ஏற்படும் மரணம் இத்தகைய உறுதியற்ற தன்மையுடையதாய் இருந்ததாலேயே, காவல் போட வேண்டியது அவசியமாயிற்று. காவல் மட்டும் இல்லாதிருந்தால் சிலுவையில் அறையுண்டவர்கள், கீழே இறக்கப்பட்டுக் காப்பாற்றப் பட்டிருக்கக் கூடும். ஜோசபஸின் நண்பருடைய விஷயத்தில் இவ்வாறே மூன்று பேர் சிலுவையிலிருந்து கீழேயிறக்கப்பட்டார்கள்; அவர்களில் ஒருவர் பிழைத்துக் கொண்டார்.[19]





அவர்களது கால்கள் முறிக்கப்பட்டன. ஆனால் இயேசு இக்கொடிய சோதனையிலிருந்து தப்பித்துக் கொண்டார்.[21]

4. பழங்கால ஓவியங்களில் தீட்டப்பட்டிருப்பதைப் போல அவருடைய வலது விலாப்புறத்தை ஒரு ஈட்டியால் போர்ச் சேவகன் குத்திய போது இரத்தமும் தண்ணீரும் வெளிவந்தது.[22] இது அவருக்கு உயிர் இருந்தது என்பதற்கும், இரத்த ஓட்டமும் அவருக்கு இருந்தது என்பதற்கும் தெளிவான அடையாளமாகும்.

5. சிலுவையை விட்டு அவரைக் கீழே இறக்கிய பின்னர் அவரது உடல் அவரது நண்பர்களிடமே ஒப்புவிக்கப்பட்டது. அவரது விரோதிகளிடமல்ல.[23]

6. அவரது உடலை கைப்பற்றுவதற்காக அவரது நண்பர்கள் அவசர அவசரமாக முயற்சி செய்தது, அவரைக் காப்பாற்றுவதற்கு அவர்கள் கொண்டிருந்த விருப்பத்தைத் தெரிவிக்கிறது. அவர் மரணமடைந்து விட்டார் என்று அவர்கள் கருதவில்லை என்பது வெளிப்படையாகவே தெரிகிறது.

7. அவரது கல்லறைக்கு ஒரு காவலாளியை நியமிப்பதற்கு யூதர்கள் எடுத்துக் கொண்ட முயற்சியிலிருந்துகூட இயேசு மரணித்து விட்டார் என்ற நம்பிக்கை அவர்களுக்கு இல்லை என்பது விளங்குகின்றது. அவர் நிச்சயமாக மரணித்து விட்டார் என்ற உறுதி அவர்களுக்கு ஏற்பட்டிருந்தால், அவருடைய உடலை சீஷர்கள் திருடிக்கொண்டு சென்றாலும்கூட அவர்கள் பொருட்படுத்தியிருக்க மாட்டார்கள். "அவனுடைய சீஷர்கள் இராத்திரியிலே வந்து அவனைக் களவாயக் கொண்டு போய், மரித்தோரிலிருந்து எழுந்தானென்று ஜனங்களுக்குச் சொல்லாதபடி"[24] காவல் போடப் பட்டிருந்தது என்று காட்டப்படும் காரணம் கேலிக்கூத்தாக இருக்கிறது. ஏனென்றால், அவர் உண்மையிலேயே உயிர்தெழுந் திருந்தால் அவரே மக்கள் மத்தியில் வந்து தோன்றக்கூடும் என்று அவர்கள் சொல்லி யிருப்பார்கள். பின்னர் அவரை மீண்டும் சிறைபிடித்திருப் -பார்கள். அவர்கள் காவல்போட வேண்டுமென்று வேண்டிக்

கொண்டதன் உண்மையான காரணம் அவர் மரித்து விட்டார் என்ற உறுதிப்பாடு அவர்களுக்கு ஏற்படாதிருந்ததே ஆகும்.

8. இயேசுவைச் சிலுவையிலறைந்து கொல்ல பிலாத்துவுக்கு விருப்பம் இல்லை. அவரை விடுதலை செய்து பார்ப்பதைவிட பிலாத்துவுக்கு மனமகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடியது வேறொன்றுமில்லை. உண்மையில் அவர் மறைமுகமாகவும், இரகசியமாகவும் அவரைக் காப்பாற்றுவதற்கான உதவிகளைச் செய்தார். இயேசுவை எதிகளிட மிருந்து விடுவிப்பதற்காகத் தம்மாலியன்ற எல்லாவற்றையும் செய்யும்படி, அவரது மனைவி கண்ட கனவு அவரைத் தூண்டி இருக்க வேண்டும்.

9. இயேசுவின் கால்களை ஒடித்து அவரது மரணத்தை உறுதிப் படுத்துவதைத் தவிர்த்துக் கொண்ட நூற்றுக்கதிபதியும், போர்ச்சேகவர்களும் காவல் நேரத்தில் உறங்கிவிட்டதாக நடித்துவிட்ட காவல் சேவகர்களும், தங்கள் கவர்னர் பிலாத்துவைப் போலவே இயேசுவினிடத்தில் அனுதாபங்கொண்டவர்களாய் இருந்திருக்கக்கூடும்.

10. இயேசு கிடத்தப்பட்டிருந்த கல்லறை கன்மலையில் தோண்டப் பட்டதோடு மூச்சுத் திணறல் இல்லாமல் பல பேர் உள்ளே தங்கியிருக்கக்கூடிய ஓர் அகன்ற அறையைப் போன்றிருந்தது. அக்கல்லறை அவர் மீது அன்பு செலுத்திய ஒரு நண்பருடைய நிலத்தில் இருந்தது. அந்த நண்பரே அவரை மயக்கம் தெளிவித்து சுகப்படுத்துவதில் மிகுந்த கவனம் செலுத்தியிருக்க வேண்டும்.

ஒய்வு நாளுக்கு அடுத்த நாளான ஞாயிறு அன்று, மேலே சொன்ன இடத்தை (கல்லறையை) பார்வையிடுவதற்கு யூதர்களுக்கு வேண்டிய அளவு நேரம் இருந்தது. அதிகாலையில் இன்னும் இருள் சூழ்ந்துள்ளபோதே - இயேசு அவ்விடத்தில் இல்லை. கல்லறையின் வாயில்புறக் கல் உருட்டித் தள்ளப்பட்டு விட்டிருந்ததோடு, கல்லறையின் உட்புறம் இயேசுவின் உடலும் காணப்படவில்லை. சிறிது நேரம் கழித்து, மரியாள் அவரைப்





பார்த்து தோட்டக்காரன் என்று நினைத்துக் கொண்டாள்.[25] யூதர்களால் அடையாளம் கண்டு கொள்ள முடியாதவாறும் மீண்டும் சிறைப்பிடிக்கப்பட்டு மறுபடியும் சிலுவையில் அறையப்படாதவாறும் இருப்பதற்காக அநேகமாக அவர் தோட்டக்காரனுடைய வேஷத்தைப் போட்டுக் கொண்டிருக்க வேண்டும்.

11. அவ்விடத்தைவிட்டு தூரத்து மாநிலமாகிய கலிலேயாவுக்குப் போகும்படித் தமது சீஷர்களுக்கு அவர் தூதுச் செய்தி அனுப்பினார். அவர் அவர்களுக்கு முன்னதாகவே அங்கு சென்று சீடர்களை அவ்விடத்தில் கண்டு கொள்ளுவதாகவும் சொல்லியிருந்தார்.[26] எருசலேமை விட்டு மிக வேகமாக வெளியேறினார். ஏனென்றால், அவர் கல்லறையைவிட்டு வெளியே போய் விட்டார் என்பதை யூதர்கள் வெகு சீக்கிரத்தில் அறிந்து கொண்டு, அவரைத் தேட ஆரம்பித்து விடுவார்கள் என்பதை அவர் அறிந்திருந்தார்.

12. யூதர்களால் மீண்டும் சிறை பிடிக்கப்படாமல் இருக்க எல்லா விதமான முன்னேற்பாடுகளையும் அவர் செய்து கொண்டார். அவர் தமது சீடர்களை மாத்திரமே சந்தித்தார். அதுவும் பகிரங்கமாக அல்ல. இரகசியமாக அல்லது ஒதுக்குப்புறமான இடங்களில் மட்டுமே சந்தித்தார். அப்படியிருந்தும் அவர் அவர்களுடன் வெகு நாட்கள் தங்கவில்லை. பகிரங்கமாக மக்கள் மத்தியில் வந்து தோன்றவும் இல்லை.[27] ஆனால் பசியினாலும் தாகத்தாலும் துன்புற்றார். அவர் தம்முடைய சீடர்களைச் சந்தித்ததும், அவர்களிடமிருந்து தமக்கு ஏதும் உண்ணுவதற்குக் கிடைக்குமா என்று கேட்டு, அவர்கள் முன்னிலையிலேயே உணவருந்தினார்.[28] அவரை 'ஒரு ஆவி' என்று எண்ணிய அவரது சீடர்களிடத்தில் "நான்தான் என்று அறியும்படி என் கைகளையும் என் கால்களையும் பாருங்கள், என்னைத் தொட்டுப் பாருங்கள்; நீங்கள் காண்கிறபடி, எனக்கு மாமிசமும், எலும்புகளும் உண்டாயிருக்கிறது போல ஒரு ஆவிக்கு இராதே" என்று கூறினார்.[29]

மற்ற சீடர்கள் இயேசுவை ஏற்கனவே கண்டு விட்டார்கள் என்பதில் சந்தேகம் கொண்ட தோமாவை தமது உடற்காயங்களில் விரலை நுழைத்துப் பார்க்கும்படி இயேசு கூறினார்.[30]

"இயேசுவின் களிம்பு" அல்லது "அப்போஸ்தலர் களிம்பு" என்பது இயேசுவின் காயங்களைக் குணப்படுத்துவதற்காக அவருடைய சீடர்களால் தயாரிக்கப்பட்ட மருத்தாகும்.

இந்தக் காரணங்கள் எல்லாம் இயேசு, அவருடைய காயம்பட்ட உடலோடேயே கல்லறையைவிட்டு வெளியே வந்தார் என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. இந்த சாட்சியத்தை வாதி (கி) என்வரால் கொடுக்கப்பட்ட சாட்சியத்தோடு ஒப்பிட்டதில், பிரதிவாதி (மு) என்பவரின் விளக்கம் புத்திக்குப் பொருந்தியதாகவும், ஏற்றுக் கொள்ளுவதற்குத் தகுதியுடைய தாகவும் இருக்கிறது. நாங்கள் ஆராய்ந்து பார்த்ததின் பலனாக நம்பத்தகுந்ததும், திருப்திகரமானதுமான ஆதாரங்கள் சமர்ப்பிக்காத காரணத்தால் வாதி (கி) என்பவர் இவ்வழக்கில் தோற்றுவிட்டார் என்பதை அறிவிக்கிறோம். அதற்கேற்றபடி இயேசு சிலுவையில் மரித்தார் என்பதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை என்று நாங்கள் தீர்மானிக்கிறோம். எனவே அவர் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்திருக்க முடியாது. சிந்திக்கும் திறனுள்ள ஒரு மனிதன், வாதியுடைய நான்கு சாட்சிகளின் முரண்பாடான வாக்குமூலங்களிலிருந்து கீழே இறக்கப்படும் போது இயேசு மரணிக்கவில்லை என்பதைக் கண்டு கொள்ளுவான். அவர் மயங்கி விட்டார். பின்னர் மயக்கத்திலிருந்து தெளிவு பெற்றார். கல்லறையிலிருந்து அழிந்து போகக்கூடிய மனித உடலோடேயே வெளி வந்தார். இயேசு ஆவியாக வெளிவந்தார் என்றால் அவரது பூத உடல் எங்கே போயிற்று? என்ற கேள்விக்கு வாதி (கி) என்பவர் விடை சொல்லத் தவறிவிட்டார்.

இதைப்போன்றே, இயேசு கிறிஸ்துவுக்கு அவரது நண்பர்கள் உதவி செய்திருக்காவிட்டால், மதகலேனா மரியாள் அவரை "தோட்டக்காரன்" என்று கருதிய வேளையில், அவளுக்குக் காட்சி அளிக்கையில் அணிந்திருந்த அந்த உடையை அவர் எங்கிருந்து பெற்றுக் கொண்டார்? என்ற கேள்விக்கும் அவரால் விடையளிக்க





முடியவில்லை. அவர் கொஞ்சம் உடை உடுத்திருந்தார். இந்த உடைகள் எங்கிருந்து வந்தன? அவருக்குச் சொந்தமான உடைகள் காவல் சேவகர்களால் எடுத்துக் கொள்ளப்பட்டுவிட்டன. சவ அடக்கச் சீலைகளோ கல்லறையிலே கிடந்தன.

எல்லாவற்றுக்கும் மேலாக, இயேசுவின் உடலைப் பெற்றுக் கொண்டு, அதனைக் கல்லறையிலேயே கிடத்தியதுமல்லாமல், பின்னால் என்ன நடந்தது என்பதையும் தங்கள் கண்களால் கண்ட இரண்டு சாட்சிகள் அதாவது அரிமெத்தியா யோசேப்பும் நிக்கொதேமுவும் வாதியினால் விசாரணைக்கு அழைக்கப்பட வில்லை. இந்த இருவரும், "இயேசு மரித்தோரிலிருந்து உயிர்த் தெழுந்தார்" என்று நம்பியதாக நான்கு எழுத்துச் சான்றுகளிலும் ஆதாரம் இல்லை.

ஆகவே, அவருடைய வழக்கைத் தள்ளுபடி செய்வதைத் தவிர எங்களுக்கு வேறு வழி இல்லையாதலால், நாங்கள் இவ்வழக்கைத் தள்ளுபடி செய்கிறோம்.

(ஒப்பம்) நீதிபதி (1) (ஒப்பம்) நீதிபதி (2)

## தகவல் நூல்கள் மற்றும் குறிப்புகள்


1. லூக்கா 22 : 52
2. மத்தேயு 26:47-49
3. யோவான் 18 : 3,8,10,12
4. மத்தேயு 27:3-8
5. அப் நடபடிகள் 1 : 18
6. மத்தேயு 27:32,33
7. யோவான் 19 : 17
8. லூக்கா 23:39-43
9. மாற்கு 15 : 25
10. யோவான் 19:14
11. மத்தேயு 27 : 50
12. மாற்கு 15:37
13. லூக்கா 23 : 46
14. யோவான் 19:30
15. மத்தேயு 27 : 54
16. மாற்கு 15:39
17. லூக்கா 23 : 47
18. யோவான் 20:19
19. சர். வில்லியம் ஸ்மித், சங்கை. ஜே.எம்.ஃபுல்லர் எம்.ஏ. ஆகியோர் தயாரித்த பைபிள் அகராதி, இலண்டன் 1893 தலைப்பு : சிலுவை தண்டனை
20. மாற்கு 15 : 44
21. யோவான் 19 : 32,33
22. யோவான் 19 : 34
23. யோவான் 19 : 38
24. மத்தேயு 27 : 64
25. யோவான் 20 : 15
26. மத்தேயு 28 : 7
27. அப் நடபடிகள் 10 : 41
28. லூக்கா 24 : 42
29. லூக்கா 24 : 38,39
30. யோவான் 20 : 27

## அத்தியாயம் - 3

# உயிர்த்தெழுதல் பற்றிய கதைக்குப் பொருத்தமான விளக்கம்

சுவிசேசகர்களுடைய எழுத்துக்களை முழுமையாக ஆராய்ந்து பார்த்த இரண்டு கல்விமான்கள், சுவிசேஷங்கள் நான்கிலும் குறிப்பிடப்பட்டுள்ள உயிர்த்தெழுதல் பற்றிய கதைக்கு ஒரு பொருத்தமான விளக்கத்தை அளித்துள்ளனர். அந்த விளக்கத்தை நான் கீழே தந்திருக்கிறேன்.

1) பேராசிரியர் ஹென்ரி இபர்ஹாடு காட்லோபி பவுலுஸ் (1761-1861) என்பவர் 1789-ல் ஜீனா **(Jena)** வுக்கு கீழ்த்திசை மொழிப் பேராசிரியராகச் சென்று 1793-ல் மார்க்கக் கல்விப் பிரிவில் மூன்றாவது சாதாரணப் பேராசிரியராகத் தொடர்ந்து பணியாற்றினார். 1807 லிருந்து 1811 வரையிலும் பவேரியன் கல்விச்சபையில் உறுப்பினராக இருந்தார். 1811ல் மார்க்கக் கல்விப் பேராசிரியராக ஹைடல்பெர்க்கு சென்று தமது இறுதிக் காலம் வரையிலும் அங்கேயே போதித்து வந்தார். அவர் 'தி லைஃப் ஆஃப் ஜீஸஸ்' (1828) என்ற புத்தகத்தில் இவ்வாறு எழுதுகிறார்:

"கைகளில் ஆணி அறையப்பட்ட காயத்தோடும், இயற்கையான மனித உடலோடும் சீஷர்கள் அவரைக் கண்டதையும் இயேசு அவர்களுக்கு முன்பாக உணவு உண்டதையும் நாம் உண்மையான நிகழ்ச்சிகள் என்று நம்புவதாக இருந்தால், இயேசு உயிர்த்தெழுந்ததை, 'அகால வயதில் உயிரோடு புதைத்தல்' என்ற வகையில்தான் சேர்க்க வேண்டும். திடீரென்று உடலில் ஏற்படும் குளிர்ச்சி, நடுக்கம் ஆகியவற்றால் உண்டாகும் விறைப்பு கொஞ்சங் கொஞ்சமாக உடலின் உட்புறத்தில் பரவி சிலுவை தண்டனை பெற்றவர்கள் மரித்துப் போகிறார்கள். மரண தண்டனைகளிலிலேயே மிகவும் மெதுவாக நேரங்கடந்து மரணம் ஏற்படுத்தக்கூடிய முறை இது. டெகோவா என்னுமிடத்தில் சிலுவையில் அறையப்பட்ட தமக்குத் தெரிந்த மூன்று பேரை சிலுவையி லிருந்து கீழேயிறக்கிக்





கொள்ள அனுமதி கிடைத்தது என்றும், டைட்டஸ் தமக்களித்த ஆதரவின் பேரில் இவ்வனுமதி கிடைத்ததென்றும், அவர்களில் இருவர் மரணமடைந்து விட்டனர்; ஆனால் ஒருவன் பிழைத்து விட்டான் என்றும் ஜோசபஸ் தமது 'காண்ட்ரா அபாய்னம்' என்னும் நூலில் குறிப்பிட்டிருக்கிறார். எது எப்படியாயினும் (சுவிசேஷங்கள் கூறுகிறபடி பார்த்தால்) இயேசுவோ ஆச்சரியப்படத்தக்க வகையில் மிகச் சீக்கிரத்திலேயே மரித்து விட்டார். அவருடைய தலை சாய்வதற்குச் சற்று முன்பு அவர் உரக்கச் சப்தமிட்டதிலிருந்து அவருக்கு உடல்பலம் ஏராளமாக இருந்திருக்கிறது என்பதையும், பின்னர் நிகழ்ந்தது மரணத்தைப்போல் தோற்றம் தரும் மயக்கமே என்பதையும் அறிகிறோம். இத்தகைய மயக்கங்களில் உடல் அழுகத் தொடங்கும்வரை சப்தம் வந்து கொண்டிருக்கும். இதுவே, நடக்க வேண்டியதெல்லாம் நடந்து முடிந்து விட்டது என்பதையும், மரணம் சம்பவித்து விட்டது என்பதையும் நிரூபிக்க வேண்டியதாயிருக்கிறது. சர்வ வல்லமையுள்ள இறைவன், தனக்குப் பிரியமான இயேசுவுடைய சார்பில் மர்மமான முறையில் உதவியிராவிட்டால் மற்றவர்களுக்கு நடந்ததுபோலவே இயேசுவுடைய விஷயத்திலும் அவரது உயிர் நாடியான ஒளி கொஞ்சங் கொஞ்சமான அணைந்து போயிருக்கும். சில சமயங்களில் மனிதர் களுடைய திறமையாலும், கவனத்தாலும் சிலருடைய விஷயத்தில் இது போன்ற (உயிர் தப்பிய) சம்பவம் இன்னும் தெளிவான முறையில் நடந்தேறியிருக்கிறது. இயேசுவின் உடலில் ஈட்டி பதிந்த காயமானது, சருமத்தின் மேல் பகுதியிலுள்ள ஒரு சாதாரணக் காயம் தான் என்று நினைக்கக்கூடிய அளவில் இருந்தாலும், பெருமளவு இரத்தத்தை வெளியேற்றுவதற்கு அது பெரிதும் உதவியாக இருந்தது. குளிர்ச்சியான கல்லறை, உடலின் மீது பூசப்பட்ட வாசனைமிக்க களிம்பு - இவை இரண்டும் சேர்ந்து அவர் உயிர் பெற்றெழுதவற்குத் தேவயையான காரியங்களைத் தொடர்ந்து செய்தன. இறுதியில், புயலும் பூமியதிர்ச்சியும் ஏற்பட்டு அதன் காரணமாக இயேசு முழு உணர்வு பெற்றவரானார். அதிர்ஷ்டவசமாக கல்லறையின் வாசலை அடைத்திருந்த கல்லைப் பூமியதிர்ச்சியே புரட்டித் தள்ளி விட்டது. கல்லறை உடைகளைக்

கர்த்தர் களைந்து எறிந்து விட்டுத் தோட்டக்காரனுடைய உடையை அணிந்து கொண்டார். யோவான் 20:15ல் கூறப்பட்டுள்ளபடி, மரியாள் அவரைத் தோட்டக்காரன் என்று எண்ணுவதற்கு அதுவே காரணமாக இருந்தது. இந்தப் பெண் மூலமாகவே தம்மை கலிலேயாவில் வந்து சந்திக்கும்படி, சீடர்களுக்குக் கட்டளையிட்டதாகச் செய்தி சொல்லியனுப்பி விட்டுத் தாமும் அங்கு செல்லுவதற்கு இயேசு புறப்பட்டார். எம்மாவு என்ற இடத்தில், மாலை மயங்கிக் கொண்டிருந்த வேளையில், தம்மைப் பின்பற்றியவர்களில் இருவரை அவர் சந்தித்தார். துன்பச்சுமை காரணமாக அவரது முகம் பெரிதும் மாறுபட்டிருந்ததால், முதலில் அவரை அடையாளம் கண்டு கொள்ள அவர்கள் தவறி விட்டனர். அப்பத்தைப் பிட்டு அவர் துதி செய்த முறையும் உயரே தூக்கிய கைகளில் காணப்பட்ட ஆணியறைந்த காயங்களும் அவர் யாரென்பதை அவர்களுக்குக் காட்டிக் கொடுத்து விட்டன. அவர்களிடமிருந்து, தமது சீஷர்கள் எங்கிருக்கிறார்கள் என்பதை அறிந்துகொண்டு எருசலேமுக்குத் திரும்பி வந்து, எதிர்பாராத வண்ணம் அவர்களின் மத்தியில் தோன்றுகிறார். சீஷர்களைக் கலிலேயாவுக்குப் போகுமாறு, ஏவிவிட்டு இயேசு கிறிஸ்து எருசலேமில் வந்து தோன்றியதிலுள்ள முரண்பாட்டிற்கு இதுவே தெளிவான விளக்கமாகும்.”

“இந்த முறையில் சீஷர்களோடு அவர் நாற்பது தினங்கள் வாழ்ந்திருந்தார். இந்நாட்களில் ஒரு பகுதியை அவர் சீஷர்களோடு கலிலேயாவில் கழித்தார். அவர் அனுபவித்த துன்பங்களின் விளைவாக தொடர்ந்து பணியாற்றும் திறன் அவரிடத்தில் இல்லை. யாருக்கும் தெரியாமல் வாழ்ந்து கொண்டு, பலத்தைத் திரட்டிக் கொண்டு சொற்ப நேரத்திற்கு மாத்திரமே தம்மைப் பின்பற்றியவர்களுக்கு மத்தியில் தோன்றினார். அத்தகைய நேரங்களிளெல்லாம் அவர்களுக்குப் போதித்தார். தமது முடிவு காலம் நெருங்கிக் கொண்டு வருவதை அவர் உணர்ந்தபோது எருசலேமிற்குத் திரும்பி வந்தார். ஒலிவ மலை உச்சியில் அதிகாலை நேரத்தில் கடைசி முறையாக தமது சீடர்களை ஒன்று திரட்டினார். அவர்களை





ஆசீர்வதிப்பதற்காக தமது கைகளை உயரே தூக்கி ஆசீர்வதித்தபடி, தூக்கிய கைகளோடு அப்படியே அவர்களை விட்டு அகன்று சென்றார். அவர்களுக்கும் அவருக்கும் மத்தியில் ஒரு மேகம் நுழைந்து கொண்டு அவர்கள் அவரைப் பார்க்க முடியாதபடிச் செய்து விடுகிறது. அவர் மறைந்ததும் அவர்களுக்கு முன்னே, வெள்ளை உடையணிந்த கண்ணியமிக்க இரண்டு பேர் நின்றார்கள். அவர்கள் உண்மையில் எருசலேமிலுள்ள இயேசுவின் இரகசிய சீடர்களைச் சேர்ந்தவர்கள். அவர்கள் இருவரும் சீடர்களிடம் அங்கே காத்திருக்க வேண்டாமென்றும், விழிப்புணர்ச்சி பெற்றுச் செயலாற்ற வேண்டும் என்றும் ஆலோசனை கூறினார்கள்.”

“உண்மையில் இயேசு எங்கே மரித்தார்? என்பது அவர்களுக்கு ஒருபோதும் தெரியாது. ஆகவே, அவர் பிரிந்து சென்றதை, பரலோகத்துக்கு ஏறிச் சென்றார் என்று அவர்கள் வருணிக்க ஆரம்பித்தனர்.”

2) சிட்னியிலுள்ள மாவட்ட நீதிபதியாகிய திருவாளர் ஏனெஸ்ட் பிரௌஹாம் டோக்கர் என்பார் ‘இஃப் ஜீசஸ் டிட் நாட் டை அப்பான் தி கிராஸ்” (1920) என்ற பயன்மிக்க நூல் ஒன்றை இயற்றியிருக்கிறார். அதில் ஒரு நீதிபதி, வழக்கிலுள்ள சாட்சியங்களை ஆராய்ந்து பார்ப்பது போன்று, சுவிசேஷங்களிலுள்ள எல்லா அத்தாட்சிகளையும் அவர் அலசி ஆராய்ந்து கூறியிருக்கிறார். உயிர்த்தெழுதல் சம்பந்தமாக அவருடைய அபிப்பிராயத்தை அப்படியே கீழே தந்திருக்கிறேன்.

“கர்த்தரின் காலத்திலும், அதற்குப் பல நூறு வருடங்கள் முன்பும் பின்பும், இறந்தவர்களை உயிர்ப்பிக்கலாம் என்ற எண்ணம் நடைமுறையில் பரவியிருந்தது. அதாவது, எங்கெல்லாம் விஞ்ஞான ஆராய்ச்சி வளராத நிலையிலிருந்திருக்கிறதோ அங்கெல்லாம் இந்த எண்ணம் நிலைத்திருந்தது. எலியாவின் வரலாற்றில் இப்படியொரு நிகழ்ச்சியையும், எலிஷாவின் வரலாற்றில் இரண்டு நிகழ்ச்சி களையும் நாம் பார்க்கிறோம். இயேசு உயிர்த்தெழுந்தார் என்பது தவிர, இப்படி மூன்று நிகழ்ச்சிகள் சுவிசேஷங்களிலும்,

இரண்டு நிகழ்ச்சிகள் அப்போஸ்தலர் நடபடிகளிலும் பதிவு செய்யப் பட்டுள்ளன." (பக்கம் 16)

"உயிர் நீங்கிய உடலுக்கு உயிர் திரும்பி வந்த நிகழ்ச்சி களையும் அந்த மனிதன் தேவாலயப் பிரார்த்தனையின் பலனாக மீண்டும் வாழ்ந்திருந்ததாகவுமுள்ள பல நிகழ்ச்சிகளையும் பற்றி ஐரேனியஸ் கூறுகிறார்."

"விஞ்ஞான அறிவு பெறாத மக்களிடையே தற்காலத்திலும் இந்த நம்பிக்கை நிலவி வருவைதப் பற்றிய உற்சாகமூட்டும் நிகழ்ச்சி ஒன்று பிரச்சாரகர் சுவிட்சர் என்ற தலைப்போடு சங்கைக்குரிய டபிள்யூ. மாண்ட்கோமரி எழுதிய ஒரு கட்டுரையில் காணப்படு கின்றது." (ஹியூபர்ட் ஜர்னல் ஜூலை 1914, பக்கம் 885)

"இங்குள்ள பூர்வகுடி மக்களை அதிகம் கவரக்கூடிய விஷயம் மயக்க மருந்துகளின் உபயோகம்தான். ஐரோப்பாவில் உள்ள ஒரு பள்ளி கூடச் சிறுமிகளுக்கு, இங்குள்ள 'மிஷன்' பள்ளிச் சிறுமிகள் கடிதங்கள் எழுதுகிறார்கள். அக்கடிதங்கள் ஒன்றில் 'டாக்டர் இங்கே வந்ததிலிருந்து ஆச்சரியமான விஷயங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. முதலாவதாக அவர் நோயாளிகளை கொன்று விடுகிறார். பின்னர் அவர்களுக்கு மருந்து கொடுத்து சிகிச்சை செய்கிறார். அதற்குப் பின்னர், அவர்களுக்கு மீண்டும் உயிர் உண்டாக்குகிறார்' அற்புதம் நிகழ்த்தும் ஒருவன் இதைவிட வேறு எந்தப் புகழை விரும்ப முடியும்?"

"தேர்ச்சி பெற்ற மருத்துவர்கள்கூட சில நோயாளிகளைப் பொருத்தவரையில் அவர்கள் மரணித்து விட்டதாகத் தவறாகப் புரிந்து கொண்டு, அப்படியே அறிவித்து விடுகிறார்கள் என்பதை 'பிசிகல் கல்சர் அன் ஹெல்த்' (ஜூலை 15, 1912) என்ற பிரசுரத்தில் இருந்து எடுக்கப்பட்ட கீழ்க்கண்ட விஷயத்திலிருந்து அறிகிறோம்.

### *மரித்தவரை உயிர் பெறச் செய்தல்*

ஜெர்மானியர் ஒருவரால் குறிப்பிடத்தக்க கருவி ஒன்று தற்போது அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. அக்கருவிக்கு "பல் மோட்டார் " **(Pulmotor)** என்று பெயரிடப்பட்டிருக்கிறது.





மருத்துவர் களால் மரணித்துவிட்டதாக அறிவிக்கப்பட்ட நபர்கள்மீது இக்கருவி உபயோகிக்கப்பட்டு அவர்களுக்கு உயிர் அளிப்பதில் வெற்றி பெற்றுள்ளது. மேலும் அவர்கள் உறுதியான உடல்நலன் பெற்றவர் களாகவும் இருக்கிறார்கள். ஹாஸ் என்ற பெயருடைய ஒரு வாலிபன் கரி ஆவி காரணமாக மூச்சுத்திணறி அவனது நண்பர்கள் மூன்று மணி நேரம் பாடுபட்டும் அவனுக்கு உணர்வு உண்டாக்க முடியாமல் போய் 'மரணித்து விட்டான்' என்று கைவிரித்து விட்டனர். (பக்கம் 17) பல்மோட்டரைக் கொண்டு அந்த வாலிபனுக்கு மூன்று மணி நேரம் சிகிச்சை செய்யவே அவன் எழுந்து உட்காரப்பலம் பெற்றவனாகி, முன்பிருந்தது போலவே தான் தற்போது இருப்பதாக ஆச்சரியப்பட்டு நன்றி கூறினான். அந்தக் கருவியை உபயோகப்படுத்தும் முன்னரே அழைத்து வைக்கப் பட்டிருந்த ஒரு டாக்டர், மருத்துவ மொழியில் சொல்லும்போது, ஹாஸ் அங்கு வந்து சேரும்போது மரணித்த நிலையிலேயே இருந்தான் என்றார். ஹாஸ் ஐந்தாவது ஆளாக உயிரூட்டப் பட்டிருப்பவன்."

"ஆரோக்கியத்துடன் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறவர்களது உடம்பிலும் சில வேளைகளில் மரணத்தின் அறிகுறிகள் (பொய்யாகத்) தோற்றுவிக்கப்படுகின்றன என்பதும், உண்மையான நிலையை அறிந்து கொள்ளுவதற்கு அவசியமான எளிய சோதனை என்ன என்பதும் டெய்லரின் 'மெடிகல் ஜூரிஸ்புரூடென்ஸ்' (ஆறாம் பதிப்பு, பக்கம் 243) என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்ட கீழ்க்கண்ட மேற்கோளில் தெளிவாகக் காட்டப்பட்டிருக்கிறது. இந்த மேற்கோள் 'லான்செட்' (1900) முதல் தொகுதியில் 'அகால வயதில் உயிருடன் புதைத்தல்' என்ற தலைப்பி லிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது. அதிர்ச்சி, மயக்கம், ஜன்னி வாதம், வலிப்பு அல்லது மிகுந்த களைப்பினால் உயிரற்றவன் போலிருத்தல் ஆகியவற்றால் வேதனைப்பட்டவர்களை, கூடி நிற்போர் இறந்து விட்டதாக அறிவித்துவிடும் நிகழ்ச்சிகள் நடந்துள்ளன. ஏனென்றால், உடல் அசைவற்றுப் போய் மேல் பகுதி குளிர்ந்து, சுவாசம் இரத்த ஓட்டம் ஆகியவற்றிற்கான வெளிப்படையான அடையாளம் இல்லா

திருந்தால், சம்பந்தப்பட்ட நபர் இறந்துவிட்டதாக அருகில் நிற்போர் அறிவித்து விடுகிறார்ள். சம்பந்தப்பட்ட நபர் உயிரோடிருக்கிறாரா அல்லது இறந்து விட்டாரா என்பதை முடிவு செய்யும் வேலையை இத்தகையவர்களிடம் விட்டுவிட்டு அவர்களது ஏவல்படி சில மணி நேரத்திற்குள் அந்த நபரை புதைப்பதாக இருந்தால், ‘அகால வயதில் உயிரோடு புதைத்தல்’ என்ற அபாயத்திற்கு சம்பந்தப் பட்டவர்கள் (அதாவது உயிரோடுள்ளவர்கள்) ஆளாக நேரிடும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஐரோப்பாவைச் சேர்ந்த நாகரீக நாட்டிலும்கூட இது மிகவும் அபூர்வமாகவே நடக்கக்கூடும். அதுவும் குற்றம் சாட்டத்தக்க அளவுக்கு புறக்கணிக்கப்பட்டதின் விளைவாகவே நடக்கக்கூடும்.” (பக்கம் 18)

ஆசிரியர் மேலும் இவ்வாறு கூறுகிறார். (பக்கம் 246)

திட்டவட்டமான ஆதாரங்கள் என்று நாம் நம்பக்கூடிய சூழ்நிலைகள் கீழே தரப்பட்டுள்ளன.

1. ஸ்டெதாஸ்கோப்பைத் தொடர்ந்து உபயோகப்படுத்திப் பார்க்கும்போது இதயத் துடிப்பும், சுவாசமும் குறைந்தது ஒரு மணி நேரமாவது இல்லாதிருக்க வேண்டும்.

2. நடுவுடல் மாத்திரம் சூட்டோடு (கதகதப்பாக) இருக்க ஏனைய உறுப்புகள் குளிருதல் - இப்படியே உடம்பு முழுவதும் படிப்படியாகக் குளிர்ந்து கொண்டு வருதல்.

3. உடம்பு குளிரக் குளிர கை கால்கள், நடுவுடல் ஆகியவற்றிலுள்ள தசைநார்கள் விறைத்து விடுகின்றன. கடைசியாக உடலிலுள்ள தசைநார் மண்டலம் முழுவதுமே விறைத்து விடுகிறது. இந்த அடையாளங்கள் யாவும் காணப் பட்டால், நபர் இறந்து விட்டார் என்பது நிச்சயம்.

‘மேலே குறிப்பிடப்பட்ட ‘உயிரூட்டும்’ சம்பவங்களுடன் இந்த அடையாளங்களைப் பொருத்திப் பார்க்கும் போது - அவை இன்று நடப்பதாக வைத்துக் கொண்டால் சுனாமிய வாலிபன் சூரிய வெப்பமேற்று **(Sun stroke)** மூர்ச்சையடைந்தான் என்றும், ஐத்திகு மூன்றாம் மாடியி லிருந்து கீழே விழுந்ததால் உணர்ச்சியற்றிருந்தான்





என்றும், யவீருவின் மகள் நோயினால் ஏற்பட்ட சோர்வின் காரணமாக மாரடைத்துப் போயிருந்தாள் என்றும் சொல்லுவதற்குத் தயங்குவோமா?’ ‘அவள் மரித்துப் போகவில்லை, நித்திரையா யிருக்கிறாள்’ என்பதைத் திட்டவட்டமாக அறிந்திருந்த இயேசு கூறியதைப் பக்கத்தில் நின்றவர்கள் தங்களுடைய அறியாமை காரணமாக (‘அவள் மரித்துப் போனாளென்று அவர்கள் அறிந்ததினால்’) பரிகாசம் செய்து சிரித்தார்கள். லாசருவைப் பற்றிச் சொல்லும்போதும், இதுபோன்றே அவர் கூறியுள்ளார். தமது சீஷர்கள் புரிந்துகொள்ளுமளவுக்குப் பேச வேண்டியதன் அவசியத்தை அவர் கண்டுகொண்ட போதுதான் ‘லாசரு மரித்துப் போனான்’ என்று அவர் கூறினார்.

“இதுவும், செரபாத்திலே பாலகனுடையதும், எலிசாவினுடைய கல்லறையிலடப்பட்ட சரீரத்தினுடையதும், நாயீன் நகரத்திலே வாலிபனுடையதும், டோர்காஸ் என்ற பெண்மணியுடையதும் மரணத்தை ஒத்த நிலையை உண்டாக்கும் ஜன்னிவாத சம்பவங்கள்என்று கூறுவதிலே நமக்கு ஏதும் தயக்கம் உண்டோ?” (பக்கம் 19-20)

“இயேசு கிறிஸ்து உண்மையிலேயே சிலுவையில் மரித்தாரா என்ற கேள்விக்கு இப்போது நாம் விடை காண வேண்டியவர்களாய் இருக்கிறோம். சுவிசேஷ விளக்கங்களை அப்படியே வைத்துக் கொண்டு பார்த்தால், ஒருவர் உண்மையிலேயே மரித்து விட்டதையும் மரித்ததைப் போலத் தோன்றுவதையும் வித்தியாசப்படுத்திக் காட்டக் கூடிய வழிமுறைகள் அவற்றில் எங்கேயும் காணப்படவில்லை. சிலுவையில் இயேசு சோர்ந்து விழுந்த மூன்று மணி நேரத்திற்குள் அவரது உடல் மிக விரைவாகக் கல்லறையினுள்ளே கிடத்தப்பட்டது. மருத்துவமுறையில் தீவிர சோதனையோ, ஸ்டெதோஸ்கோப் சோதனையோ, அல்லது அவரது கடைசிக் காரியங்களைக் கவனிக்க இருந்தவர்களின் சாட்சியத்தோடு நடத்தப்பட்ட விசாரணையோ எதுவுமே கிடையாது. அவரைத் தமது கல்லறையில் கொண்டு போய் வைத்த அரிமெத்தியாவைச் சேர்ந்த யோசேப்பிடமிருந்தோ யோசேப்போடு இருந்தவரும், புதைப்பதற்கு வேண்டிய வாசனைத்

திரவியங்களையும் தைலத்தையும் கொண்டு வந்து கொடுத்தவரும் என்று சொல்லப்படும் நிக்கொதேமுவிடமிருந்தோ, அந்தச் சூழ்நிலையில் தவிர்க்க முடியாத சாட்சியாக இருந்திருக்கக்கூடிய தோட்டக்காரனிடமிருந்தோ நமக்கு எந்தவிதமான வாக்குமூலமும் இல்லை.” (பக்கம் 20)

“அவர் எப்போது கல்லறையை விட்டு வெளியேறினார் என்பது கூறப்படவில்லை. மூன்றாம் நாள் அதிகாலையில் அவரை அடக்கம் செய்வதில் சம்பந்தமில்லாத ஒருவரால் இயேசு முதன்முதலாகப் பார்க்கப்பட்டார். ‘அடக்கம் செய்வது’ என்ற வார்த்தையிலிருந்து அவரைப் புதைத்திருக்கிறார்கள் என்றும், ஆகவே புதைக்கும்போது அவர் உயிரோடு இருந்திருந்தால்கூட, பின்னர் அவர் மூச்சுத் திணறி விரைவில் மரணித்திருப்பார் என்றும் யாரேனும் தவறுதலாகப் புரிந்து கொண்டால் அவர்கள் கீழ்க்கண்ட விஷயங்களை கவனத்தில் கொள்ள வேண்டும். அவரது கல்லறை கல்மலையில் தோண்டப்பட்ட பெரிய அறையாகும். அதன் நுழை வாசல் சுண்ணாம்பு அரைக்கும் பெரிய கல்லைப் போன்ற வட்டவடிவமான ஒரு கல்லால் மூடப்பட்டிருந்தது. அந்தக் கல் கல்லறை வாசலில் தோண்டப்பட்டிருந்த நீளமான மடை போன்ற பள்ளத்தில் உருளக்கூடியதாயிருந்தது. மேலும் கல்லறைக்குள் காற்றுப்புக முடியாதபடி அக் கல் கல்லறையை இறுக்கமாக மூடிவிட கூடியதன்று. இவை யாவற்றையும் அவர்கள் சிந்திக்க வேண்டும். எனவே முதல் நாள் இரவு யோசேப்பும் நிக்கொதேமுவும் அளித்த சிகிச்சையின் காரணமாக அவர் பழைய நிலையடைந்தார் என்று கூறுவதே சுவிசேஷ வாக்கியங்களுக்குப் பொருத்தமாகும். (பக்கம் 31)

‘தி ரிஷரக்ஷன் அன்ட் மார்டன் தாட்’ என்ற தமது நூலில் டாக்டர் ஸ்பெரோ சிம்ஸன் என்பார் இதனைப் பற்றி இன்னும் அதிகமாகக் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

“கல்லறை காலியாகக் கிடந்தது என்று சொல்வதில் எல்லா அத்தாட்சிகளும் ஒத்து வருகின்றன என்று நாம் நம்பி அதைப்பற்றி விளக்கம் கூறுவதானால் அது நிச்சயமாக கீழ்க்கண்ட இரண்டில் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும். 1. இது மனிதர்களால்





செய்யப்பட்ட வேலையாக இருக்க வேண்டும். 2. இது இறைவனுடைய வேலையாக இருக்க வேண்டும். அதாவது இயேசுவின் உடலை மனிதர்கள் அப்புறப்படுத்தி இருக்க வேண்டும். அல்லது சர்வ வல்லமையுள்ள இறைவன் மரித்தோரிலிருந்து அவரை உயர்த்தியிருக்க வேண்டும். இதுவே நம்முன் உள்ள பிரச்சனையாகும்.” (பக்கம் 47)

“நாம் ஆராய வேண்டிய கேள்வி அதுவல்ல என்று நான் துணிந்து சொல்கிறேன். இறந்துவிட்டதாக நம்பப்படும் ஒருவர் உள்ளபடியே மரிக்காமலும், உயிர்ப்பிக்கப்படாமலும் இருந்தால்....? கல்லறை காலியாகக் கிடந்ததற்கு இவ்வாறு விளக்கம் கூறுவதே பொருத்தமாகவும், திருப்திகரமாகவும் இருக்கிறது என்று நான் நம்பிக்கையோடு கூறுகிறேன். இவ்விளக்கம் ஏமாற்று வித்தையையோ, அற்புதத்தையோ ஏற்றுக் கொள்ளுமாறு சொல்லவில்லை.” (பக்கம் 25)

“மேலே கூறப்பட்டுள்ளபடி, உயிர்ப்பிக்கும் முறையை வைத்துக் கொண்டு பார்த்தால், நிகழ்ச்சிகள் எப்படி நடந்தேறி உள்ளன என்பதை நியாயமான முறையில் அனுமானிக்கலாம். புத்துணர்ச்சி பெற்ற இயேசு கிறிஸ்து கல்லறையைவிட்டு அகற்றப்படுமுன்பு, அவருக்குத் தேவையான உடையை சேகரித்துக் கொள்ள வேண்டும். அடக்கம் செய்யும் ஏற்பாடுகளில் தோட்டக் காரன் உதவி புரிந்திருந்தால், அநேகமாகத் தோட்டத்திலோ அல்லது மிகச்சமீபத்திலோ உள்ள அவனது குடிசைக்கு ஓடிச்சென்று, இயேசுவின் தேவையை பூர்த்தி செய்வதற்காக அவனது ஓய்வு நாள் உடையை எடுத்து வந்திருப்பான் என்பது இயல்பான காரியமாகாதா? அவன் உதவி செய்தவர்கள் கூட்டத்தில் ஒருவனாக இல்லா விட்டால்கூட இத்தகைய அதி அவசரமான நேரத்தில், தேவையான உடை பெற்றுக் கொள்வதற்குரிய தகுதியான இடம் தோட்டக்காரனுடைய வீடாகவே இருந்திருக்கும். இயேசு போதிய அளவு உடல் நலம் பெற்றவுடன் கல்லறையிலிருந்து அகற்றப்பட்டு, குடிசைக்கு கொண்டு செல்லப்பட்டு, ஒரு பாதுகாப்பான இடத்திற்கு இட்டுச் செல்லப்படும் வரையிலும் அங்கேயே வைக்கப் பட்டிருப்பார். (பக்கம் 32) ஆகவே

அதிகாலைப் பொழுதில் மகதலேனா மரியாளும், மற்றொரு பெண்ணும் வந்தபோது, அவர் அநேகமாகத் தோட்டத்தின் எல்லைக்குள்ளேயே இருந்திருப்பார். தோட்டக்காரனோ அல்லது அவனது உதவியாளனோ இயேசு உயிர்த் தெழுந்ததையும், அவர் கலிலேயாவுக்குச் செல்ல நாடியிருப்பதையும் சொல்லக்கேட்டு, அவர்கள் அறிந்து கொண்டனர். (பின்னர் காலப் போக்கில் கதை வளர்ந்து தோட்டக் காரனின் உதவியாள், கர்த்தரின் தூதனாகவோ, தூதர்களாகவோ மாறி விட்டான்.) வந்திருப்பவர்கள் தமது நண்பர்கள் என்பதை இயேசு அறிந்ததும் அவர்களுக்கு இயேசுவைப் பார்ப்பதற்கு ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கும். (பக்கம் 33)

ஆசிரியர் மேலும் கூறுகிறார் :

“(இயேசு சிலுவையில் மரித்தார் எனற பெரும்பான்மை யினரின் நம்பிக்கைக்கு எதிராக) அங்கொருவர் இங்கொருவர் தனிப்பட்ட முறையில் மாறுபட்ட குரல் எழுப்பியிருந்தாலும் அது, பெருங்கூட்டம் எழுப்பிய கூச்சலில் அமுங்கிப் போயிருக்கும். அத்தகைய (மாறுபட்ட குரல் எழுப்பிய) நபரை தீயிட்டுக் கொளுத்திய காலமும், கிறிஸ்தவ திருச்சபை வரலாற்றில் இருந்திருக்கிறது. அவர் மதத் தியாகியாக அல்லாமல் சமூகத் துரோகியாகவே கொல்லப்பட்டிருந்தார்.” (பக்கம் 34)

இதனையடுத்து ஆசிரியர், இயேசு கலிலேயாவுக்குச் சென்றாரா? அங்கிருந்து டமாஸ்கசு சென்று அங்கே பவுலுக்கு காட்சியளித்தாரா? அதற்குப் பின்னர் கீழ்த்திசை நாடுகளுக்குச் செல்லும் வழியில் பாபிலோனை நோக்கி பயணமானாரா? என்பதைப் பற்றி விவரிக்கிறார். கடைசியாக ஆசிரியர் தமது நம்பிக்கையை கீழ்க்கண்ட வார்த்தைகளில் வெளிப்படுத்து கிறார்....“என்னைப் பொருத்தவரையில் அவர் மனிதராகவே இருந்ததால் மற்றெல்லா மனிதர்களும் போக வேண்டிய அதே வாசல் வழியாகவே அவரும் சென்றார் என்று நம்புவதில் மனநிறைவு கொள்ளுகிறேன்.” (பக்கம் 70)

அவர் தமது நூலை இந்த வார்த்தைகளோடு முடிக்கிறார்:

“அவர் எவ்விடத்தில் மரணமடைந்தார் என்று நமக்குத் தெரியாதென்பதை நான் மீண்டும் இங்கு சொல்லியாக வேண்டும்.





தூரப் பிரதேசங்களிலுள்ள காணாமற்போன கூட்டத்தாராகிய இஸ்ரவேல் வீட்டாருக்குப் போதித்த பின்னர், இயேசு ஸ்ரீநகரில் மரணமடைந்து அவரது பெயரை இப்போதும் தாங்கியிருக்கக்கூடிய கல்லறையில் அடக்கம் செய்யபட்டிருக்கலாம். கலிலேயாவில் தாம் பாதுகாப்பாக இருந்த இடத்தை விட்டு அகலாமலே இருந்து, திபேரியா கடற்கரை யிலுள்ள ஏகாந்தமான தன் வாசஸ்தலத்திலோ, ஏதோ ஒரு தனித்த மலையுச்சியிலோ அல்லது எங்கோ ஓர் ஒதுங்கிய பள்ளத்தாக்கிலோ அவருடைய உடல் காயங்களின் தாங்க முடியாத வேதனையை அனுபவித்துக் கொண்டு, ‘இந்நாள் வரைக்கும் ஒருவனும் அவன் பிரேதக் குழியை அறியான்’ எனறவாறு சிறுகச்சிறுக மரணித்துப் போயிருக்கலாம். அது நமக்குத் தெரியாது. நமக்குத் தெரியாததே ஒருவேளை நன்மையாக இருக்கலாம். அவரது எலும்புகளைத் தேடி எடுத்து அவற்றை வணங்குவதிலிருந்து கிறிஸ்தவ திருச்சபையாவது பாதுகாக்கப் பட்டிருக்கிறதே! நாம் அறிந்து கொள்ளாத அந்த இயேசுவின் கல்லறையைப் பார்த்து, மோசேயின் அடக்கஸ்தலத்தைப் பற்றி திருமதி அலெக்சாண்டர் இயற்றியுள்ள அழகான பாடலின் கடைசி வரிகளைச் சொல்லுவோம்.

‘ஓ தனித்த கல்லறையே! எங்களது விந்தையான உள்ளங்களோடு நீ பேசு. எங்கள் உள்ளங்கள் அமைதி காண நீ போதனை செய். இறைவனது அருள் நிரம்பிய மர்மங்களையும், அவனது வழிமுறை களையும் நம்மால் கூற இயலாது. அவற்றை அவன் ஆழத்தில் மறைந்து வைத்திருக்கிறான் - தான் பெரிதும் நேசிக்கும் தனது அடியாருடைய கல்லறையை இரகசியமாக வைத்திருப்பதைப் போல.’

## தகவல் குறிப்புகள்

1. *டாக்டர். ஆல்பிரட் சுவிட்சர் எழுதிய மாண்ட்கோமரி மொழிபெயர்த்த ‘தி கொஸ்ட் ஆஃப் தி ஹிஸ்டாரிக்கல் ஜீஸஸ்’ - இரண்டாம் பதிப்பு, பக்கம் 54-55, ஆதம் சார்லஸ் பிளாக், இலண்டன் 1911.*
2. *நீதிபதி E.B. டோக்கர் எழுதிய ‘இஃப் ஜீஸஸ் டிட் நாட் டை அப்பான் தி கிராஸ் எ ஸ்டடி இன் எவிடன்ஸ்’ என்ற நூல், இராபர்ட் ஸ்காட், இலண்டன் 1920.*

# அத்தியாயம் – 4

## பழங்கால ஆதாரம் பற்றிய நூல்

1907ல் சிகாகோ நகரத்து இந்திய - அமெரிக்க புத்தகக் கம்பெனி 'தி குருஸிபிக்ஷன் பை ஆன் ஐ விட்னஸ்' என்ற பெயரில் ஒரு புத்தகத்தை வெளியிட்டது. அப்புத்தகத்தில் ஒரு கடிதம் பிரசுரிக்கப் பட்டிருந்தது. அக்கடிதம் எஸ்ஸீன் **(Esseens)** சபையாருக்குச் சொந்தமானதும், அவர்கள் குடியிருந்து வந்ததுமான அலெக்சாண்டிரியாவிலுள்ள ஓர் வீட்டில் கண்டெடுக்கப்பட்ட தாகும். எருசலேமிலுள்ள எஸ்ஸீன் சகோதரத்துவச் சபையைச் சேர்ந்த மிகவும் கௌரவமான உறுப்பினரால், அலெக்சாண்டிரியாவில் உள்ள ஓர் எஸ்ஸீன் சகோதரருக்கு அக்கடிதம் எழுதப்பட்டிருந்துது. அப்போது சிலுவைத் தண்டனை நடந்து ஏழு ஆண்டு காலமே கழிந்திருந்தது. அலெக்சாண்டிரியாவிலுள்ள எஸ்ஸீன் சகோதரத்துவ மன்றத்தில் தெராப்யூட் **(Terapeut)** தலைவரிடம் இருந்து வந்திருந்த ஒரு கடிதத்திற்கு பதிலாகவே குறிப்பிட்ட இக்கடிதம் எழுதப்பட்டுள்ளது. இயேசுவையும் அவரது உயிர்த்தியாகத்தையும் குறித்துத் தாங்கள் கேள்விப்பட்ட வதந்தி பற்றிய உண்மையை அறியவே அத்தலைவர் விரும்பினார். எருசலேமிலுள்ள உறுப்பினர் தங்களைப் போன்ற ஒரு சகோதரர் என்பதையும், தங்கள் சபையின் சட்டதிட்டங் களுக்கு ஏற்ப அவர் வாழ்ந்து வந்தார் என்பதையும் அத்தலைவர் அறிந்ததாலேயே கடிதம் எழுதிக் கேட்டிருந்தார்.

இயேசு எஸ்ஸீன் சகோதரத்துவ பிரிவைச் சேர்ந்தவர் என்பதை இக்கடிதம் நிரூபிக்கிறது. இக்கடிதத்தை வரைந்தவர் அலெக்சாண்டிரியா விலுள்ள சகோதரர்களுக்கு இவ்வாறு உறுதியளித்துள்ளார் - "நான் அறிந்தவற்றிலிருந்தும் என்னுடைய கண்களால் கண்டவற்றிலிருந்தும் மட்டுமே நான் உங்களுக்குக் கூறுகிறேன். அத்துடன் நான் இந்த நடவடிக்கைகளிலெல்லாம் மிக்க ஆர்வத்தோடு சிறப்பாகப் பங்கெடுத்துக் கொண்டுள்ளேன் என்பதையும் கூறிக்கொள்ளுகிறேன்." (பக்கம் 38)





### பூமியின் மீது இருள் கவிகிறது

இயேசு கிறிஸ்து சிலுவையில் அறையப்பட்டபோதும் அவர் கீழேயிறக்கப்பட்ட போதும் என்ன நிகழ்ந்தன என்பதை அவர் விவரிக்கிறார். 'பூமியின்மீது இருள் கவிந்தது. மக்கள் எருசலேமுக்குத் திரும்பிச் சென்றனர்' என்று கடிதம் கூறுகிறது. மேலும் தொடர்ந்து "அவருக்கு ஏற்பட்ட வேதனையினால் சங்கீதத்தின் 22வது பாடலை★ அவர் உரக்கச் சப்தமிட்டுச் சொன்னார். அதன் மூலம் தமது துன்பத்தி லிருந்து தம்மை விடுவிக்குமாறு அவர் இறைவனிடம் வேண்டிக் கொண்டார்." (பக்கம் 62)

### நில நடுக்கங்கள்

மேலும் அக்கடிதம் தொடர்ந்து கூறுவதாவது: உஷ்ணம் மிகக்கடுமையான அளவுக்கு - தாங்க முடியாத அளவுக்கு - மேலும் மேலும் வளர்ந்தது. இயற்கை மூலப் பொருட்களைப் புடம் போடுவதற்குத் தேவைப்படும் அளவுக்குப் பூமியிலும், ஆகாயத்திலும் தீ மூண்டது. எங்கள் முன்னோரின் காலத்தில் முன்பு நடந்ததுபோல, அப்பொழுதும் ஒரு நிலநடுக்கம் ஏற்படப்போகிறதென்பதைத் தங்களது இயற்கை மற்றும் அதன் மூலாதாரப் பொருட்களைப் பற்றிய அறிவினால் எஸ்ஸீன் சகோதரர்கள் அறிந்து கொண்டனர். (பக்கம் 62)

"இரவு நெருங்கவே பூமி பயங்கரமாக நடுங்க ஆரம்பித்தது. நூற்றுக்கதிபதியான ரோமனும் தனது புறசமயக் கடவுளரிடம் முறையிடுமளவுக்குப் பயந்து விட்டான். பயந்து நடுங்கிய மக்களில் பலர் விரைவாக அவ்விடத்தை விட்டு அகன்று எருசலேமுக்குத் திரும்பினர். இரக்கச் சித்தமுள்ள கண்ணியவானாகிய நூற்றுக்கதிபதி இயேசு கிறிஸ்துவின் தாயாரை சிலுவையின் அருகே இட்டுச் செல்லுவதற்கு யோவானுக்கு அனுமதி தந்தான்." (பக்கம் 62)

"தம்முடைய தாயாரை யோவானுடைய பாதுகாவலில் அவர் (இயேசு) ஒப்புவித்தபோது முழு நிலவு வானத்தில் காய்ந்து கொண்டிருக்க வேண்டும். என்றாலும் அப்போது நன்றாக இருட்டிக் கொண்டிருந்தது. மரணக் கடலிலிருந்து அடர்ந்த சிவந்த பனிப்படலம்

★ என் தேவனே, என் தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீர் என்ற பாடல்

ஒன்று எழும்புவதாகத் தெரிந்தது. எருசலேமைச் சுற்றியுள்ள மலை முகடுகள் கடுமையாக அதிர்ந்தன. அப்போது இயேசுவின் தலை அவரது மார்பின் மீது சாய்ந்தது. அவர் கடைசியாக, மிகுந்த துயரத்தோடும் வேதனையோடும் சப்தமிட்டு உயிர் நீத்த போது காற்றிலே ஒருவகையான ‘உஸ்’ஸென்ற சப்தம் கேட்டது. அப்போது யூதர்கள் பெரும் பயத்தால் பீடிக்கப்பட்டார்கள். ஏனென்றால் வானத்துக்கும், பூமிக்கும் மத்தியிலுள்ள கெட்ட ஆவிகள் மக்களைத் தண்டிப்பதற்கு முன் வந்து கொண்டிருப்பதாக அவர்கள் நம்பினர். இந்தப் சப்தமே பூமியதிர்ச்சிக்கு முன்பு ஆகாயத்தில் ஏற்படக்கூடிய வழக்கத்திற்கு மாறான விநோதமான சப்தமாகும்.”

“இவையெல்லாவற்றையும் யூதர்கள் அற்புதங்களாக இயற்கை வரம்புக்கு மீறியவையாக எவ்வாறு கருதினாரோ, அவ்வாறே நூற்றுக்கதிபதியான ரோமனும் இயேசு கிறிஸ்துவின் குற்றமற்ற தன்மையிலும், தெய்வீக சக்தியிலும் நம்பிக்கை கொண்டு அவரது தாயாருக்கு ஆறுதல் கூறினான்.

அன்பார்ந்த சகோதரர்களே! இரகசியமான வழிவகையை கொண்டு நமது நண்பரை சிலுவையைவிட்டு நாங்கள் காப்பாற்றவில்லை என்று நீங்கள் ஏசுகிறீர்கள். ஆனால் பகிரங்கமாக நாம் வெளியேறு வதையும், அரசாங்க விஷயங்களில் நாம் தலையிடுவதையும் நமது சபையின் புனிதச் சட்டம் தடை செய்திருக்கிறதென்பதை மட்டும் இங்கு உங்களுக்கு ஞாபகமூட்டுகிறேன்.” (பக்கம் 66)

## *யோசேப்பும் நிக்கொதேமுவும்*

அரிமெத்தியா என்ற ஊரைச் சேர்ந்த யோசேப்பும் இயேசுவுக்கு உதவி செய்வதில் எடுத்துக் கொண்ட முயற்சியைப் பற்றி விவரிக்கையில் அக்கடிதம் கூறுவதாவது: “அரிமெத்தியாவைச் சேர்ந்த யோசேப்பு என்பார் ஒருவர் இருந்தார். அவர் செல்வந்தராய் இருந்ததோடு எஸ்ஸீன் சபை உறுப்பினராகவும் இருந்ததால் மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டார். அவர் நல்ல அறிவாளி. அவர் எந்த கட்சியையும் சேர்ந்தவராய்த்





தோன்றாவிட்டலும் இரகசியமான முறையில் அவர் நமது புனித சங்கத்தின் உறுப்பினராக இருந்து, நமது விதிமுறைகளுக்கு ஒப்ப வாழ்ந்து வந்தார். அவரது நண்பரான நிக்கொதேமு ஒரு சிறந்த கல்விமான். அவர் நம் சங்கத்தின் உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவராக இருந்தார். தெராப்யூட் (தலைவர்)களின் இரகசியங்களை அவர் அறிந்திருந்தார். நம்மோடு அடிக்கடி தொடர்புகொண்டு இணைந்தவராக இருந்திருக்கிறார்.” (பக்கம் 66)

“பூமியதிர்ச்சிக்குப் பிறகு மக்களில் பெரும்பாலோர் சென்று விட்ட பின்னர், யோசேப்பும், நிக்கொதேமுவும் சிலுவையருகே வந்தனர். சிலுவையில் அறையப்பட்ட நபர் இறந்து விட்டதாக அவர்களிடம் தெரிவிக்கப்பட்டது. கல்வாரிக்கு அருகிலுள்ள நமது சகோதரர்களுடைய தோட்டத்திலேதான் சிலுவை அமைந்திருந்தது.”

“ஏழு மணி நேரத்திற்கும் குறைவாகவே சிலுவையில் தொங்க விடப்பட்ட இயேசு அதற்குள்ளாகவே மரித்துப் போனது அவர்களுக்கு விநோதமாகத் தோன்றியது. அவர்களால் அதை நம்ப முடியாமற் போகவே, அவ்விடத்திற்கு விரைந்து சென்றனர். அங்கே அவர்கள் யோவானை மட்டுமே கண்டனர்.”

“யோசேப்பும், நிக்கொதேமுவும் இயேசுவின் உடலைச் சோதித்துப் பார்த்தனர். அப்போது நிக்கொதேமு பெரிதும் உணர்ச்சி வசப்பட்டவராக யோசேப்பை ஒருபக்கமாக அழைத்துச் சென்றார். உயிரைப்பற்றியும் இயற்கையைப் பற்றியுமுள்ள எனது அறிவு எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு நிச்சயம் இவரைக் காப்பாற்றுவது நடக்கக்கூடிய காரியம்தான் என்பதும் என்று நிக்கொதேமு கூறினார்.” (பக்கம் 67)

நிக்கொதேமு இவ்வாறு உரக்கச் சப்தமிட்டார்: “உடம்பிலுள்ள எலும்புகள் முறிக்கப்படாதவாறு உடம்பை நாம் உடனடியாகக் கைப்பற்ற வேண்டும். ஏனெனில் இன்னும் கூட இவரை நம்மால் காப்பாற்ற முடியும்.” பிறகு எச்சரிக்கையோடு இருக்க வேண்டியதை உணர்ந்த அவர், மெல்லிய குரலில் தொடர்ந்து, “....... கேவலமான முறையில் அவரைப் புதைப்பதினின்றும்

அவரைக் காப்பாற்ற முடியும்" என்று கூறினார். (பக்கம் 68) அதனை அவர்கள் இருவரும் இரகசியமாக வைத்துக் கொண்டனர். அதைப் பற்றி யோவானிடம் ஏதும் கூறவில்லை.

"தங்களின் நண்பரைக் காப்பாற்றுவதற்காக யோசேப்பு தமது சொந்த நலனைப் புறக்கணிக்க வேண்டுமென்று நிக்கொதேமு வற்புறுத்தினார். மேலும் யோசேப்பு உடனடியாகப் பிலாத்துவிடம் சென்று இயேசுவினுடைய உடலை அந்த இரவே சிலுவையை விட்டுக் கீழேயிறக்க அனுமதி தருமாறு கேட்டுக் கொண்டு, யோசேப்புக்குச் சொந்தமான, அருகிலுள்ள பாறையில் குடையப்பட்ட கல்லறையில் உடம்பை வைத்தால் தங்களது நண்பரை அவர் காப்பாற்ற இயலும் என்றும் அவர் வற்புறுத்தினார்."

"அவர் மனதில் என்ன கருதினார் என்பதை நான் புரிந்து கொண்டதால், சிலுவையைக் காவல் புரியவும், இயேசுவின் எலும்புகளைப் போர்ச் சேவகர்கள் முறிக்காவண்ணம் தடுக்கவும் யோவானோடு சேர்ந்து இருந்து கொண்டேன்." (பக்கம் 68)

"சிலுவையிலறையப்பட்டோரின் எலும்புகளை முறித்து அவர்களைப் புதைப்பதற்காக போர்ச் சேவகர்களுக்கு பிலாத்து ஓர் உத்தரவிட வேண்டுமென யூதசபை ஏற்கனவே கேட்டிருந்தது." (பக்கம் 69)

யோசேப்பும், நிக்கொதேமுவும் சென்ற பின்னர் ஒரு தூதன் நூற்றுக்கதிபதியிடம் பிணங்களைக் கீழேயிறக்கிப் புதைப்பதற்கான ஓர் உத்திரவைக் கொண்டு வந்து கொடுத்தான் என்று அந்தக் கடிதம் கூறுகிறது. "தூதன் வந்தவுடனே நான் அவனிடம் விரைந்து சென்றேன். யோசேப்பு ஏற்கனவே பிலாத்துவைக் கண்டிருக்கக்கூடும் என்று நான் நம்பினேன். ஆயினும் உண்மையில் அது அவ்வளவு சீக்கிரத்தில் நிகழக்கூடியதல்ல" என்று அக்கடிதத்தை எழுதியவர் கூறுகிறார்.

"பிலாத்து உன்னை அனுப்பினாரா?"

"நான் பிலாத்துவிடமிருந்து வரவில்லை. ஆனால் அவரது செயலாளரிடமிருந்து வருகிறேன். அவரே இத்தகைய முக்கியத்துவ மில்லாத விஷயங்களில் கவர்னருக்காக செயலாற்றுகிறார்."





"எனது ஆவலைக் கவனித்து நூற்றுக்கதிபதி என்னை உற்றுப் பார்த்தார். நான் ஒரு நண்பனுக்குரிய முறையில் அவரிடம் சிலுவையில் அறையப்பட்டுக்கிடக்கிற இம்மனிதர், சாதாரண மனிதரல்லர் என்பதை நீங்கள் தெரிந்திருக்கிறீர்கள். அவரைக் கண்ணியக்குறைவான முறையில் நடத்தாதீர்கள். ஏனென்றால் சடலத்திற்கான பணத்தைக் கொடுத்து அதனைக் கௌரவமாகப் புதைப்பதற்காக மக்கள் மத்தியிலுள்ள ஒரு செல்வந்தர் பிலாத்துவிடம் சென்றிருக்கிறார் என்று சொன்னேன்."

"அன்புமிக்க சகோதரர்களே! இம்மாதிரி சிலுவையில் அறையப்பட்டவர்களின் சடலங்களை அவர்களது தோழர்களிடம் பிலாத்து பன்முறை விற்றிருக்கிறார். ஆகவே அவற்றை அவர்கள் புதைத்துவிடவும் முடிந்தது. நடந்த நிகழ்ச்சிகளிலிருந்து இயேசு குற்றமற்றவர் என்பதைப் புரிந்து கொண்ட நூற்றுக்கதிபதி என்னிடம் நடபுறவுடன் பழகினார். எனவே, இரு கள்ளர்களும் போர்ச் சேவகர்களால் கனத்த தடி கொண்டு அடிக்கப்பட்டு, அவர்களது எலும்புகள் முறிக்கப்பட்ட போது நூற்றுக்கதிபதி போர்ச் சேவகர்களை நோக்கி, 'அவர் இறந்து விட்டார். அவரது எலும்புகளை முறிக்காதீர்' என்று கூறியவாறு இயேசுவின் சிலுவையைக் கடந்து சென்றார்." (பக்கம் 70)

"இது கழிந்த சிறிது நேரத்தில் பிலாத்துவிடமிருந்து ஒரு தூதன் நூற்றுக்கதிபதியிடம் வந்து 'உண்மையிலேயே இயேசு இறந்து விட்டாரா என்பதையறிய பிலாத்து ஆசைப்படுகிறார்' என்று சொன்னான். ஆமாம், அப்படித்தான். ஆதலால் நாங்கள் அவரது கால்களை ஒடிக்க விடவில்லை என்று நூற்றுக்கதிபதி கூறினார்.

அதைப்பற்றி இன்னும் நிச்சயமாகத் தெரிந்து கொள்ளுவதற்காகப் போர்ச் சேவகர்களில் ஒருவன், அவரது இடுப்புக்கு மேலே விலாப்புறத்தில் பாயும்படி அவனது ஈட்டியைக் குத்தினான். உடம்பில் எவ்வித அசைவும் தென்படவில்லை. இதனை நூற்றுக்கதிபதி அவர் உண்மையிலேயே இறந்து விட்டார் என்பதற்கான நிச்சயமான அடையாளமாகக் கருதிவிட்டார்.

ஆகவே இதனை அறிவிப்பதற்காக அவர் மிக விரைவாக அங்கிருந்து அகன்றார்.”

“ஆனால் அந்தச் சிறிய காயத்திலிருந்து இரத்தமும் நீரும் வெளிவந்தன. இதைக் கண்ட யோவான் ஆச்சரியப்பட்டார். எனக்கு மீண்டும் நம்பிக்கை பிறந்தது.” (பக்கம் 71)

## *பிலாத்து உடலை ஒப்படைத்தல்*

யோசேப்பும், நிக்கொதேமுவும் பிலாத்துவிடம் வெற்றிகரமாக வாதாடியதைப் பற்றிக் கூறுகையில் அக்கடிதம் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறது:

“யோசேப்பும், நிக்கொதேமுவும் வந்து விட்டனர். யோசேப்பு தமது கண்ணியத்தால் பிலாத்துவைக் கவர்ந்து விட்டார். சிலுவையிலறையப்பட்டவரின் மரணத்தைப் பற்றிய அறிவிப்பு பிலாத்துவுக்கு கிடைத்ததும், அதற்குரிய பணத்தைக்கூடப் பெற்றுக் கொள்ளாமல் யோசேப்பிடம் உடலை கொடுத்து விட்டார். ஏனெனில், யோசேப்பின் மீது பிலாத்து பெரிதும் மரியாதை வைத்திருந்ததோடு, நடந்த காரியத்துக்காக உள் மனதில் வருந்திக் கொண்டிருந்தார்.”

“காயத்திலிருந்து இரத்தமும், நீரும் வருவதைக் கண்டதும் நிக்கொதேமுவின் கண்கள் புதிய நம்பிக்கையால் உயிர்பெற்றன. நடக்கப்போவது என்ன என்பதை முற்கூட்டியே அறிந்தவராக அவர் உற்சாகத்தோடு பேசினார். யோவானுக்கு அப்பால் சிறிது தூரத்தில் நான் நின்று கொண்டிருந்த இடத்திற்கு யோசேப்பை கூட்டி வந்து தாழ்ந்த குரலில் - ஆனால் விரைவாக ‘அன்பார்ந்த நண்பர்களே! நல்ல உற்சாகத்தோடிருந்து நாம் வேலை செய்வோம். இயேசு இறந்துவிடவில்லை. அவர் தம் சக்தியை இழந்திருப்பதாலேயே அப்படிக் காணப்படுகிறார்’ என்று கூறினார்.

‘யோசேப்பு பிலாத்துவுடன் இருந்த வேளையில், நான் நமது குடியிருப்புக்கு விரைந்து சென்று இத்தகைய சந்தர்ப்பங்களில் உதவக்கூடிய மூலிகைகளைக் கொண்டு வந்தேன். ஆனால் நான் உங்களுக்கு எச்சரிக்கிறேன். இயேசுவுக்கு மீண்டும் நாம் உயிரளிக்க





நாடியுள்ளதை நீங்கள் யோவானிடம் கூறாதீர்கள். அப்படிக் கூறினால் அவருக்கு உண்டாகக்கூடிய பெரு மகிழ்ச்சியை அவரால் மறைக்க முடியாது. மக்கள் இதனைத் தெரிந்து கொண்டால், பின்னர் அது மிகவும் பயங்கரமானதாக இருக்கும். ஏனெனில் நம் எதிரிகள் அப்போது நம் அனைவரையும் அவரோடு சேர்த்து சாகடித்து விடுவார்கள்’ என்றும் நிக்கொதேமு கூறினார்.”

## *இயேசு சுகமடைந்தார்*

அடுத்தபடியாக, இயேசுவுக்கு உயிரூட்டிக் குணப்படுத்து வதற்காக மேற்கொள்ளப்பட்ட வழிவகைகளைக் கடிதம் விளக்குகிறது.

“இதன் பின்னர், சிலுவையிடத்தில் விரைந்து மருத்துவ சாத்திர முறைப்படி அவரது கட்டுகளை அவிழ்த்து, அவரது கைகளிலிருந்து ஆணியைப் பிடுங்கி மிக்க கவனத்தோடு, தரையின் மீது படுக்க வைத்தனர்.” (பக்கம் 73)

“அதன் பின்னர் நிக்கொதேமு தாம் கொண்டு வந்திருந்த நீண்ட லினன் துணித் துண்டுகளின் மீது அதிக மணம் வீசும் வாசனைப் பொருட்களையும் வலிபோக்கும் களிம்பையும் பரப்பினார். அவற்றின் உபயோகம் நமது சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு மட்டுமே தெரிந்திருந்தது. இவற்றை அவர் இயேசுவின் உடம்பு முழுவதிலும் சுற்றிக் கட்டினார். ஓய்வு நாள் கொண்டாட்டம் முடியும்வரை, உடல் கெட்டுப்போகாமல் காப்பதுபோலவும், கொண்டாட்டம் முடிந்த பின்னர், முறைப்படி வாசனைத் தைலங்களைப்பூசி, சடலத்தை அடக்கத்திற்கு தயார் செய்யப் போவது போலவும் அவர் நடித்தார்.”

“இந்த வாசனைப் பொருட்களும், வலிபோக்கும் களிம்பும் (காயங்களைக்) குணப்படுத்தும் சக்தி கொண்டவை. மரணத்தை ஒத்த மயக்க நிலையில் இருப்போரைச் சுய உணர்வுக்குக் கொண்டு வரும் மருத்துவ விதிகளை அறிந்திருந்த நமது எஸ்ஸீன் சகோதரர்களால் அவை உபயோகப்படுத்தப்பட்டன. யோசேப்பும், நிக்கொதேமுவும் அவரது முகத்தருகே குனிந்து நின்றனர். அவர்கள் சிந்திய கண்ணீர் அவர் மீது விழுந்தது. அவரைச் செயற்கை

முறையில் சுவாசிக்கச் செய்து அவரது நெற்றிப்பொட்டில், சூடு உண்டாக்கினர்." (பக்கம் 74)

"பின்னர் யோசேப்புக்குச் சொந்தமானதும், பாறையில் வெட்டப்பட்டதுமான கல்லறையில் அவரது உடம்பு கிடத்தப்பட்டது. அதன்பின் கற்றாழையாலும் பலனுள்ள சில மூலிகைகளாலும் கல்லறைக்குள் புகையெழுப்பினர். அப்போதெல்லாம் அவரது உடம்பு பாசிபடர்ந்த மெத்தை போன்ற தரையில் விறைப்பாகவும், அசைவற்றதாகவும் கிடக்க, மூலிகைப்புகை கல்லறையின் உட்புறத்தை நன்கு நிரப்ப அவர்கள் ஒரு பெரிய கல்லை நுழை வாசலின் முன்புறத்தில் தள்ளி வைத்தனர்." (பக்கம் 75)

## யூதர்கள் கொண்ட சந்தேகம்

"இயேசு கிறிஸ்துவின் இரகசிய நண்பர்கள் யாவர் என்பதை அறிந்து கொள்ள ஆவல்கொண்ட யூதர்களின் பிரதான ஆசாரியனான கயபாசு தனது வேவுக்காரர்களை அனுப்பி வைத்தான். அரிமெத்தியாவைச் சேர்ந்த யோசேப்பிடமிருந்து பணம் ஏதும் வாங்காமல் இயேசுவின் உடலைக் கொடுத்ததற்காக பிலாத்து மீது அவன் சந்தேகப்பட்டான். இயேசுவின்மீது இதற்கு முன்பு சிறிதும் அக்கறை காட்டாத யோசேப்பு, இப்போது சிலுவையில் அறையுண்டவருக்குத் தன்னுடைய கல்லறையையே கொடுத்து விட்டானே." (பக்கம் 76)

"அவர்கள் இயேசுவின் மீது வாசனைத் திரவியங்களைப் பூசி அதனைப் பாதுகாக்க எண்ணியிருக்கிறார்கள் என்பதையறிந்த கயபாசு, யோசேப்பின்மீது குற்றம் சுமத்துவதற்கு ஏதேனும் சில இரகசிய வழிகளைக் கண்டுபிடித்து அவரைச் சிலுவையில் தள்ளக் கருதினான். ஆகவே இரவின் பிற்பகுதியில் ஆயுதம் தாங்கிய அவனது பணியாட்களில் அநேகரை இயேசுவின் உடல் கிடத்தப்பட்டிருந்த கல்லறைக்கு அருகில் ஆள் நடமாட்டமில்லாத ஒரு பள்ளத்தாக்குப் பகுதிக்கு அனுப்பி வைத்தான்." (பக்கம் 75)

கடிதத்தை எழுதியவர் மேலும் கூறுகிறார்: "இதற்கிடையில் நிக்கொதேமுவும் நானும் நமது சகோதரர்களிடம் விரைந்து





சென்றோம். வயது முதிர்ந்தோரும், அறிவு முதிர்ந்தோரும் இயேசு கிறிஸ்துவுக்கு உயிரூட்டும் சிறந்த வழிமுறைகளைப் பற்றிப் பேச்சுவார்த்தை நடத்த ஆரம்பித்தனர். கல்லறைக்கு ஒரு காவலரை உடனடியாக அனுப்பி வைப்பதென சகோதரர்கள் யாவரும் முடிவு செய்தனர்."

"நள்ளிரவு தாண்டி, காலைப்பொழுது நெருங்குகையில் மீண்டும் பூமி அதிர ஆரம்பித்தது. காற்று மிக வேகமாக வீச ஆரம்பித்தது. மலைகள் அதிர்ந்து உடைந்து சிதறின. பிளவுகளி லிருந்து சிவந்த நெருப்புக் கற்றைகள் பாய்ந்து வந்து காலை நேரத்துப் பனிமூட்டத்தை ஒளிமயமாக்கியது. உண்மையிலேயே இது மிக பயங்கரமான இரவாகும். பூமியதிர்ச்சியினால் பெரிதும் பயங்கொண்ட மிருகங்கள் அலறிக் கொண்டும் கத்திக் கொண்டும் எல்லாத் திசைகளிலும் சிதறி ஓடின. காற்று எழுப்பும் உஸ்ஸென்ற ஒலியையும் பூமியின்மீது ஏற்படும் பேரொலி மற்றும் குமுறல்களையும் கவனித்த பிரதம ஆசாரியனது பணியாட்களைப் பயம் ஆட்கொண்டிருந்தது." (பக்கம் 77)

"நம் சகோதரர்களில் ஒருவர் நம் சகோதரத்துவ சபையின் உத்திரவுக்குக் கீழ்ப்படிந்து நான்காம் வகையைச் சேர்ந்த வெள்ளை அங்கி அணிந்து கொண்டு கல்லறைக்குச் சென்றார். அவர் சென்ற வழி ஓர் இரகசியப் பாதையாகும். அது ஒரு மலையின் வழியாகச் சென்று கல்லறையை அடைந்தது. அந்த வழி நம் சகோதரர்களுக்கு மட்டுமே தெரியும்."

"மலை மீதிருந்து வெள்ளையங்கி அணிந்த நமது சகோதரர் - காலை நேரப் பனிப்படலத்தால் அரைகுறையாக மறைக்கப் பட்டவராக - மெதுவாக இறங்கி நெருங்கி வருவதைக் கண்ட பிரதான ஆசாரியனுடைய தைரியமற்ற பணியாட்களைப் பெரிய பயம் வந்து பிடித்துக் கொண்டது. மலை மேலிருந்து ஒரு தேவதை இறங்கி வருவதாக அவர்கள் எண்ணினர்."

"தான் காவல் புரிய வேண்டிய கல்லறைக்கு நம் 'சகோதரர்' வந்ததும், நம் சகோதரத்துவ சபையின் உத்தரவுப்படி கல்லறையின்

நுழை வாசலிலிருந்த கல்லைப் புரட்டிப் போட்டு அதன்மீது அமர்ந்தார். இதனைக் கண்ணுற்ற போர்ச்சேவகர்கள் பறந்தோடிப் போய்த் தங்களை கர்த்தருடைய தூதன் ஒருவன் விரட்டி விட்டான் என்று ஒரு செய்தியைப் பரப்பினர்." (பக்கம் 78)

## கல்லறையின் உட்புறம்

அடுத்தபடியாக இயேசுவின் உடல் பாதுகாக்கப்பட்டிருந்த கல்லறையின் உட்புறத்தில் நடந்தவற்றைக் கடிதம் எழுதியவர் இவ்வாறு குறிப்பிடுகிறார்:

"இயேசு மரித்துவிட்டார் என்று கருதப்பட்டு இப்போது முப்பது மணி நேரம் கடந்து விட்டது. கல்லறையினுள்ளிருந்து ஒரு சிறு சப்தம் கேட்கவே, உட்புறம் என்ன நடந்திருக்கிறது என்பதைக் கவனிக்கச் சென்ற 'சகோதரர்' விவரிக்க இயலாத மகிழ்ச்சியோடு கண்டதென்னவெனில், இயேசுவின் உதடுகள் அசைவதையும், அவர் சுவாசிப்பதையுமேயாம். அவர் உடனே இயேசுவுக்கு உதவும் பொருட்டு அவரிடம் விரைந்து சென்றார். மேலும் அவரது மார்பிலிருந்து சிறு சப்தம் எழும்புவதையும் கேட்டார். அவரது முகம் உயிரோட்டம் பெற்றது. கண்கள் திறந்தன. நம் சபையைச் சேர்ந்த அப்புதிய சகோதரரை வியப்போடு உற்று நோக்கினார்."

"நான் யோசேப்போடும், முதல் வகையைச் சேர்ந்த சகோதரர் களோடும் மன்றத்தைவிட்டு வெளியேறிக் கொண்டிருந்த அதே நேரத்தில் இது நடந்து விட்டது. யோசேப்பு, 'எவ்வாறு உதவி பெறுவது' என்பதைப் பற்றிக் கலந்து பேசுவதற்காக அங்கு வந்திருந்தார்." (பக்கம்79)

"அனுபவம் மிக்க மருத்துவராகிய நிக்கொதேமு, போகும் வழியில் வாயு மூலங்களின் சுழற்சியினால் ஆகாய வெளியில் ஏற்பட்ட விசேஷ மாறுதல்கள் இயேசுவுக்குச் சாதகமாக அமைந்துவிட்டன என்றும், இயேசு உண்மையிலேயே இறந்து விட்டார் என்பதைத் தாம் ஒரு போதும் நம்பவில்லை என்றும் கூறினார். அவர் மேலும், காயத்திலிருந்தும் வெளிவந்த இரத்தமும் நீரும் உயிர் போய் விடவில்லை என்பதற்கான நிச்சயமான





அடையாளமாகும் என்றும் கூறினார். யோசேப்பும் நிக்கொதேமுவும் முன்னே செல்ல, இவ்விதமாகப் பேசிக்கொண்டே நாங்கள் கல்லறையை அடைந்தோம். நாங்கள் மொத்தம் முதல் வகையைச் சேர்ந்த இருபத்து நான்குபேர் இருந்தோம்."

"கல்லறையினுள் நுழைந்ததும், வெள்ளை ஆடை தரித்த நம் புதிய சகோதரர் பாசி படர்ந்த தரையின்மீது முழங்காலிட்டு உட்கார்ந்திருப்பதையும், புத்துயிர் பெற்ற இயேசுவின் தலையைத் தம் மார்பில் அவர் தாங்கிக் கொண்டிருப்பதையும் கண்டோம்."

"இப்போது இயேசு நமது எஸ்ஸீன் சகோதரர்களை அடையாளம் கண்டு கொள்ளவே, அவருடைய கண்கள் மகிழ்ச்சியால் மின்னின. அவரது கன்னங்கள் இளஞ்சிவப்பு நிறமாயின. "நான் எங்கிருக்கிறேன்" என்று கேட்டுக் கொண்டே எழுந்து உட்கார்ந்தார். யோசேப்பு பின்னர் அவரைக் கட்டித் தழுவி தம் கைகளுக்குள் அவரைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, எல்லா நிகழ்ச்சிகளும் எவ்வாறு நடந்தேறி விட்டன என்பதையும் அவர் ஆழந்த மயக்கத்திலிருந்ததால் எவ்வாறு உண்மையான மரணத்தில் இருந்து காப்பாற்றப்பட்டார் என்பதையும் அவரது மயக்க நிலையைத்தான் கல்வாரியிலிருந்த போர்ச் சேவகர்கள் அவரது மரணமாக நினைத்து விட்டனர் என்பதையும் எடுத்துக் கூறினார்." (பக்கம் 80)

"இயேசு கிறிஸ்து பெரிதும் ஆச்சரியப்பட்டு தன் நிலையை உணர்ந்து இறைவனைப் புகழ்ந்தார். யோசேப்பின் மார்பில் சாய்ந்து அழுதார். பின்னர் நிக்கொதேமு தமது நண்பரைச் சிற்றுண்டி உண்ணுமாறு வற்புறுத்தினார். எனவே இயேசு சில பேரீத்தம் பழங்களையும், தேனில் தோய்க்கப்பட்ட கொஞ்சம் ரொட்டியையும் உண்டார். நிக்கொதேமு இயேசு குடிப்பதற்கு திராட்சை ரசம் கொடுத்தார். அதன் பின்னர் தாமே எழுந்து நிற்கும்படி அவர் பெரிதும் புத்துணர்ச்சி பெற்றார்."

"பின்னர் அவரது கைகளிலும், விலாப்புறத்திலும் உள்ள காயங்களின் வலி அவருக்குத் தெரிய ஆரம்பித்தது. ஆனால் நிக்கொதேமு அவற்றின்மீது பூசியிருந்த மூலிகை மருந்து

இதமளித்தது. மேலும் அக்காயங்கள் ஏற்கனவே குணமடைய ஆரம்பித்திருந்தன.”

## இயேசு கல்லறையை விட்டுத் தப்புகிறார்

இயேசு எவ்வாறு கல்லறையை விட்டு மறைவாகத் தூக்கிச் செல்லப்பட்டார் என்பதைக் கடிதம் இனிமேல் விவரிக்கிறது. “லினன் துணிச் சுற்றுகளுடன் தலையிலிருந்த துணியும் நீக்கப்பட்டவுடன் யோசேப்பு, ‘நாம் நெடுநேரம் தங்குவதற்கு ஏற்ற இடம் இதுவல்ல. ஏனெனில் எதிரிகள் நம் இரகசியத்தை எளிதில் கண்டுபிடித்து நம்மைக் காட்டிக் கொடுத்துவிடக்கூடும்’ என்று எடுத்துச் சொன்னார்.”

“ஆனால் இயேசுவோ, நெடுந்தூரம் நடந்து செல்வதற்குரிய பலம் பெற்றவராக இல்லை. எனவே அவர் நமது மன்றத்துக்குச் சொந்தமான ஒரு வீட்டுக்கு நடத்திச் செல்லப்பட்டார். இவ்வீடு கல்வாரிக்கு வெகு அருகாமையிலுள்ள நமது சகோதரர்களுக்குரிய ஒரு தோட்டத்தில் அமைந்திருந்தது.” (பக்கம் 81)

“இயேசுவின் கல்லறையைக் காவல் புரிந்து கொண்டிருந்த புதிய சகோதரரிடம் நமது மன்றத்தைச் சேர்ந்த மற்றொரு இளம் சகோதரர் உடனடியான அனுப்பப்பட்டார். லினன் துணிச் சுற்றுகள், மருந்துகள் ஆகியவற்றில் மீதிருந்த எல்லாவற்றையும் அங்கிருந்து சுத்தமாக அழித்துவிடும் வகையில், அவருக்கு உதவி செய்வதற்காக இந்தச் சகோதரர் அனுப்பப்பட்டார்.”

“நம் சகோதரர்க்குரிய வீட்டுக்கு இயேசு வந்து சேர்ந்தபோது அவர் மிகக் களைத்தும் இளைத்துமிருந்தார். காயங்கள் வலியைத்தர ஆரம்பித்திருந்தன. இவையெல்லாவற்றையும் அவர் ஓர் அற்புதமாகவே கருதியதால் அவரது மனம் நெகிழ்ந்து விட்டது. ‘நான் போதித்தவற்றை என்னளவில் நிரூபிக்கும் பொருட்டு, இறைவன் என்னை எழும்புமாறு செய்திருக்கிறான். நான் உயிரோடிருக்கிறேன் என்பதை எனது சீடர்களுக்குத் தவறாமல் காட்டுவேன்’ என்று இயேசு கூறினார்.” (பக்கம் 82)





## இயேசு தம் சீடர்களைச் சந்தித்தல்

அக்கடிதம் இன்னும் நமக்குக் கூறியதாவது: “எஸ்ஸீன் நண்பர்கள் இயேசுவைப் பத்திரமாகப் பாதுகாப்பதற்காக எல்லா முன்னேற்பாடுகளையும் கவனமாக செய்து கொண்டனர். எருசலேமிலும், மெஸ்ஸீதா பள்ளத்தாக்கிலும், பெத்தானியாவிலுள்ள லாசருவின் வீட்டிலும், கலிலேயாவிலும், கார்மல் மலையிலும் மற்ற இடங்களிலும் அவருடைய சீடர்களைச் சந்திப்பதற்கு அவருக்கு எல்லா வகைகளிலும் உதவி செய்தனர். மேலும் சீடர்களது நம்பிக்கையையும் செயலையும் இன்னும் திடப்படுத்தும் பொருட்டு அவர் உரையாற்றுவதற்கும் உதவியாக இருந்தனர். அவருடைய சொற்பொழிவுகளோடு அவர் இன்னும் உயிரோடிக்கிறார் என்ற செய்தியும் சேர்ந்து மக்கள் மத்தியில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தின.”

## யூதர்களின் எச்சரிக்கை நடவடிக்கை

இயேசு சிலுவை மரணத்தை விட்டுத் தப்பிவிட்டார் என்ற யூதர்களுடைய சந்தேகம் உறுதிப்பட்டதையும், அவரை அழிப்பதற்கு அவர்கள் புதிய முயற்சிகள் எடுத்துக் கொண்டதையும் அக்கடிதம் தெளிவுபடுத்துகிறது. இதைப்பற்றிக் கடிதம் இவ்வாறு கூறுகிறது. “ஒரு நாள் நிக்கொதேமு நமது மன்றத்துக்கு வந்து அரிமெத்தியாவைச் சேர்ந்த யோசேப்பு கைது செய்யப்பட்டு விட்டதாகவும், இயேசுவுடன் இரகசியத் தொடர்பு வைத்திருந்ததாக அவர்மீது பொய்யாகக் கிரிமினல் குற்றம் சுமத்தியிருப்பதாகவும் அறிவித்தார்.” (பக்கம் 110)

எருசலேமிலுள்ள புனித சகோதரத்துவ பிரிவினரின் முயற்சி -யினால் பின்னர் யோசேப்பு சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்.

“இயேசு கார்மேல் மலைப் பள்ளத்தாக்கில் இருந்தபோது நமது சகோதரர்கள் அவருக்கு வரவிருந்த அபாயத்தைக் குறித்து அவரை எச்சரித்து, அவர் தமது எதிரிகளிடமிருந்து விலகிச் சென்று அதன் மூலம் தமது நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்று கூறினர். ஏனெனில் கயபாசு இயேசுவை ஏமாற்றுக்காரன்

என்று எண்ணியதால் அவன் அவரைப் பிடித்து கொலை செய்ய நாடியிருக்கிறான் என்று அவர்கள் இரகசியமான முறையில் அறிந்திருந்தனர்.” (பக்கம் 118)

“யோசேப்பு இயேசுவை நோக்கிக் கூறினார்: ‘உங்களுடைய போதனைகளைக் கொஞ்சமும் விளங்கிக் கொள்ளாத மக்கள், ரோமானியர்களைக் கவிழ்ப்பதற்கு வந்துள்ள பூலோக ராஜா’ என்று உங்களைப்பற்றி அறிவிக்க யோசித்துக் கொண்டிருக்கிறார்கள் - என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனால் நீங்களோ யுத்தம் புரட்சி ஆகியவற்றின் மூலம் இறைவனுடைய ஆட்சிக்கு இடையூறு செய்ய மாட்டீர்கள். எனவே தனிமையை நாடுங்கள். எஸ்ஸீன் நண்பர்களோடு சேர்ந்து பாதுகாப்பாக இருங்கள். உங்கள் போதனை உங்களுடைய சீடர்களால் அறிவிக்கப்படட்டும்.” (பக்கம் 150) “இயேசு தனிமையை நாடுவதற்கு ஒப்புக் கொண்டார்.” (பக்கம் 121)

## *இயேசு தாமே வெளியேறினார்*

அக்கடிதம் மேலும் நமக்குக் கூறுவதாவது: “கடைசி முறையாக இயேசு தமது சீடர்களைச் சந்தித்தபோது ஒலிவ மலைச் சிகரத்துக்கு அருகிலுள்ளதும் தமக்கு மிகவும் பிரியமானதுமான ஓர் இடத்துக்கு அவர்களை அழைத்துச் சென்றார். அங்கிருந்து ஏறக்குறைய பாலஸ்தீன நாடு முழுவதையும் அவரால் காண முடியும். ஏனெனில் தாம் வாழ்ந்து பணிசெய்த நாட்டை மற்றொரு முறை பார்ப்பதற்கு இயேசு பெரிதும் விரும்பினார்.” (பக்கம் 153)

“தேர்ந்தெடுக்கப்பட்ட சீடர்கள், இயேசு தங்களைப் பெத்தானியாவுக்கு நடத்திச் செல்லுவார் என்று நம்பினர். ஆனால் சகோதரத்துவ மன்றத்தின் மூத்தோர் ஒன்று சேர்ந்து மற்றோருக்குத் தெரியாமல் மலையின் மறுபக்கத்தில் வந்திருந்தனர். ஏற்கனவே ஒப்புக் கொள்ளப்பட்டது போன்று அவர்கள் இயேசுவுடன் பிரயாணம் செய்வதற்கு ஆயத்தமாய்க் காத்திருந்தனர்.”

இயேசு தம் சீடர்களிடம், நல்ல உற்சாகத்தோடும் தங்கள் நம்பிக்கையில் உறுதியோடும் இருக்குமாறு அறிவுரை கூறினார்.





விட்டுப் பிரியப்போகிற தம் நண்பர்களுக்காக அவர் பிரார்த்தித்தார். தமது கைகளை உயர்த்தி அவர்களுக்கு ஆசி கூறினார். அப்போது மலையைச் சுற்றிப் பனிப்படலம் சூழ்ந்தது. மாலை நேர சூரிய ஒளி பனிப்படலத்திற்கு அழகூட்டியது.

பின்னர், எஸ்ஸீன் சகோதரத்துவ மன்றத்தின் மூத்தோர், தாங்கள் அவருக்காகக் காத்துக் கொண்டிருப்பதாயும், ஏற்கனவே காலதாமதமாகிவிட்டதாகவும் இயேசுவுக்குச் சொல்லியனுப்பினர். சீடர்கள் முழங்காலிட்டுத் தங்கள் முகங்களைப் பூமியைப் பார்த்துத் திருப்பிய நேரத்தில் இயேசு கிறிஸ்து எழுந்து சூழ்ந்து கொண்டிருக்கும் பனிப்படலத்தின் ஊடே விரைந்து சென்று விட்டார். சீடர்கள் எழுந்த போது அங்கு அவர்கள் முன்னிலையில் நமது சகோதரத்துவ மன்றத்தைச் சேர்ந்த இரு சகோதரர்கள் வெள்ளையங்கி அணிந்து நின்று கொண்டிருந்தனர். இயேசு போய் விட்டதால் இயேசுவுக்காக அங்கு காத்து நிற்கவேண்டாம் என்று அறிவுறுத்தினர். அதன் பேரில் அவர்கள் மலை மீதிருந்து விரைந்து கீழிறங்கினர்.” (பக்கம் 124)

“ஆனால் இயேசுவின் மறைவு சீடர்களுக்குப் புதிய நம்பிக்கையையும் மனத்தைரியத்தையும் அளித்தது. ஏனென்றால் தங்களது அன்புக்குரிய போதகர் இனி ஒருபோதும் திரும்பி வரமாட்டாராதலால் தாங்களே இயேசு கிறிஸ்துவின் போதனைகளை அறிக்கையிட வேண்டியவர்களாயிருப்பதை அவர்கள் இப்போது அறிந்து கொண்டனர். ஆனால் நகரத்திலோ இயேசு கிறிஸ்து மேகத்தால் எடுத்துக் கொள்ளப்பட்டு வானத்திற்கு சென்று விட்டார் என்றொரு வதந்தி எழுந்தது. இயேசு பிரிந்து சென்றபோது அவ்விடத்தில் இல்லாதிருந்த மக்களால் இது உண்டாக்கப்பட்டது. தங்களது கொள்கைகளை உறுதிப் படுத்துவதற்கு இது உதவியது என்ற வகையிலும் அவர் மீது நம்பிக்கை வைப்பதற்கு ஓர் அற்புதத்தை நாடிநின்ற மக்களை அது கவர்ந்தது என்ற வகையிலும் இயேசுவின் சீடர்கள் அந்த வதந்திக்கு மறுப்புத் தெரிவிக்கவில்லை.” (பக்கம் 125)

## உலகத்தார் கண்களுக்கு மரணித்தவரானார்

யூதர்களின் சந்தேகங்களை நிவர்த்தி செய்யாமல் அப்படியே வைத்திருப்பதற்கும் இயேசு தமது சொந்த நாட்டிலிருந்து மற்றொரு அந்நிய நாட்டிற்குப் பத்திரமாகத் தப்பி செல்வதற்கும் கையாளப்பட்ட ஒரு திட்டத்தைப் பற்றி அக்கடிதத்தின் இறுதிப்பகுதி குறிப்பிடுகிறது.

இயேசு ஒளிந்திருந்த இடத்தில் அவரோடு யோசேப்பும், நிக்கொதேமுவும் மாத்திரம் மூன்று தடவைகள் இருந்துள்ளனர் என்பதைக் கடிதத்தின் இறுதி வார்த்தைகள் தெளிவாக்குகின்றன. “ஆறாவது முழு நிலவு மறைந்து கொண்டிருந்த நேரத்தில் கடைசி முறையாக அவர்கள் நமது சகோதரத்துவ மன்றத்திற்கு வந்தனர். அவர்களுடைய உள்ளம் வேதனையால் நொந்திருந்தது. ஏனெனில் தேர்ந்தெடுக்கப்பட்டவராகிய இயேசு பிதாவினுடைய பரலோக உறைவிடத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு விட்டார். மேலும் அவர் மரணக் கடலுக்கு அருகில் மருத்துவரால் புதைக்கப்பட்டு விட்டார்.” (பக்கம் 128)

இறைவன் தம்மைக் காப்பாற்றிவிட்டான் என்று தாம் மக்கள் மத்தியில் சென்று சொல்லப்போவதாக இயேசு வற்புறுத்தியபோது, எஸ்ஸீன் சகோதரத்துவ மன்றம் இயேசுவிடம் கடிதத்தில் கண்டுள்ளபடி இவ்வாறு கூறியது: “அவர்கள் உங்களைத் தேடி அலைவார்கள். ஆதலால் நீங்கள் இந்த நாட்டில் பாதுகாப்பாக இல்லை. ஆகவே போதனை செய்வதற்காக இனிமேலும் மக்கள் மத்தியில் போகாதீர்கள். ஏனெனில் நீங்கள் போதிதுள்ளவைகள் உங்கள் நண்பர்கள் மத்தியில் எந்நாளும் நீடித்திருக்குமாதலால், உங்கள் சீடர்களே உலகத்தாருக்கு அதனைப் பரப்புவார்கள். நான் உங்களைப் பணிந்து வேண்டிக் கொள்ளுகிறேன் - நீங்கள் உலகத்தாரின் கண்களுக்கு மரணித்தவராகவே இருங்கள். உலகத்தாருக்குத் தெரியாமல், ஞானமும் நற்குணங்களும் நிறைந்த தனிமையில் வாழ்ந்திருங்கள்.” (பக்கம் 92)

சந்தர்ப்ப சூழ்நிலைகளின் காரணமாக மேலே கூறியபடி ஒரு திட்டத்தை வகுத்ததே புத்திக் கூர்மையுள்ள காரியமாகும்.





அதன்படியே இயேசு உலகத்தாரின் கண்களுக்கு மரணித்தவராகவே இருக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

இயேசு மரணமடைந்ததையும் அவர் புதைக்கப்பட்டதையும் கடிதத்தை எழுதியவர்கூடப் பார்க்கவில்லை என்பதும் இது காதால் கேட்டறிந்த செய்திதான் என்பதும் இயேசுவின் எதிரிகள் அவரைத் தேடாமல் இருக்க இயேசு உலகத்தார் கண்களுக்கு மரணித்தவராகவே இருக்க வேண்டும் என்ற திட்டத்தின்படி அநேகமாக யோசேப்பும் நிக்கொதேமுவுமே இதனை மற்றவர்களுக்கு அறிவித்தனர் என்பதும் கடிதத்திலிருந்து தெரிய வருகிறது. மேலும் இயேசுவின் மரணத்தைப் பற்றியும் அவர் புதைக்கப்பட்டதைப் பற்றியுமுள்ள இக்கூற்று உண்மையிலேயே சரியாக இருந்திருக்குமானால் கடந்த நூற்றாண்டுகளில் மரணக்கடலுக்கு அருகில் குறைந்தபட்சம் அவரது கல்லறையைப் பற்றிய தடையங்களேனும் கண்டுபிடிக்கப்பட்டிருக்க வேண்டும். எவ்விதமிருப்பினும், குறிப்பிட்ட கடிதத்திலிருந்து இயேசு கிறிஸ்து சிலுவையில் மரிக்கவில்லை என்பது தெள்ளத் தெளிவாகத் தெரிகிறது.

## ஜெர்மானிய மொழி பெயர்ப்பாளரின் தெளிவுரை

ஜெர்மானிய மொழிபெயர்ப்பாளர் இறுதியாக இவ்வாறு குறிப்பிடுகிறார்.

“இந்தக் கடிதம் சுவிசேஷ நிகழ்ச்சிகளோடு பொருந்தக்கூடிய பல விறுவிறுப்பான நிகழ்ச்சிகளைத் தாங்கியுள்ளது. மேலும் மிகைப்படுத்தாமல் நேர்மையான எளியமுறையில் கடிதம் எழுதியவருடைய சொந்தக் கருத்துக்கள் எதையும் வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாமல் இது எழுதப்பட்டிருக்கிறது.” (பக்கம் 133)

“ஆனால் இதில் குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் என்னவென்றால் இயேசு அனுபவித்த துன்பங்களைப் பற்றியும் சிலுவையில் அறையுண்டு கிடந்தபோது அவர் நடந்து கொண்ட முறையைப் பற்றியும், நுட்பமாகக் குறித்து வைக்கப்பட்டிருப்பதே ஆகும்.இயேசு சிலுவையில் உண்மையிலேயே மரித்தார் என்று சுவிசேஷம் குறித்து வைத்திருக்கிறது. ஆகவே அவர் சிலுவையில்

இருந்து மீட்சி பெற்றதை ஓர் அற்புதம் என்று முத்திரைப் பதித்து பெருமைப்படுத்துகின்றது. ஆனால் புத்திக் கூர்மையுள்ள மனிதனோ இதனை ஓர் கட்டுக்கதையாகவே கருதி அதில் உருவகமாகக் கூறப்பட்ட பொருளைப் புரிந்து கொள்ளுகிறான். ஆனால் இக்கடிதத்தில் நடைபெறச் சாத்தியமான நிகழ்ச்சிகளை மாத்திரம் எளிய முறையில் அறிவிக்கப்பட்டுள்ளதாக நாம் அறிகிறோம். சந்தர்ப்ப சூழ்நிலைகள் பொருந்தி வருவதாலும் அதனை நம்ப வேண்டியது உண்மையிலேயே அவசியமாயிற்று.” (பக்கம் 140)

“இப்பழங் கடிதத்தில் இயேசு சிலுவையில் மரிக்கவில்லை; ஆனால் உணர்விழந்தவரானார் என்று குறிக்கப்பட்டுள்ளது. இயேசு சிலுவையில் தோற்றமளித்த வகையிலிருந்து அவர் மரணமடைந்து விட்டார் என்று கருதுவது சாத்தியமே. முதலாவதாக பிலாத்து கூட இயேசுவின் மரணத்தில் சந்தேகப்படுமளவுக்கு வெகு சீக்கிரத்திலேயே அவர் சுய உணர்வை இழந்து விட்டார். இரண்டாவதாக, அப்போது வழக்கத்திலிருந்த சிலுவை தண்டனை முறைப்படி சிலுவையிலறையப்பட்டவர் மீண்டும் உயிர்பெற்றெழுந்து விடுதல் அசாதாரணமல்ல. (மிகச் சாதாரணமே).” (பக்கம் 141)

சிலுவையிலறையப்பட்ட குற்றவாளிகள், சிலுவையிலிருந்து கீழேயிறக்கப்பட்ட பின்னர், உயிர்பெற்று எழுந்து விடுவது ஒரு சாதாரண நிகழ்ச்சியே என்று அக்கால வரலாற்று ஆசிரியர்களும் நமக்கு அறிவிக்கிறார்கள். சிலுவையில் அறையுண்டவர்களை இரவு நேரத்தில் தொடர்ந்து தொங்க அனுமதிப்பதில்லை என்ற யூதர்களின் வழக்கத்தைச் சரிவர அனுசரிக்காத சமுதாயத்தைச் சேர்ந்த இத்தகைய துரதிருஷ்டசாலிகள், தாங்கள் மரணமடையும் முன்னர், எட்டு அல்லது ஒன்பது தினங்கள் தொங்கியிருந்து அதன்பின்னர் கடைசியாகத் தங்களது அதிபயங்கரத் துன்பங்களுக்கு ஒரு முடிவு காண்கிறார்கள். இயேசுவின் பேரில் நிறைவேற்றப்பட்ட சிலுவை தண்டனை முறைகளை நாம் ஆராய்ந்து பார்த்தால், சிலுவை தண்டனை அனுபவிப்பவர் நீண்ட நாட்களுக்கு உயிருடன் இருப்பது சாத்தியமற்றதல்ல (அதாவது சாத்தியமே) என்பதையறிந்து நாம் திருப்தியடைவோம்.” (பக்கம் 142)





## அத்தியாயம் - 5

## ஒரு சமீப காலத்திய கண்டுபிடிப்பு!

# இயேசுவின் சவப்போர்வை

### *ஜெர்மானிய விஞ்ஞானிகளின் திடுக்கிடத்தக் தகவல்கள்*

இயேசுவின் உடலைச்சுற்றிப் போர்த்தப்பட்டிருந்த துணியானது, கல்லறையில் கண்டுபிடிக்கப்பட்டது. (யோவான் 20:5) இத்துணி இன்றும் இருந்து வருகிறது. இயேசுவின் உடம்பின் மீது பூசப்பட்ட களிம்பின் காரணமாக, அவரது அங்க அடையாளங்கள் இத்துணியில் பதிந்துள்ளன.

சமீபகாலத்தில் ஜெர்மானிய விஞ்ஞானிகளின் குழு ஒன்று, இயேசுவின் உடம்பைச் சுற்றிப் போர்த்தப்பட்டிருந்த இத்துணியைக் குறித்துச் சில முக்கியமான உண்மைகளை அறிவித்து இயேசு கிறிஸ்து சிலுவையில் மரிக்கவில்லை என்பதை எடுத்துக் காட்டியுள்ளனர். ஆழ்ந்த மயக்க நிலையில், அல்லது முற்றிலும் உணர்விழந்த நிலையில் அவர் சிலுவையிலிருந்து கீழே இறக்கப்பட்டார். ஆனாலும் அப்போது அவருக்கு உயிர் இருந்தது. மகதலேனா மரியாள் கல்லறைக்குச் சென்ற வேளையில், அவர் மயக்கம் தெளிந்து, மீண்டும் சிறைப்படாமல் இருப்பதற்காக, தோட்டக்காரன் வேடம் புனைந்திருந்தார். ஆகவே, இவ்வுலகில் அவரது மறுதோற்றமானது, மயக்க நிலையிலிருந்து தெளிவடைந்ததே யல்லாது, உயிர்த்தெழுதல் அன்று.

இவ்விஷயத்தைக் குறித்து 1957 ஆம் ஆண்டு ஏப்ரல் 2 ஆம் நாளன்று ஸ்டாக்ஹாம் டைடினிஜென் என்ற ஸ்கேண்டிநேவிய பத்திரிகையில் அதன் ஆசிரியர் கிறைஸ்டர் ஐடர்லும் என்பவரால் எழுதப்பட்ட ஒரு சிறப்புக் கட்டுரை வெளியாகியிருந்தது. (பாகிஸ்தான்) ரப்வாவிலுள்ள அஹ்மதிய்யா இயக்கத் தலைமையகத்தால் மேற்சொன்ன கட்டுரை உருது மொழியில் மொழிபெயர்க்கப்பட்டு, ஹஸ்ரத் மஸீஹ் நாசேரி சலீப் பர் ஹர்கிஸ்

ஃபவுத் நஹீன் ஹுவே என்ற தலைப்பில் வெளியிடப்பட்டிருந்தது. நான் அதனைக் கீழ்க்கண்டவாறு மொழி பெயர்த்துள்ளேன்.[1]

## இயேசு சிலுவையில் மரித்தாரா?

ஜெர்மானிய விஞ்ஞானிகளின் குழு ஒன்று, இயேசுவின் சவப் போர்வையைக் குறித்து கடந்த எட்டு ஆண்டுகளாக ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருந்தது. அவர்களது ஆராய்ச்சியின் முடிவு சமீபகாலத்தில்தான் பத்திரிகைகளுக்குக் கிடைத்தது. இரண்டாயிரம் ஆண்டுகளாக இயேசுவின் சவப்போர்வை, இத்தாலிய நகரான டூரின் என்னுமிடத்தில் இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதில் இயேசுவின் அங்க அடையாளங்கள் உள்ளன.

விஞ்ஞானிகள் போப் ஆண்டவருக்கு இத்தகைய கண்டுபிடிப்பைப் பற்றிய தகவலைத் தெரிவித்துள்ளனர். ஆனால் போப்பாண்டவர் மௌனமாகவே இருக்கிறார். இக்கண்டுபிடிப்பு கத்தோலிக்க திருச்சபை சமய வரலாற்றின் மிக முக்கியமான இரகசியத்தை வெளிப்படுத்திக் காட்டுகின்றது. இரண்டாயிரம் ஆண்டுகளாக அற்புதமாக மக்களால் கருதப்பட்டு வந்த 'உயிர்த்தெழுதல்' என்பது உண்மையில் இயற்கை விதிகளுக்கு உட்பட்ட உடலைப் பொருத்த ஒரு சாதாரண விஷயம்தான் என்பதை விஞ்ஞானிகள் புகைப்படக்கலையின் உதவியால் நிரூபித்துக்காட்ட முயன்றிருக்கின்றனர். இறுதியில் இயேசு கிறிஸ்து சிலுவையில் மரிக்கவில்லை என்று நிரூபித்துள்ளார்.

கடந்த ஓராயிரம் ஆண்டுகளாகவே சவப்போர்வையைப் பற்றிய பேச்சு இருந்து வருகிறது. இந்தத் துணி கி.பி.439ல் ராணி எண்டாக்சி என்பவரால் கான்ஸ்டான்டிநோபிளுக்கு அனுப்பி வைக்கப்பட்டது. இது முன்னர் கல்லறைக்கருகே கண்டுபிடிக்கப்பட்ட அதே துணியாகும். கான்ஸ்டான்டிநோபிளில் இது எழுநூறு ஆண்டுகளாக இருந்தது. கடைசியாக, கான்ஸ்டான்டிநோபிளைத் தாக்கிய டிலாரோக்கி அதனைத் தம்முடன் எடுத்துச் சென்று

1 *இக்கட்டுரை செல்வி உல்ஃபத் காஸீ அவர்களால் எழுதப்பட்டு "தி ரிவியூ ஆப் ரெலிஜன்ஸ்" ஜூன் 1958 இதழில் பிரசுரிக்கப்பட்டது.*





விட்டார். தீப்பற்றி எரிந்த ஒரு சம்பவத்தின்போது, இத்துணி ஒரு வெள்ளிப் பேழையில் இருந்தது. வெள்ளி உருகியதால் அது சிறிது மங்கலடைந்தது. ஆனால் இயேசுவின் அங்க அடையாளங்கள் இன்னும் தெளிவாகவே இருந்தன.

இத்துணியைக் காட்சிப் பொருளாக்கியதன் மூலம், பிரான்ஸ் மக்கள் பெரும் பணத்தைப் பெற்றனர். பிரான்சிலிருந்து அது டூரினுக்கு எடுத்துச் செல்லப்பட்டது. அங்கு அது ஒவ்வொரு முப்பத்து மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறையும் காட்சிப் பொருளாக வைக்கப் பட்டது. கி.பி. 1898ல் இத்தாலிய அறிஞர் ஒருவர் அத்துணியின் புகைப்பட நெகட்டிவை சூரிய ஒளியில் பார்த்தார். இயேசுவின் வடிவத்தை அப்படியே ஒத்திருந்த ஓர் உருவம் அப்படத்தில் இருக்கக்கண்டு அவர் திடுக்கிட்டார். அந்த நெகட்டிவைப் படமாக்கியபோது, 1900 ஆண்டுகளாக யாருமே பார்த்திராத ஒரு மனிதரின் (அதாவது இயேசுவின்) முகத்தை அப்படம் காட்டிற்று.

கி.பி.1931ல் அத்துணி மறுமுறை காட்சிப் பொருளாக வைக்கப்பட்டபோது, கிசிப்பி என்ரிக் என்ற புகைப்படக்காரர் திருச்சபையின் முக்கியமான பிரமுகர் ஒருவரின் முன்னிலையில் 6000, 20000 ஆகிய வோல்டுகள் ஒளிதரும் மின்சார சிமினிகளின் உதவியோடு, அத்துணியை ஒரு புகைப்படம் பிடித்தார். இப்படம் ஓர் உணர்ச்சிமிக்க உண்மையை வெளிப்படுத்திக் காட்டியது. அதாவது பயா (இத்தாலிய அறிஞர்) ஏற்கனவே எடுத்துரைத்த உண்மையை இப்புகைப்படம் நிரூபணம் செய்தது. கடந்த இரண்டாயிரம் ஆண்டுகளாக எவற்றை இயேசுவின் முகம் எனவும், உடலமைப்பு எனவும் திருச்சபைச் சித்திரங்கள் எடுத்துரைத்தனவோ, அதே உடலமைப்பையும் முகத்தையும் அப்படம் காட்டிற்று.

ஹானஸ் நேபர் வெர்லாக் என்பவரால் எழுதப்பட்டுள்ள டாஸ் லின்னன் குர்ட் பெர்னா ஸ்டல்ட்கார்டு என்ற புத்தகத்தில் வெளியாகியுள்ள இந்த புகைப்படத்தை ஒருவன் உற்று நோக்கினால், அது திருச்சபையில் உண்டாக்கியிருக்கும் விளைவு எத்தகையது என்பதை எளிதல் புரிந்து கொள்வான். போப் ஒன்பதாம் பயஸ்

இதனை “எந்தவொரு மனிதனுடைய கையாலும் இப்படம் உண்டாக்கப்படவில்லை” என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

அந்தத் துணியும், அதன் வரலாறும் சேர்ந்து அது இயேசு கிறிஸ்துவின் படமே என்பதை உறுதிப்படுத்துவதாக விஞ்ஞானிகள் அறிவிக்கின்றனர். அந்தத் துணியின் உற்பத்தியும், நெசவும் அது பாம்பியில் **(Pompeii)** காணப்படும் துணிவகையைச் சேர்ந்தது என எடுத்துக் காட்டுகின்றன.

துணியில் காணப்படும் இரட்டைக் கறைகள், ஒரு பாதி இயேசுவின் உடம்பைச் சுற்றியும், மற்றொரு பாதி தலையைச் சுற்றியும் போர்த்தப்பட்டிருந்தது என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. இயேசுவின் உடலில் பூசப்பட்ட களிம்பு, உடல் வெப்பத்துடன் சேர்ந்து, அவரது உடல் - உருவத்தைத் துணியின்மீது பதித்து விட்டது. காயங்களிலிருந்து பாய்ந்து வந்த இரத்தத்தைத் துணி உட்கொண்டதால் ஏற்பட்ட இரத்த அடையாளங்களும் இதில் உள்ளன. மேலும் முள் கிரீடம் வைத்ததால் அவரது நெற்றியிலும் அதையொட்டிய பாகத்திலும் கனத்த வலது கன்னத்திலும் ஏற்பட்ட அடையாளங்களையும், வலது விலாப்புறங்களில் ஈட்டியால் குத்தியதால் உண்டான அடையாளத்தையும், ஆணிகள் அறையப்பட்டதால் காயங்களிலிருந்து பீறிட்டு வந்த இரத்தத்தின் கறைகளையும், சிலுவை உராய்ந்ததால் முதுகில் ஏற்பட்ட அடையாளங் களையும் அப்புகைப்படம் மிகத் தெளிவாகக் காட்டுகின்றது. ஆனால் மிக அதிசயிக்கத்தக்க உண்மை என்னவென்றால், நெகட்டிவ் படத்தில், இயேசுநாதரின் மூடிய இரு கண்களும் திறந்திருப்பதுபோன்று தோன்றுகின்றன.

மேலும், ஆணிகள் உள்ளங்கைகளில் அறையப்படவில்லை என்பதையும், வலுவான மணிக்கட்டு மூட்டுகளில் அறையப் பட்டிருந்தன என்பதையும் அப்புகைப்படம் அறிவிக்கிறது. அப்புகைப்படத்தின் மூலம் தெளிவாகின்ற மற்றொரு விஷயம் என்னவெனில், ஈட்டி அவருடைய இதயத்தைத் தாக்கவில்லை எனபதாகும். பைபிள் “இயேசு ஜீவனை விட்டார்” எனக் கூறுகிறது.





ஆனால் விஞ்ஞானிகளோ அவருடைய இதயம் வேலை செய்வதை நிறுத்திக் கொள்ளவில்லை என்று வலியுறுத்திக் கூறுகின்றார்கள்.

ஒரு மணி நேர அளவிற்கு இயேசு கிறிஸ்து சிலுவையிலேயே உயிரற்றவராக இருந்திருந்தால் அவரது இரத்தம் உறைந்து காய்ந்திருக்கும். எனவே இரத்தக்கறைகள் துணியின்மீது படிந்திருக்காது. ஆனால் துணி இரத்தத்தை உறிஞ்சியிருக்கிறது என்ற உண்மையானது, இயேசு கிறிஸ்து சிலுவையிலிருந்து கீழே இறக்கப் பட்டபோது உயிருடன் இருந்தார் என்பதைக் காட்டுகின்றது.

ஜெர்மானிய விஞ்ஞானிகளின் இந்த உணர்வைத் தூண்டும் கண்டுபிடிப்பு பதினான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னரே திருக்குர்ஆனில் என்ன கூறப்பட்டுள்ளதோ அதைத்தான் உறுதிப்படுத்துகின்றது என்பதை நான் இங்கு கூறிக் கொள்ள விரும்புகிறேன். திருக்குர்ஆன் ‘சிலுவையில் இயேசு மரிக்க வில்லை’ என்று அறிவிக்கின்றது.

மேலும், அல்லாஹ்வுடைய தூதர் மர்யமின் மகன் ஈசா மஸீஹை நாங்கள் கொன்று விட்டோம் என்று அவர்கள் (யூதர்கள்) கூறினார்கள். ஆனார் அவர்கள் அவரைக் கொலை செய்யவு மில்லை. சிலுவையில் அறைந்து கொல்லவுமில்லை. மாறாக, அவர்களுக்கு அ(ந்நிகழ்ச்சியான)து சந்தேகத்திற்குரியதாக ஆக்கப்பட்டது. இதில் கருத்து வேறுபாடு கொண்டவர்கள் நிச்சயமாக இதுபற்றி ஐயத்திலேயே இருக்கின்றனர். அவர்கள் ஊகத்தைப் பின்பற்றுவதல்லாமல் உறுதியான எந்த அறிவும் அவர்களுக்கு இல்லை. அவர்கள் அவரை நிச்சயமாக கொல்லவில்லை. (திருக்குர்ஆன் 4:158)

# அத்தியாயம் 6

## தற்கால மருத்துவ அறிஞர்களின் கருத்து

இயேசு கிறிஸ்து சிலுவையில் தொங்கியபோது ஆழ்ந்த மயக்கமடைந்தவராக இருந்து பின்னர் சகஜ நிலையையடைந்தார் என்ற தத்துவம் மிகவும் பழமையானதாகும். 1928ல் ‘தி ரிவியூ ஆப் ரிலிஜன்ஸ்’ இதழுக்கு அப்போது ஆசிரியராக இருந்த மவ்லவி A.R. தர்த் என்பார், இந்தத் தத்துவத்தைப் பற்றி, கிறிஸ்தவ பிரச்சாரகர்கள் கிறிஸ்தவமார்க்க அறிஞர்கள் மற்றும் பேராசிரியர்கள் ஆகியோரிடம் எழுத்து மூலமாக விசாரணை நடத்தினார். கிறிஸ்தவ பிரச்சாரகர்கள், இந்த மயக்க நிலைத் தத்துவம் கைவிடப்பட்டு விட்டதாக பதில் எழுதியிருந்தனர். மற்றவர்கள் அவ்விஷயத்தைக் குறித்து தங்களின் பதிலை வெளியிட்ட பின்னர், ஆசிரியர் இவ்வாறு எழுதுகிறார்:

“இந்தத் தத்துவம் கைவிடப்பட்டுவிடவில்லை என்பது இந்தப் பதில்களிலிருந்து மிகவும் தெளிவாகத் தெரிகின்றது. அதற்கு மாறாக, இந்நாட்களில் மிகவும் விரிவாக ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது என்று அப்பதில்களே ஒப்புக் கொள்கின்றன. திறனாய்வு செய்யும் எல்லா அறிஞர்களும் இந்த மயக்க நிலைத் தத்துவத்தை நடைமுறையில் கைவிட்டு விட்டார்களா என்பதை பிர்மிங்ஹாம் பேராயர் அவர்களால் கூற இயலவில்லை. இந்தக் கருத்துக்கு ‘தி புரூக் கெரித்’ என்னும் நூலில் புத்துயிர் கொடுக்கப் பட்டுள்ளதாக கேனான் ஸ்ரீட்டர் என்பார் கூறுகிறார். இங்கிலாந்து திருச்சபையிலுள்ள திறமைமிக்கோரிலும், கற்றோரிலும் ஒருவராகிய டர்ஹாம் பிஷப் அவர்கள், ‘இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலைப் பற்றிக் கூறும் சுவிசேஷ நிகழ்ச்சிகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால், மயக்கநிலைத் தத்துவம் கைவிடப்பட்டு விட்டதாகக் கூறுவது சிறிதும் சரியல்ல’ என்று தயங்காமல் கூறுகிறார். A. வெய்கால் என்பவர் எழுதி ஒன்று அல்லது இரண்டு வாரங்களுக்கு முன்பு பிரசுரிக்கப்பட்டுள்ள ‘பேகனிசம் இன் அவர் கிறிஸ்டியானிட்டி’ என்ற நூலில் இதே விஷயம் மீண்டும் கூறப்பட்டுள்ளது.





இந்தத் தத்துவத்தை ஆதரிக்கும் மிகப்பெரிய அறிஞர்களாகிய பவுலுஸ், வென்டூரினி, பார்துத், ஸ்லீயர் மாச்சர்[1] போன்றோருடைய கருத்துக்களையெல்லாம் இங்கு கொண்டு வராமல், இந்தக் கண்டத்தில் சமீபகாலத்தில் வெளியிடப்பட்டுள்ள இரண்டு மிகவும் முக்கியமான பிரசுரங்களை மாத்திரம் இங்க குறிப்பிடுவோம்.

1. **Dog Jesus pa korest?** ஸ்டாக்ஹோமைச் சேர்ந்த டாக்டர் ஹியூகோ டால் எழுதியது. **(Dr. Hugo Toll-Stockholm)**
2. **“De Proces de Jesus”** பாரியைச் சேர்ந்த **M.** பவுல்ரு எழுதியது. **(Paul Roue - Paris)**

இவை தவிர, 1919ல் லாஸ் ஏஞ்சல்சில் பதிக்கப்பட்ட ‘தி குருசிபிக்ஷன் ஆஃப் ஜீசஸ் பை அன் ஐ விட்னஸ்’ என்ற மிக முக்கியத்துவம் வாய்ந்த புத்தகமும் ஒன்று. இந்நூல் முழு விவரங்களையும் விளக்கமாகத் தந்துள்ளது.[2]

ஸ்வீடன் நாட்டைச் சேர்ந்த சிறந்த மருத்துவ அறிஞரான டாக்டர் ஹியூகோ டால் அவர்களுடைய கருத்தைக் கீழே தந்திருக்கிறேன். இது முன்னர் கூறிய அதே ‘ரிவியூ ஆஃப் ரிலிஜன்ஸ்’ இதழிலிருந்து எடுக்கப்பட்டது. ரிவியூ ஆஃப் ரிலிஜன்ஸ் பத்திரிகையின் ஆசிரியர் கூறுவது போன்று (1929ல்) அவருக்கு வயது 70. 1897லிருந்து 1923 வரை அவர் ஸ்டாக்ஹோம் மருத்துவமனையின் பொறுப்பை ஏற்று நிர்வகித்து வந்தார். கல்விமானாகிய இந்த டாக்டர், இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்று மருத்துவ அடிப்படையில் நிரூபிக்கிறார். டாக்டர் ஹியூகோ டால் தமது நூலாகிய **‘Dog Jesus pa Korest?’** என்ற புத்தகத்தில் எழுதியுள்ள விவரத்தின் மொழி பெயர்ப்பு இங்கு தரப்படுகிறது.

“இயேசுவின் காலத்திற்கு வெகுகாலம் முன்பிருந்தே சிலுவை தண்டனை மிகவும் சாதாரணமாக நடைமுறையில் இருந்து வந்தது. ரோமானியர் அதனை அடிக்கடி நிறைவேற்றி வந்தனர். குற்றவாளிகளை அவர்கள் உடனடியாகக் கொல்லமாட்டார்கள். மேலும் சிலுவை தண்டனையானது கெஞ்சம் கொஞ்சமாக

சித்திரவதைக்கு ஆளாக்கி உயிரை வாங்கக்கூடிய ஒரு தண்டனையாகும். அத்துடன் ரோமானியருக்கு அது பிரபலமான பொழுதுபோக்குமாகும். அத்தண்டனையை நிறைவேற்றுவதில் திட்டவட்டமான விதிமுறைகள் எதுவும் இல்லை. ஆகவே தண்டனையை நிறைவேற்றுபவர்கள் தாங்கள் விரும்பிய வண்ணம் குற்றவாளிகளைத் தண்டிக்கலாம். சில வேளைகளில் அவர்களை (உடல் முழுவதும்) கயிற்றினால் சேர்த்துக் கட்டினார்கள். மற்றும் சில வேளைகளில் அவர்களது கைகளை மாத்திரம் கட்டினார்கள். தண்டனைக்குரியவன் உடலாலும் உள்ளத்தாலும் துன்புற்றான். இதனால் ஏற்படும் கேவலமோ, இதிலும் ஆகக்கெட்டதாக இருந்தது. அடிமைகளையும், குறைந்த தரத்திலுள்ளோரையும், மற்றும் குற்றவாளிகள், தேசத் துரோகிகள், புரட்சிவாதிகள் ஆகியோரையும் அவர்கள் சிலுவைத் தண்டனைக்குள்ளாக்குவது வழக்கம்.

"அநேகமாக ஆடையில்லாதவராகவே இயேசு சிலுவையில் தொங்கியிருக்க வேண்டும். அப்போது குளிர் காலமாயிருந்தது." (யோவான் 18:18) சிலுவையிலறையப்படு முன்னர் அவர்கள் இயேசுவுக்கு ஏதோ ஒன்றைப் பருகக் கொடுத்தார்கள். அது கசப்புக் கலந்த திராட்சை ரசமா? வெள்ளைப்போளம் கலந்த திராட்சை ரசமா? என்று உறுதியாக நமக்குத் தெரியவில்லை. "அவர் அதை ருசி பார்தது குடிக்க மனதில்லாதிருந்தார்." (மத்தேயு 27:34) ஏதேனும் ஒரு பெருந் துயரத்தினால் தொண்டை சுருங்கி விட்டால் ஒருவனால் விழுங்குவதற்கு இயலாது. உடலாலோ, உள்ளத்தாலோ மனிதர்கள் துன்புற்றால் அவர்கள் சாதாரணமாகத் தண்ணீர் கேட்கிறார்கள். ஆனால் அவர்களால் தண்ணீரைக் குடிக்க முடியாது. தற்காலிக நரம்புத் தளர்ச்சிக்கு இதுவும் ஓர் அடையாளமாகும். "இயேசு மறுபடியும் மகாசத்தமாய்க் கூப்பிட்டு ஆவியை விட்டார்" என்று மத்தேயு 27:50 கூறுகிறது. (மகாசத்தமாய் என்ற இடம் அழுத்தமாகக் கூறப்பட்டுள்ளது) நூற்றுக்கதிபதி இவ்விஷயத்தில் கவனம் செலுத்தினார். சாதாரணமாக மனிதர்கள் சாகும்பொழுது சப்தம் போடுவதில்லை என்பதை ஒருவேளை அனுபவத்தினால் நூற்றுக்கதிபதி அறிந்திருக்கலாம். இயேசு உரக்கச் சப்தமிட்டபோது, அவரிடத்தில் கொஞ்சம் சக்தி மீதமிருந்திருக்க வேண்டும்.





யோவான் விவரிக்கும் சம்பவங்களில் ஒரு டாக்டருக்கு உற்சாகமளிக்கும் சில நிகழ்ச்சிகள் இருக்கின்றன. ஏனென்றால் அதிர்ச்சியினாலும், மனத்தளர்ச்சியினாலும் அவர் தாக்கப் பட்டிருக்கிறார் என்பதை அவ்வளவு உண்மையோடும் தனித்தன்மை யோடும் அந்நிகழ்ச்சிகள் விவரிக்கின்றன. மயக்கமடைவதற்கான வழக்கமான காரணம் என்னவெனில், போதிய இரத்தம் தலைக்குச் செல்லாததுதுான். ஆகவே நோயாளி வெளுத்துக் காணப்படுகிறான். நீங்கள் அவனைக் கீழே கிடத்தினால் அவனுக்குத் தொண்டையிலும், வாயிலும் பெருமளவு வறட்சி ஏற்படுவதை அவன் உணர்வான். ஆகவே அவன் 'தண்ணீர்' என்ற வார்த்தையை மட்டும் தடுமாற்றத்தோடு கூறுவான் அல்லது இரைந்து கூவுவான். மயக்கத்துடன் கூடிய வலிப்பு நிலை, மரணமாகவும் மாறக்கூடும். இப்படிச் சாகப்போகும் மனிதன் தண்ணீர் கேட்டுச் சப்தம் போடலாம். ஆனால் பொதுவாக, சாகப் போகிறவன் தண்ணீர் கேட்பதில்லை. அவனது உதடுகள் எவ்வாறு உலர்ந்து போயுள்ளன என்பதை நீங்கள் பார்க்கலாம். நீங்கள் அவனுக்கு ஒரு கரண்டி தண்ணீர் கொடுத்தால் அதை அவன் சில வேளைகளில் விழுங்கி விடுவான். ஏனெனில் ஒருவேளை சாகப்போகிற அந்த நபருக்கு அதனை மறுத்து விடுவதற்கான சக்தி இல்லைபோலும். (பெரும்பான்மையான வேளைகளில் அவன் அப்படி மறுப்பதில்லை) எப்படியிருப்பினும், (தாங்க முடியாத அளவு தாகத்திற்குப் பின்னர்) மயங்கிய நிலையிலிருக்கும் ஒருவன் சுய உணர்வை இழக்க ஆரம்பிக்கிறான். இந்தப் பூமி அவனை விட்டு மறைவதாகத் தோன்றும். பறந்து செல்லுவதைப் போன்று ஓர் உணர்வு அவனுக்கு ஏற்படுகின்றது. இப்போது அவன் விடை கூறுவதாக எண்ணிக்கொண்டு, "நான் சாகிறேன்" என்று சப்தம் போடுவான். ஆனால் சாகக்கிடக்கும் ஒருவனோ இரத்தப் போக்கினாலும், கடுமையான நோயினாலும் முற்றிலும் களைத்துப்போய் வாயை மட்டும் திறந்து மூச்சை இழுப்பான். அவன் ஒருபோதும் "நான் சாகிறேன்" என்ற வார்த்தைகளைக் கூறமாட்டான். ஆனால் இயேசுவோ, "முடிந்தது" என்றும் "நான் சாகிறேன்" என்றும் கூறுகிறார்."

"தன்னைத் துன்பப் படுத்தியவர்களுக்காக அவர் வேண்டிக் கொண்டார். தன்னைச் சிலுவையிலறையும் முன்பே கள்வர்கள் சிலுவையில் அறையப்பட்டுத் தொங்குவதைக் கண்டார். அதன் பேரில் அவர் தமது விடுதலையைப் பற்றியும், மற்ற எல்லாருடைய விடுதலையைப் பற்றியும் சிந்திக்கிறார். அதன் பின்னர் தன் தாயாரைப் பற்றியும் சிந்திக்கிறார். எதிர்காலத்தைப் பற்றியும் சிந்திக்கிறார். இது ஒரு எளிய நடத்தையுள்ள நல்ல மகன் செய்வதைப் போன்றும், இயற்கைக்கு ஒத்தும் இருக்கிறது. தம்மை மேசியா என்றும் தாம் இறைவனுடைய ராஜ்யத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்றும் அவர் எண்ணியிருக்கிறார். ஒருவேளை தமது துன்பங்களினால் அவர் அதனை ஏற்படுத்துவார் போலும். தாவீது பாடிய "என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்" என்ற சங்கீதத்தை நினைவுபடுத்திப் பார்க்கிறார். கடைசியில் பெருந்துயரந்தரும் மயக்கமானது தம்மைப் பற்றிச் சிந்திக்கும்படி அவரைத் தூண்டுகிறது. ஆகவே அவர், 'பிதாவே என் ஆவியை உமது கைகளில் ஒப்புத்தருகிறேன்' என்று கூறி விட்டு கடைசியாக 'தண்ணீர், நான் சாகிறேன்' என்று உரக்கக் கூவுகிறார். எதன் காரணமாக இயேசு மரித்துப் போகிறார்? சுவிசேஷங்களில் அவர் ஆவியை விட்டார் என்று மட்டுமே சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு அவர் மரித்து விட்டார் என்று பொருள் கொள்ளப்படுகிறது. நூற்றுக்கதிபதியும் அப்படியே எண்ணினார். அப்படி எண்ணியிரா விட்டால், அவர் அவரது எலும்புகளை முறித்திருப்பார். ஒன்றுமில்லாததாகத் தோன்றக்கூடிய காரணத்தினாலும் மனிதர்கள் இறக்கக்கூடும். அவர்கள் பயத்தினாலும், அதிர்ச்சியினாலும் சாகலாம். ஆனால் சிலுவையிலறையப்பட்டதால், மிகச் சிலரே மரணமடைந்திருக்கின்றனர். டயோக்கிளிசியானஸ் சக்கரவர்த்தியினுடைய ஆட்சிக் காலத்தில் நடந்த வழக்குகளைப் பற்றி ஈபியஸ் விவரித்திருக்கிறார். களைப்பினாலோ, பசியினாலோ அல்லது பிணம் தின்னும் பறவைகள் அல்லது மிருகங்கள் தாக்கியதாலோ பல நாட்களுக்குப் பின்னரே சிலுவையிலறையப்பட்டவர்கள் மரித்தார்கள் என்று அவர் கூறுகிறார். இயேசுவோடு சிலுவையில் அறையப்பட்ட கள்ளர்கள் மாலை நேரத்தில் உயிரோடு இருந்ததால்,





போர்ச் சேவகர்கள் அவரை அடித்து நொறுக்க வேண்டியதிருந்தது. யோசேப்பு, இயேசு இறந்து விட்டதாக பிலாத்துவிடம் சொன்ன போது, அவர் அதனை நம்பவில்லை. இவ்வித நிகழ்ச்சிகளில் பிலாத்துவுக்கு அனுபவம் இருந்ததால், அவர் நூற்றுக்கதிபதியிடம் விசாரித்தார். இயேசு களைப்பினாலும், இரத்தப் போக்கினாலும் மரித்திருக்கக்கூடும். ஆனால் அவர் மரித்து விட்டார் என்பது பொருத்தமானதல்ல."

"இயேசு மரித்திருந்தால் அவரது உடம்பிலிருந்து இரத்தம் வெளிவந்திருக்காது. இந்த சம்பவத்தை அறிவிக்கும் யோவான் இந்த அசாதாரண சம்பவத்தின் முக்கியத்துவத்தை அறிந்திருந்தார் போலும். பின்னர் இதனைப் புரிந்து கொண்டவர்கள் இதனைப் பற்றிப் பேசத் துணியவில்லை. இயேசு காலை வேளையில் அடித்துத் துன்புறுத்தப்பட்டிருக்கிறார். (இதன் காரணமாக) தோலில் ஏற்படும் அரிப்புணர்ச்சி உள்நீர் வீக்கத்தையும் கொப்புளங்களையும் உண்டாக்கக் கூடும் என்று நமக்குத் தெரியும். ஒருவித நீர்க்கசிவு சருமத்தினுள்ளிருந்து வந்து சருமத்தின் மீது பரவவும், சிறியதோ பெரியதோ ஆகிய கொப்புளங்களை உண்டாக்கவும் செய்யும். இதுவே இபேன்ச்மென்ட்ஸ் டிராமாடிக்ஸ் டி சீரோசைட், டி கோலோமென்ட் டி லா பியூ என்று (மருத்துவத் துறையில்) அழைக்கப்படுகிறது. போர்ச் சேவகர்களில் ஒருவன், கொப்புளங்களைக் கண்டு அதில் ஒன்றைக் கீறிவிட்டான். குறும்பு செய்ய நினைத்து எச்சரிக்கையின்றி இவ்வாறு செய்துவிட்டான் போலும். இதனால் இயேசு காயமுற்றார். காயத்திலிருந்து இரத்தமும் நீரும் வெளிவந்தன. இப்போது இயேசு உணர்விழந்தவராகப் பார்ப்பதற்கு மரணித்தவர் போலத் தோன்றினார். பரிதாபத்திற்குரிய அறிவீனர்கள், இயேசு மரிக்கவில்லை என்பதை அறிந்து கொள்ள வில்லை. அவர்கள் அவரைத் தற்காலிகமான ஒரு கல்லறையில் அடக்கம் செய்ததாக தெரிகிறது. கல்லறை அருகிலேயே இருந்ததால் அவர்கள் அவரை அங்கு கிடத்தினார்கள். ஒருவேளை அவர் தோட்டக்காரன் ஒருவனுடைய அழுக்கடைந்த விகாரமான உடையைக் கண்டெடுத்திருக்க வேண்டும். மரியாள் அவரை அடையாளம் கண்டுகொள்ளாத வேளையில் அவர் கனிவாக, வேண்டுதல் புரியும்

பாவனையில் 'மரியாளே' என்று ஒரேயொரு வார்த்தை மட்டுமே கூறுகிறார். ஆனால் அந்த ஒரு வார்த்தையே அவரது கதியற்ற தன்மையையும் தனிமையையும் காட்டுகிறது. பின்னர் அவள் அவரை அடையாளம் கண்டுகொண்டு அவரது கைகளில் முத்தமிடுகிறாள். ஆனால் அவரோ 'என்னைத் தொடாதே' என்று கூறுகிறார். அவள் தொட முடியாத அளவில் காயங்களினால் ஏற்பட்ட வேதனை உடலெல்லாம் பரவியிருந்தது.

"நான் இன்னும் என் பிதாவினிடத்திற்கு ஏறிப் போகவில்லை என்று அவர் சொல்லுகையில், அவர் கீழ்த்திசை நாடுகளிலுள்ள அதே அலங்கார - உவமான வார்த்தைகளையே உபயோகிக்கிறார். இதன் மூலம் அவர், "நான் இன்னும் மரித்து விடவில்லை" என்றே பொருள் கொண்டார். அவர் எந்தக்கணமும் மரித்துப்போகும் அளவுக்கு அவ்வளவு தூரம் நொறுக்கப்பட்டவராகவும், சுகவீனராகவும், மகிழ்ச்சியற்றவராகவும், தாம் இருப்பதை உணர்கின்றதால், அவர் தமது சகோதரர்களுக்கு நல்லாசியைத் தெரிவித்துக்கொள்ளுகிறார். இது முற்றிலும் இயல்பாக இல்லையா? அந்தக் காலத்தில் அவர்களுக்குத் தெரிந்த மிகக் கேவலமான தண்டனையை அவர் அனுபவித்தார். அவர் கழித்து ஒதுக்கப்பட்டவராகவும், சமூக நீக்கம் செய்யப்பட்டவராகவும் இருந்தார். அவர் தம் நாட்டில் தங்கியிருந்து அதனைக் கறைபடுத்தலாகாது. அவர் தம்மைப் பொதுமக்கள் மத்தியில் காட்டிக் கொள்ளவும் துணியவில்லை. ஏனெனில் அவரது எதிரிகள் மீண்டும் அவரைக் கண்டுபிடித்து விடுவார்கள். தோட்டத்தில் ஒளிந்து கொள்ளுமளவுக்கு அவர் அவ்வளவு கூச்ச சுபாவமுடையவராக இருக்கிறார். ஒருநாள் அவர் எம்மாவுக்கச் செல்லும் ஒரு தனித்த வீதி வழியாகச் செல்லுகையில் தமது சீடர்களை சிறிது நேரத்திற்கே சந்திக்கிறார். ஆனால் கண்டுபிடிக்கப்படுவோம் என்ற பயத்தின் காரணமாக அவர்கள் அவருக்கு உதவ முன்வரவில்லை. அவருடன் நடந்து செல்லத் துணியவுமில்லை. அவர் உயிர் பெற்றெழுவதற்கு அவரது சீடர்கள் உதவியிருந்தால், அவர்கள் அவரைப் பசியோடு துணையற்றவராகத் தனியே செல்லும்படி விட்டிருக்கமாட்டார்கள். தூதுவர்கள் மூலமாக, ஒரு தனித்த இடத்தில் அவர்களைச்





சந்திப்பதற்கு அவர் ஏற்பாடு செய்தார். அவ்வப்போது திடீரென மறைந்து கொண்டிருந்த அவர் இறுதியாக அவர்களை விட்டு நிரந்தரமாகப் பிரிந்து விட்டார்."

"ஒரேயொரு முறை மட்டும் (மத்தேயு 28:18) அவர் அழுத்தமான குரலில் இப்படிப் பேசுகிறார்: 'வானத்திலும் பூமியிலும் சகல அதிகாரமும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.' டாக்டர்களாகிய எங்களுக்கு அது என்னவென்று தெரியும். நாங்கள் அதனை டிமென்சியா பாரனாய்ட்ஸ் **(Dementia Paranoids)** என அழைக்கிறோம்."

"இயேசு சிலுவை தண்டனையிலிருந்து தப்பிப் பிழைத்தார். அதன் பின்னர் இந்தியாவை நோக்கிப் பயணம் செய்தார். இறுதியாக ஈசா என்ற பெயரில் அழகிய காஷ்மீர்ப் பள்ளத்தாக்கில் உள்ள ஸ்ரீநகரில் (மகிழ்ச்சி நகரில்) குடியமர்ந்தார் என்ற நம்பிக்கையின்மீது அமைக்கப் பட்டுள்ள மதரீதியிலான ஒரு சமூகம் கீழ்த்திசை நாட்டில் இருக்கிறது. அவரது பெயர் யூஸ் ஆசாப் என்று அவர்கள் சொல்லுகிறார்கள். இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் **(Enzuklopadie des Islam)** 1913, **B,** பக்கம் 218ல் கண்டுள்ளபடி இந்த சமூகத்தின் பெயர் "அஹ்மதிய்யா" என்பதாகும்."

ஸ்வீடனைச் சேர்ந்த இந்த சிறந்த மருத்துவ அறிஞரின் ஒளிவுமறைவற்ற கருத்துப்படி இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்பது சந்தேகமறத் தெளிவாகின்றது. இக்கருத்து சுவிசேஷ நிகழ்ச்சிகளை மிகுந்த கவனத்தோடு ஆராய்ந்து பார்த்ததின் பின்னர் தெரிவிக்கப்பட்டதாகும். இயேசுவை சிலுவையிலிருந்து கீழேயிறக்கியபோது, எந்தவொரு மருத்துவ அதிகாரி அவரைச் சோதித்திருந்தாலும் அவரும் மேற்கண்டபடியே சான்று கூறியிருப்பார்.

## குறிப்புகள்

1. *டாக்டர் ஆல்பிரெட் சுவிட்சர் எழுதிய மான்ட்கோமரி மொழிபெயர்த்த தி கொஸ்ட் ஆஃப் தி ஹிஸ்டாரிக்கல் ஜீஸஸ் என்ற நூலைப் பார்க்கவும்.*
2. *தி ரிவியூ ஆஃப் தி ரிலிஜென்ஸ் இதழ் எண் 9, 1928.*

# அத்தியாயம் 7

## இயேசு பரமேறி (வானத்திற்கு)ச் சென்றது உண்மையா?

இயேசு பூத உடலோடே கல்லறையை விட்டு வெளியே வந்தார் என்பது சவிசேஷகர்களின் நான்கு அத்தாட்சிகளிலிருந்தும் தெளிவாகின்றது. அவரை ஓர் ஆவி என்று சீஷர்கள் எண்ணிய போது, அவர் "நான்தான் என்று அறியும்படி என் கைகளையும் கால்களையும் பாருங்கள். என்னைத் தொட்டுப் பாருங்கள். நீங்கள் காண்கிறபடி எனக்கு மாமிசமும், எலும்புகளும் உண்டாயிருக்கிறது போல, ஒரு ஆவிக்கு இராதே" என்று சொன்னார். பின்னர் அவர்களைப் பார்த்து "புசிக்கிறதற்கு ஏதாகிலும் இங்கே உண்டா?" என்று கேட்டார். அப்பொழுது அவர்கள் பொரித்த மீன் கண்டத்தையும் தேன்கூட்டுத் துணிக்கையையும் அவருக்குக் கொடுத்தார்கள். அவைகளை அவர் வாங்கி அவர்களுக்கு முன்பாக புசித்தார்.[1] மீண்டும் கைது செய்யப்படுவோம் என்ற பயத்தினால், தமது சீஷர்களை இரகிசயமாகவும் ஆள் பழக்கமற்ற இடங்களில் வைத்துமே அவர் சந்தித்தார். "தேவன் அவரை எழுப்பிப் பிரத்தியட்சமாய்க் காணும்படி செய்தார். ஆயினும் எல்லா ஜனங்களுக்கும் பிரத்தியட்சமாகும்படி செய்யாமல், அவர் மரித்தோரிலிருந்து எழுந்த பின்பு அவரோடே புசித்துக் குடித்தவர்களும் தேவனால் முன்பு நியமிக்கப்பட்ட சாட்சிகளு மாகிய எங்களுக்கே பிரத்தியட்ச மாகும்படி செய்தார்"[2] என்று பேதுரு சொல்வது போன்று அவர் தம்மை மற்றெல்லாருக்கும் காட்டிக் கொள்ளவில்லை.

அவர் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்திருந்தால் அல்லது அவரது உடம்பு ஆவிரூபமாக மாற்றப்பட்டிருந்தால், அவருக்கு மறுமுறை கைதாக்கப்படுவதைப் பற்றியோ அல்லது மரணத்தைப் பற்றியோ யாதொரு பயமும் இருந்திருக்காது. அதற்குப் பதிலாக, அவர் தம்மை எதிரிகளிடம் காட்டி பொதுமக்கள் கூட்டத்திற்கு மத்தியில், தாம் மரணத்திலிருந்து தப்பி வெற்றி பெற்று விட்டதை அறிவித்திருப்பார். எல்லாவற்றிற்கும் மேலாக, எதிரிகளுக்குப்





போதனை செய்வதன் மூலம் அவர்கள்மீது அன்பு செலுத்தி இருப்பார். அதன் பயனாக அவர்கள் அவர்மீது விசுவாசம் கொண்டிருக்கக் கூடும். ஆயினும் அவர் செய்ததென்ன? பாதுகாப்புக்கு வேண்டிய எல்லா எச்சரிக்கைகளையும் எடுத்துக் கொண்டார். ஏனென்றால் அவர் தமது பூத உடலோடு இருந்ததால் எதிரிகள் தம்மை மறுமுறையும் கைது செய்து மரண தண்டனைக்கு உட்படுத்துவார்கள் என்று அவர் பயந்து விட்டார்.

லூக்கா 24-ம் அதிகாரத்தில் 39-ம் வசனத்திற்கு பல்வேறு ஆசிரியர்களும் தங்களது தெளிவுரையில் "கிறிஸ்து என்பவர் வெறும் தோற்றமே அல்லது அவர் ஆவி ரூபமானவரே. அவருக்குப் பூத உடல் கிடையாது. ஆகையால் எவ்விதமான உடல் வருத்தங்களையும் அவர் அனுபவிக்க வேண்டியதில்லை. தேவனின் வலது பாரிசத்தில் அவர் இப்போது உட்கார்ந்து கொண்டிருப்பது உயிர்த்தெழுந்த இந்த உடலோடுதான் என்று போதிப்பது ஆரம்பகாலக் கிறிஸ்தவ சபையோரிடமுள்ள பிரதான மூடக் கொள்கைகளில் ஒன்றாகும். இக்கருத்து இந்த வசனத்திற்கும், மற்ற வசனங்களுக்கும் நேர் முரணமாக இருக்கின்றது" என எழுதியுள்ளார்கள்.

அவர் தமது சீஷர்களைப் பார்த்து புசிக்கிறதற்கு ஏதாகிலும் கிடைக்குமா என்று கேட்டு, அவர்கள் முன்பாகவே புசித்திருக்கிறார். எருசலெமுக்கும் கலிலேயாவுக்கும் இடையேயுள்ள முழுத் தூரத்தையும் காலால் நடந்தே சென்றார். ஆயினும் பிரதான பாதையின் வழியாக அல்லாமல், தம்மைத் தொடர்ந்து வரக்கூடியவர் களிடமிருந்து தப்பிக்க, சுற்று வழியாகவே சென்றார். மனிதப் பிறவியைத் தவிர அவர் வேறு எந்தப் பிறவியாக இருந்தாலும் இவ்வாறெல்லாம் செய்திருக்க வேண்டிய அவசியம் இல்லை.

### இயேசுவின் திடீர்த் தோற்றம்

"......சீஷர்கள் கூடியிருந்த இடத்தில், யூதர்களுக்குப் பயந்ததினால் கதவுகள் பூட்டியிருக்கையில், இயேசு வந்து நடுவே நின்று; உங்களுக்குச் சமாதானம் என்றார்."[3]

இந்த வாக்கியம்கூட அவர் ஆவிரூபமான உடலோடு உயிர்த்தெழுந்தார் என்பதைக் காட்டவில்லை. லூக்கா 24-ம் அதிகாரம் 39-ம் வசனத்திற்கு பல்வேறு உரையாசிரியர்களும் தங்கள் தெளிவுரையில் "மாம்சமும் எலும்புகளும் உண்டாகியிருக்கிற ஓர் உடம்பு கதவுகள் பூட்டியுள்ள ஓர் அறையின் உள்ளே எவ்வாறு புகுந்து செல்ல முடியும் என்று எங்களுக்குத் தெரியவில்லை" என்று கூறியுள்ளார்கள்.

என்னுடைய அபிப்பிராயத்தில், இயேசுவின் இந்த திடீர் தோற்றம் அசாதாரணமானது என்றோ அவருக்குப் பூத உடம்பு கிடையாது என்று காட்டும் ஓர் அற்புதம் என்றோ இந்த வாக்கியம் எடுத்துக் காட்டவில்லை. அவர் தமது கைகளையும், விலாப் புறத்தையும் சீஷர்களிடம் காட்டியதிலிருந்து அவர் இவ்வுலக நியதிப்படி பூத உடலோடிருந்ததாக அவரே உறுதிப்படுத்தி விட்டார். ஆகவே அவர்களும் அவரைக் காண மகிழ்ச்சி அடைந்தனர். "யூதர்களுக்குப் பயந்ததினால் சீஷர்கள் ஒன்று கூடியிருந்த இடத்திற்கு இயேசு வந்தார் என்ற உண்மையையே இந்த வாக்கியம் காட்டுகிறது. ஒருவேளை அவர்கள் கூடியிருந்த இடம் இருளடைந்த ஒரு மண் குடிசையாக இருந்திருக்கலாம். அநேகமாக சீஷர்கள் உள்ளே நுழைந்த அதே நேரத்தில் இயேசுவும் நுழைந்திருக்கலாம். (அவர்கள் யாவரும் எருசலேமுக்குப் புதியவர்கள் என்பதால்) அவர்களது விருந்தாளி அல்லது இயேசுவின் எஸ்ஸீன் நண்பர்கள் - அந்த இடத்திற்குப் பல கதவுகள் இருந்த காரணத்தால் - ஓர் இரகசியக் கதவின் வழியாக அவரை அவ்விடத்திற்குக் கூட்டி வந்தார்கள் என்று கூறினாலும் அது நம்பத் தகுந்ததேயாகும். இந்த நிகழ்ச்சியை விவரித்து வரும் லூக்கா கதவைப்பற்றி குறிப்பிடாமல் அதை ஒதுக்கிவிட்டதிலிருந்து அது நிகழ்ச்சியின் முக்கியமான பகுதியல்ல என்று தெரிகிறது. அப்படியில்லாவிட்டால், சீஷர்கள் ஓர் ஆவியைப் பார்த்தார்கள் என்ற எண்ணம் உறுதியாகிவிடும். ஆனால் இயேசுவே அது தவறு என்று மறுத்துரைத்து, தமது கைகள் விலாப்புறம் ஆகியவற்றைக் காட்டியும்[4] மேலும் தாம் மாம்சத்தோடும், எலும்பு களோடும் கூடிய





அதே இயேசுவே என்று தெளிவாகக் கூறியும் அந்தக் கருத்து பொய்யானது என நிரூபித்துக் காட்டி விட்டார்.

திரு. டோக்கர் எழுதிய இஃப் ஜீசஸ் டிட்நாட் டை அப்பான் தி கிராஸ் என்ற நூலை நான் பார்க்க நேர்ந்தது. அதில் கதவுகள் மூடப்பட்ட ஓர் அறையினுள் திடீரென இயேசு தோன்றியதைக் குறித்து, நான் மேலே கொடுத்துள்ளதைப் போன்ற விவரங்களையே திரு. டோக்கரும் தந்துள்ளார்.

அவர் தமது புத்தகத்தில் (14-16 ஆம் பக்கங்களில்) "மூடியிருந்த கதவுகளின் வழியே ஊடுருவிச் செல்லுவதைப் போன்ற அதிஅற்புதமான சக்தியை சிலுவைத் தண்டனைக்குப் பின்னர் இயேசு கிறிஸ்துவின் உடல் பெற்றிருந்தது என்று சிலர் கருதுகின்றனர். ஆனால் உண்மையில் இந்த ஊகத்திற்கு எவ்வித அடிப்படையும் கிடையாது. இயேசுவின் தோற்றத்தைப்பற்றிய வரையில் சீஷர்கள் கண்டது ஆவியே, மானிட சரீரமல்ல என்ற எண்ணத்தை முறியடிப்பதற்காக வேண்டி ஆரம்பகால சுவிசேஷகர்கள் மூவர் தங்களது விளக்கங்களைக் கவனமாக ஒழுங்குபடுத்தி வைத்துள்ளனர். தூய யோவான் கூட, மூடியிருந்த ஒரு கதவின் வழியே ஊடுருவிச் சென்றார் என்று தெளிவான வார்த்தைகளில் குறிப்பிடவில்லை. அவர் சொல்லக்கூடிய வார்த்தைகளை சொற்பொருளின்படி சரியென்று வைத்துக் கொண்டால், இயேசு கலிலேயாவுக்குத் திரும்பும் வரையில், எருசலேமில் மறைந்து இருந்திருக்க வேண்டும் என்று சொல்வதே சரியான விளக்கமாகும். அவர் பொதுமக்கள் மத்தியில் வெளிப்படையாக தோன்றவில்லை என்று அழுத்தமாகக் கூறப்பட்டுள்ளது. அவர் உயிரோடிருந்ததாக சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குத் தெரியவந்தால், அவர் மீண்டும் கைது செய்யப்பட்டு தண்டனைக்குள்ளாக்கப்படுவார் என்பது மிகவும் தெளிவான விஷயம். ஆகவேதான் "யூதர்களுக்குப் பயந்ததினால்" கதவுகள் அவ்வாறு மூடியிருந்ததாக தூய யோவான் கூறுகிறார். மூடப்பட்டிருந்த கதவுகள் வெளிக்கதவுகளாய் இருந்திருக்கும். இவ்வாறு ஒளிந்து கொள்வதற்கு மிகவும் ஏற்ற இடம் அவரது நண்பர்

வீடாகவே இருந்திருக்கும். எங்கு அவரும் அவரது சீஷர்களும் கூடியிருப்பது வழக்கமாயிருந்ததோ, எங்கு அவருக்கு உணவு வகைகள் கிடைக்குமோ, எங்கு அவரது காயங்களுக்கு சிகிச்சை செய்ய முடிந்ததோ அந்த இடமே இவ்வாறு ஒளிந்திருப்பதற்கு மிகவும் ஏற்ற இடமாகும். அந்த வீட்டிற்குள்ளேயே வேறொரு பாகத்திலிருந்து சீஷர்கள் கூடியிருந்த அறைக்குள் அவர் வருவதற்கு, வீட்டின் வெளிப்புறக் கதவுகள் மூடப்பட்டிருப்பதால் எவ்விதத் தடையும் நேராது. சீஷர்கள் வருவதற்கு முன்னரே அவர் அந்த அறைக்கு வந்திருந்து, தாம் அவர்கள் மத்தியில் தோன்றும் நேரம் வரையிலும் அவர்கள் அறியாதபடி அங்கேயே இருந்திருக்கலாம். அவர் எம்மாவுக்குப் பயணம் செய்ததாக தூய லூக்கா கூறும் கதையிலிருந்து உயிர்த்தெழுந்த இயேசுவுக்கு மனிதனின் பார்வையிலிருந்து மறைந்து விடுவதற்கான சக்தி இருந்தது என்று ஊகிக்கப்படுகிறது. அவர் வீட்டை விட்டு வெளியேறியபோது, “உடனே அவர் அவர்களுக்கு மறைந்து போனார்”.

டாக்டர் ஆர்தர் ரைட் என்பார் இன்னும் ஒரு படி மேலே சென்று இவ்வாறு கூறுகின்றார். “ஒரு கணம் அவர் எம்மாவுவில் இருந்தார். அடுத்த கணம் எருசலேமிலிருந்தார். ஒரு நேரத்தில் உணர்வு நிலையிலிருந்தார். மறு நேரத்தில் ஆவி நிலையில் இருந்தார். (கிறிஸ்துவின் வாதம்.... ‘தி இன்டர்பிரெட்டர்’ ஜுலை 1916, பக்கம் 385) அவர் மரித்ததற்குப் பின்னர்தான் இரண்டு சீஷர்களும் எம்மாவுவை விட்டுச் சென்றார்கள் என்றும், அவருக்கு முன்னரே எருசலேமில் உள்ள வீட்டு அறைக்கு வந்து சேர்ந்து விட்டார்கள் என்றும் தூய லூக்கா கூறுவதை எழுத்தாளர் மறந்துவிட்டார் என்பது மிகவும் வெளிப்படை. தமது உடல் முன்பு போலவே மாம்சத்தாலும், எலும்புகளாலும் ஆனதேயல்லாமல் ஆவியானதல்ல என்று இயேசு நிரூபித்துக் காட்டியது இக்கதையைத் தொடர்ந்து நமக்கு ஞாபகத்துக்கு வருகிறது. ஆகவே, (எருசலேமுக்கு அவர் திரும்பிச் செல்ல வேண்டியதிருப்பதால்) அவர் விரைந்து சென்றார் என்ற பொருளில் இவ்வசனத்தை தூய லூக்கா எழுதியுள்ளார் என்பதைத் தவிர வேறெதையும் அதிகமாக நம்புவது கடினமாக இருக்கிறது.





ஆணிகள் அறையப்பட்டதால் உண்டான காயங்களில் விரலை விட்டுப் பார்க்கும்படி தோமாவை அவர் கேட்டது உண்மையானால், சந்தேகங்கொண்ட சீஷர்களைப் பார்த்து “நான்தான் என்று அறியும்படி, என்னைத் தொட்டுப் பாருங்கள்; நீங்கள் காண்கிறபடி எனக்கு மாம்சமும், எலும்புகளும் உண்டாயிருக்கிறது போல ஒரு ஆவிக்கு இராதே”[5] என்று அவர் சொன்னது உண்மையானால், சீஷர்களின் முன்பாக அவர் உணவு புசித்தது உண்மையானால், கல்லறையைவிட்டு வெளியே வந்ததும் அவர் தோட்டக்காரன் வேடம் புனைந்தது உண்மையானால் எருசலேமிலிருந்து கலிலேயா வரைக்குமுள்ள முழுத்தூரத்தையும் நடந்தே கடந்து சென்றார் என்பது உண்மையானால், மீண்டும் கைது செய்யப்படாமல் இருப்பதற்காக அவர் தம்மாலியன்ற ஒவ்வொரு எச்சரிக்கையையும் கைக்கொண்டார் என்பது உண்மையானால், மூடிய கதவுகளுள்ள அறையினுள்ளே வந்து தோன்றினார் என்ற கூற்று அதன் சொற்பொருளின்படி வார்த்தைக்கு வார்த்தை பொருள் கொடுத்துப் பார்த்தால், உண்மையானதல்ல; அவரது உடம்பு ஆவி ரூபமானதல்ல; மாம்சத்தாலும் எலும்புகளாலும் உண்டாக்கப்பட்டது என்ற உண்மை இரவைத் தொடர்ந்து பகல் வருவதைப் போன்று வெளி வருகின்றது. துன்பமான சிலுவை நிகழ்ச்சி நடந்தேறி ஏறக்குறைய நாற்பது தினங்களுக்குப் பின்னர், ஒரு மேகத்தினால் அவர் வானத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டார் என்று சுவிசேஷகர்கள் கூறுவதை (சொற்பொருளின்படி பார்த்தால்) ஒரு கட்டுக் கதையேயாகும் என்பதையும் இது காட்டுகின்றது. ஏனென்றால் கனம் நிறைந்த பூத உடலை அவர் பெற்றிருந்தார் என்பது உறுதியான பின்னர், ஆவியாகிய மேகம் வானத்துக்கு அவரைத் தூக்கிச் சென்றது எனக் கூறுவது மூடத்தனமாகும். ஒரு ஜட உடலை மேலே தூக்குவதற்கு எந்த மேகத்திற்கும் சக்தி இல்லை. பூத உடல் எதுவும் வானத்துக்குப் பறந்து செல்ல இயலாது. அவர் ஆவிரூபமான உடலைப் பெற்றிருந்தார் என்றால், அவரது பூத உடல் எங்கே சென்றது? அவர் தமது பூத உடலை கல்லறையில் விட்டுச் செல்லவில்லை. எஞ்சிய நாட்களில் அவர் மேற்கொண்ட

பயணத்தின்போது பூத உடலோடுதான் தமது நாட்டிற்குள் நடமாடிக் கொண்டிருந்தார் என்பதை நாம் அறிந்திருக்கிறோம். பல்வேறு ஆசிரியர்கள் எழுதிய தெளிவுரையிலிருந்து நாம் மேலே சுட்டிக் காட்டியுள்ளதுபோல, இயேசு தமது பூத உடலோடு வானத்திற்கு ஏறிச் சென்றார் என்று கூறுவது, இயேசு கிறிஸ்துவின் சொற்களுக்கு முற்றிலும் முரணானது. ஏனென்றால், “பரலோகத்தில் இருந்திறங்கினவரும், பரலோகத்திலிருக்கிறவருமான, மனுஷகுமாரனேயல்லாமல் பரலோகத்திற்கு ஏறினவன் ஒருவனுமில்லை”[6] என்று அவரே கூறியிருக்கிறார். மாம்சமும், எலும்புகளும் கொண்ட உடம்போடு அவர் பரலோகத்திலிருந்து இறங்கி வரவில்லை என்பது மிகத் தெளிவு. ஆகவே அத்தகைய உடலோடு அவர் பரலோகத்திற்கு ஏறிச் செல்ல முடியாது. மாம்சமும் எலும்புகளும் கொண்ட உடலோடு அவர் கர்த்தரின் வலது பாரிசத்தில் அமர்ந்தார் என்பது சுத்தமான புறசமயக் கொள்கையாய் இருப்பதோடு, இதை மறுத்துரைக்க வேண்டிய அவசியமேயில்லாதபடி அவ்வளவு நகைப்பிற்குரியதாகவும் இருக்கிறது.

பரமேறுதல் கொள்கைக்கு எந்த வாக்கியங்கள் ஆதாரமாக இருக்கின்றனவோ, அவை நம்பத் தகுந்தவையல்ல. பரமேறுதலைப் பற்றி மத்தேயு எதுவுமே கூறவில்லை. கல்றையை விட்டு இயேசு வெளியேறிய பின்னர், கலிலேயாவுக்குச் சென்று, சீஷர்கள் கூடுவதற்கென்று குறித்து வைத்திருந்த ஒரு மலையில் வைத்து அவர்களைச் சந்தித்தார் என்று மட்டுமே மத்தேயு கூறுகிறார்.[7]

கலிலேயாவுக்கு வந்து தம்மைச் சந்திக்கும்படி சீஷர்களுக்கு இயேசு ஒரு செய்தி சொல்லியனுப்பினார் என்று முதலில் குறிப்பிடும் மாற்கு, தாம் முதலில் குறிப்பிட்டதற்கு எவ்விதத் தொடர்பு இல்லாமலும் தாம் குறிப்பிடும் இடத்தைப் பற்றி ஒரு விளக்கமும் கொடுக்காமலும், “இவ்விதமாய்க் கர்த்தர் அவர்களுடனே பேசின பின்பு, பரலோகத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டு, தேவனுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்தார்”[8] என்று குறிப்பிட்டுள்ளார்.





“தேவனுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்தார்” என்ற கடைசிப் பகுதி மாற்கின் கூற்று முழுவதையுமே பலமிழக்கச் செய்கிறது. ஏனெனில் இயேசு தன்னுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்ததைப் பார்ப்பதற்கு சுவிசேஷகர் மாற்கும் இயேசுவுடன் கூடவே பரலோகத்துக்குச் சென்றார் என்பதை நம்மால் ஏற்றுக் கொள்ள இயலவில்லை. “(மூலப் பகுதியோடு) அவை பிந்திய காலத்தில் சேர்க்கப்பட்டன. ஏறக்குறைய இரண்டாயிரம் நூற்றாண்டின் ஆரம்பத்தில், ஒருவேளை தொலைந்து போய்விட்ட அல்லது தவறானதென்று கருதப்பட்ட கடைசிப் பகுதிக்குப் பதிலாக, அந்த இடத்தில் சேர்க்கப்பட்டிருக்கலாம்”[9] என்பதே மாற்கு எழுதிய சுவிசேஷத்தின் கடைசி பன்னிரெண்டு வாக்கியங்களைப் பற்றி உண்மையாகும். எனவே மாற்கு கூறுவதை, இக்கொள்கைக்கு ஆதாரமாகக் கொள்ள இயலாது.

தூய லூக்கா கூறுவது: “பின்பு அவர் பெத்தானியா வரைக்கும் அவர்களை அழைத்துக்கொண்டு போய், தம்முடைய கைகளை உயர்த்தி, அவர்களை ஆசீர்வதித்தார். அவர்களை ஆசீர்வதிக்கையில், அவர்களை விட்டுப் பிரிந்து, பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டார்.”[10]

தூய லூக்கா சொல்லின்படிப் பார்த்தால்கூட, இயேசு அவருடைய சீஷர்களிடமிருந்து பிரிக்கப்பட்டார் என்று கூறுவதற்கும், அவர் பரலோகத்திற்கு ஏறிச் செல்லுவதை சீஷர்கள் பார்த்தார்கள் என்று சொல்லுவதற்கும் அர்த்தத்தில் ‘ஏகப்பட்ட’ வித்தியாசம் இருக்கிறது.

மேலும் அப்போஸ்தலர் நடபடிகளில், “இவைகளை அவர் சொன்ன பின்பு அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கையில், உயர எடுத்துக் கொள்ளப்பட்டார்; அவர்கள் கண்களுக்கு மறைவாக ஒரு மேகம் அவரை எடுத்துக் கொண்டது.”[11]

“அவர் பார்வையிலிருந்து மறைந்து விட்டார்” என்று கூறுவது, அவர் வானத்திற்கு ஏறிச் சென்றார் என்று பொருள்படாது. மலையின் உச்சிக்கு அவர் ஏறிச் சென்றார்; மலையுச்சி

மூடுபனியாலோ அல்லது மேகத்தாலோ மறைக்கப்பட்டிருந்ததால், சீடர்களின் கண்களுக்கு அவர் மறைக்கப்பட்டார்; அதன் பின்னர், மலையுச்சியிலிருந்து மலையின் மறுபக்கமாகக் கீழிறங்கி, யூதர்களின் விரோதத்திலிருந்தும் சதித்திட்டங்களிலிருந்தும் பாதுகாப்பாக இருக்கக்கூடிய வேறொரு நாட்டுக்குப் புறப்பட்டுச் சென்றார் என்று சொல்லுவதே நடைமுறைக்கு ஏற்ற விஷயமாகும்.

யோவானும் இதனையே உறுதிப்படுத்துகிறார். இயேசு கடைசி முறையாகத் தமது சீடர்களை திபேரியா கடற்கரையில் சந்தித்தபோது அவர், பேதுருவை நோக்கி, "என் ஆடுகளை மேய்ப்பாயாக" என்றார். அவர் மேலும் "என்னைப் பின்பற்றி வா" என்றார். அப்போது பேதுரு திரும்பிப் பார்த்து, இயேசு நேசித்த சீடன் பின்னே வருகிறதைக் கண்டான்[12] என்று யோவான் கூறுகிறார்.

யோவான் எழுதிய சுவிசேஷத்தின் கடைசியிலுள்ள இந்தச் சில வரிகள், இயேசு பரலோகத்திற்கு ஏறிச்செல்லவில்லை; மாறாக மற்றொரு நாட்டிற்குக் குடிபெயர்ந்து சென்றார் என்பதையே தெளிவுபடுத்துகின்றன என்பதில் சிறிதும் ஐயமில்லை.

ஆகவே, மத்தேயு, யோவான் ஆகிய இருவருடைய விளக்கங்களும் இந்தத் தத்துவத்தை மிகப் பலமாக ஆதரிக்கும் அதே வேளையில் இவை பரமேறுதலைப் பற்றி எதுவும் கூறவில்லை என்பதும் இங்கு தெளிவாகின்றது.

பரமேறுதலைப் பற்றி மாற்கு கூறியுள்ள வார்த்தைகள் யாரோ இனந்தெரியாத ஒருவரால் மூல வசனத்தோடு இணைக்கப் பட்டதாகும். இயேசு பரமேறுதலைப் பற்றித் தெளிவில்லாத முறையில் குறிப்பிடும் லூக்காவோ, சீடர்களைவிட்டு இயேசு பிரிந்து விடைபெற்றுச் செல்லும் போது அங்கு ஆஜராகி இருக்கவில்லை. மேலும் அவர்கள் இவ்விஷயத்தில் அதிகாரம் பெற்றவர்கள் என்றழைக்கப்படுவதற்குத் தகுதியற்றவர்கள் என்பதற்கான ஆதாரங்கள் இன்னும் உண்டு. வேறு சில முக்கியமான விஷயங்களிலும் அவர்களிடையே முரண்பாடுகள் காணப்படுகின்றன. இருவர் இயேசுவை, பெத்தானியாவிலிருந்தும்,





ஒலிவ மலையிலிருந்தும் பரலோகத்திற்கு உயர்த்தி விட்டார்கள். மூன்றாவது நபர் எந்த இடம் என்று குறிப்பிடாமல் எருசலேமில் இருந்து வானத்திற்கு உயர்த்தி விட்டார். கலிலேயாவுக்குச் சென்று அவரது சீஷர்களை சந்தித்தார் என்று மத்தேயு கூறுகிறார். ஆனால் யோவானோ, திபேரியாக் கடற்கரையில் வைத்து தம் சீஷர்களைப் பிரிந்து சென்றார் என்று கூறுகிறார்.

### *வெய்கல் எழுதுவதாவது:*

"நிருபங்கள் எனப்படும் ஆரம்பகாலக் கிறிஸ்தவ எழுத்துச் சான்றுகளில் 'பரமேறுதல்' பற்றி எழுதப்பட்டிருக்கவில்லை. ஆரம்பகால சுவிசேஷமாகிய தூய மாற்கு எழுதிய சுவிசேஷத்திலும் இதைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கவில்லை. மாற்குவில் வரும் "பரலோகத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு" என்ற வார்த்தைகள் தெளிவற்றவயைாய் இருக்கின்றன. அத்துடன் நடைமுறையில் எல்லா பைபிள் அறிஞர்களாலும் 'பிற்காலச் சேர்க்கை' என்று கருதப்படும் கடைசிப் பன்னிரண்டு வாக்கியங்களில் ஒன்றாக இதுவும் சேர்க்கப்பட்டுள்ளது."

"புறசமயக் கடவுள்களின் வாழ்க்கையைப் பற்றிக் கூறும் பழம்புராணக் கதைகள் இத்தகைய பரமேறுதலோடுதான் முடிவது வழக்கம். உதாரணமாக எலியாவுடைய வாழ்க்கையும் பரமேறுதலோடு தான் முடிந்துள்ளது. கிறிஸ்தவ மதம் தோன்றி வளர்ந்த நாட்டில், அடோனிஸ் தெய்வத்தை வணங்கும் வழக்கம் செழித்த நிலையில் இருந்தது. இந்த அடோனிஸ் தேவன், தான் உயிர்த்தெழுந்த பின்னர் தம்மைப் பின்பற்றியவர்களின் முன்னிலையில் வானத்திற்கு ஏறிச் சென்றதாகவே கருதப்பட்டது. இதைப்போலவே டையோனிசியஸ், ஹெராக்லிஸ், ஹயாசிந்த், கிருஷ்ணா, மித்ரா இன்னும் இதைப்போன்ற பல கடவுள்கள் பரலோகத்திற்குச் சென்றதாகவே கருதப்படுகிறது."[13]

இதனால், பரமேறுதல் தத்தவத்திற்கு இப்படிப்பட்ட வலுவில்லாத ஆதாரங்களை அடிப்படையாகக் கொள்ளுதல் தவறாகும் என்ற முடிவுக்கு நாம் வருகிறோம்.

## குறிப்புகள்

1. லூக்கா 24 : 39-43
2. அப். நடபடிகள் 10 : 40,41
3. யோவான் 20 : 19
4. யோவான் 20 : 27, லூக்கா 24 : 31
5. லூக்கா 24 : 39
6. யோவான் 3 : 13
(அடைப்புக் குறிகள் மொழிபெயர்ப்பாளருடையவை)
7. மத்தேயு 28 : 16-17
8. மாற்கு 16 : 19
9. பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் இரண்டாம் பதிப்பு
- தொகுதி 17, பக்கம் 730
10. லுக்கா 24 : 50-51
11. அப். நடபடிகள் 1 : 9
12. யோவான் 21 : 16-20
13. வெய்கல் எழுதிய பேகனிசம் இன் அவர் கிறிஸ்டியானிட்டி என்னும் நூல் - பக்கம் 99 - 101





# அத்தியாயம் - 8

## இயேசு சிலுவையில் மரித்து, விண்ணேறிச் சென்றார் என்ற நம்பிக்கை உருவானது எவ்விதம்?

நாம் முந்தைய அத்தியாயங்களில் நிரூபித்துள்ளதுபோல சிலுவையை விட்டுக் கீழேயிறக்கப்படும்பொழுது, இயேசு உயிரோடிருந்தார் என்பது உண்மையானால், பவுல், பேதுரு போன்ற ஆரம்பகாலக் கிறிஸ்தவர்கள் இயேசு சிலுவையில் மரித்தார் என்று நம்பியது ஏன்? இன்றையக் கிறிஸ்தவப் பிரிவுகளில் பெரும்பான்மையோர் போதிப்பதைப்போலவே, இயேசுவின் சிலுவை மரணமும், அதையொட்டி அவர் உயிர்த்தெழுந்ததுமே அவர்களுடைய போதனையின் அடிப்படையான விஷயமாக இருந்தது. அவர்களுடைய நிரூபங்களிலிருந்து இவ்வுண்மை தெளிவாகின்றது. எனவே இவ்விஷயம் பற்றிய நிலைமையை விரிவாக ஆராய்வது அவசியம் என்பதில் சந்தேகமில்லை.

இயேசு கிறிஸ்து கைது செய்யப்பட்ட சமயத்தில் சீடர்கள் அவரை கைவிட்டுவிட்டு பீதியினால் சிதறி ஓடினார்கள். அவர் சிலுவையைவிட்டுக் கீழேயிறக்கப்பட்டபோதோ, அன்றி கல்லறையிலிருந்து அவர் வெளிவந்தபோதோ அவர்கள் அவரை மீண்டும் வந்து பார்க்கவில்லை. மீண்டும் கைது செய்யப்படுவோம் என்ற பயத்தினால் அவர் மக்கள் மத்தியில் பகிரங்கமாகத் தோன்றா விட்டாலும் அவர் தமது சீடர்களை இரகசியமாகவோ ஆட்பழக்கம் இல்லாத இடங்களில் வைத்தோ சந்தித்தார். அவர் மீண்டும் அவர்களைக் கண்டு மரணத்திலிருந்து தப்பி விட்டதை அவர்களுக்கு உறுதிப்படுத்தாமல் இருந்திருந்தால், அவரை மேசியாவாகக் கருதிக் கொண்டிருந்த அவர்களது நம்பிக்கை ஆட்டம் கண்டிருக்கும். யூதர்களின் வாக்களிக்கப்பட்ட மேசியா என்று நம்பப்பட்டவர் சபிக்கப்பட்ட மரணமடைந்து விட்டார் என்று கருதி, அவர்கள் அவரைப் புறக்கணித்திருப்பார்கள். ஆகவே ஆட்டம் கண்டிருந்த அவர்களுடைய நம்பிக்கையை மீண்டும் நிலைநிறுத்துவதற்காக, அவர் தம்மை அவர்களிடம் காண்பித்துக் கொண்டார். உண்மையிலேயே அவர் மரணத்தின் கொடிய பிடியிலிருந்து

தப்பித்ததே அவரது வாதத்திற்கு மறுக்க முடியாத ஆதாரமாக அமைந்தது. அது அவர்களுக்குப் பெரியதோர் பலத்தையும் தந்தது. யோவான் கூறுவது போன்று, திபேரியாக் கடற்கரையில் அவர்களுக்கு விடை கொடுத்து விட்டு அவர் தம் நாட்டைப் பிரிந்து சென்றபோது அவர்கள் தங்கள் நம்பிக்கையில் திடமாகவே நின்றனர். அத்துடன் அவர்களது வாதத்தை யூதர்களுக்கு போதிக்கவும் முயன்றனர். யூதர்களோ அவர்களை கொடுமையாக தண்டித்தனர். அவர்களில் சிலர் உடனடியாகக் கொல்லப்பட்டனர். மற்றும் சிலர் கல்லெறிந்து சாகடிக்கப்பட்டனர். யூதர்கள் அவர்களது வாதத்தை மறுத்து அதற்காக அவர்களைத் திட்டினர். தங்கள் மேசியாவை சபிக்கப்பட்ட மரணமடைய விட்டுவிட்டதாகக் கூறி அவர்களை எள்ளி நகையாடினர். இதைவிடக் கொடிய தண்டனையைப் பற்றிய பயத்தினால் சீடர்கள், இயேசு தப்பிச் சென்ற விஷயத்தை வெளியிட முடியாதிருந்தனர். ஆகவே அவர்கள் அவ்விஷயத்தை மறைத்து விட்டனர் என்று கூறுவது மிகவும் பொருத்தமே. இயேசு மரித்து விட்டதாக யூதர்களே பொதுவாக அறிவித்திருந்தபடியால், இயேசு மரித்தோரிலிருந்து எழுந்தார் என்று அவர்களுக்குப் பதிலுரைத்துவிட்டு, வானத்துக்கு ஏறிச் சென்றுவிட்டதாகவும் சீஷர்கள் கூறினார்கள். இயேசு ஒரு பாதுகாப்பான இடத்துக்குச் சென்று விட்டதாகவே சீஷர்கள் அப்போது அதற்குப் பொருள் கொண்டனர்.★

★ ***'வானம்' என்ற சொல் உயரமான இடத்தைக் குறிப்பதற்கும் பயன்படுத்தப் பட்டுள்ளது. உதாரணமாக, யாத்திராகமம் 19:20-ல் தேவன் சீனாய் மலையின் உச்சியில் இறங்கி மோசேயுடன் பேசியதாக படிக்கிறோம். ஆனால் யாத்திராகமம் 20:22-ல் மலை உச்சி என்ற சொல்லுக்கு பதிலாக வானம் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. மேலும் யூதக் கலைக்களஞ்சியத்தில் மோசே வானத்திற்கு ஏறிச் செல்லும் முன்னர் நாற்பத்தியோராம் நாள் முற்பகலில் இறங்கிவருவேன் என்று கூறியதாக வந்துள்ளது.*** (Shab. 89a, Ex. R. IXI, Jewish Encyc. word Moses) ***யாத்திராகமம் 24:18-ல் மோசே மேகத்தின் நடுவிலே பிரவேசித்து மலையின் மேல் ஏறி இரவும் பகலும் நாற்பது நாள் மலையில் இருந்ததாக குறிப்பிடப்பட்டுள்ளது. இதைப் போன்றே, இயேசு ஒலிவ மலையின் உச்சிக்கு சென்ற போது, ஒரு மேகம் அவரை அவர்களின் பார்வையிலிருந்து மறைத்து விட்டது. சீடர்கள் அவரை மலையின் உச்சிக்கு ஏறிச்செல்வதை பார்த்ததால் மேற்சொன்ன வழக்கின்படியே அவர் வானத்திற்கு சென்று விட்டதாக கூறலாயினர்.***





எது எவ்வாறிருப்பினும், யூதர்களுக்கு இப்பதில் திருப்தியளிக் வில்லை. இயேசு வானத்திற்கு ஏறிச் செல்வதை அவர்கள் பார்க்கவில்லை. ஆகவே அவர் சபிக்கப்பட்ட மரணம் அடைந்து விட்டதாகவே அவர்கள் நம்பினர்.

இன்னும், தங்கள் தலைவரின் போதனைக்கு ஏற்ப யூதர்களுக்கு மட்டுமே அவர்கள் போதித்தனர். இயேசுவாலேயே யூதர்களை திருப்திப்படுத்த இயலாமற் போய் விட்டது. அவ்வாறிருக்கையில் கீழ்நிலையிலுள்ள இயேசுவின் சீடர்களின் மூலம் இயேசுவிடம் நம்பிக்கை வைப்பதென்பது யூதர்களுக்கு அவ்வளவு எளிய காரியமாக இல்லை என்பது மிகவும் தெளிவாகத் தெரிகின்றது. மேலும் சீடர்கள் தங்களது மார்க்கத்தை புறஜாதியாரிடத்தில் பரப்புவதற்கும் தடை செய்யப்பட்டிருந்தனர். ஏனெனில், முதலாவதாக புறஜாதியார் மோசேயின் நியாயப் பிரமாணத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். இரண்டாவதாக புறஜாதியாருக்குப் போதிப்பதை இயேசுவே தடை செய்திருந்தார். இத்தகைய நம்பிக்கையற்ற சூழ்நிலையில்தான் சவுல் என்ற பெயருடைய ஒருவன் தோன்றினான். இவனே பிற்காலத்தில் பவுல் என்ற பெயரில் பிரபலமானான். ஆனால் உண்மையில் அவன் அப்போஸ்தலர்களில் ஒருவனல்லன். அவன் தனது வாதம் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு வாய்ப்பில்லை என்பதை அறிந்தவனாய் தான் கண்ட ஒரு தரிசனத்தைக் காரணங்காட்டி தன்னையும் ஓர் அப்போஸ்தலன் என்று உரிமை பாராட்டி அறிக்கையிட்டான்.

### *பவுல் கண்ட தரிசனம்*

பவுல் கண்ட தரிசனம் அப்போஸ்தலர் நடபடிகள் 9, 22, 26 ஆம் அதிகாரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. தனித்தனியாக உள்ள அவற்றை நாம் கவனத்தோடு படிப்போமானால் அவற்றில் முரண்பாடுகள் நிறைந்திருப்பதைக் காணலாம்.

1. உதாரணமாக, 9 ஆம் அதிகாரத்தில் மூன்றிலிருந்து ஏழு வரையுள்ள வசனங்களில் நாம் இவ்வாறு படிக்கின்றோம்;

“...... சடிதியிலே வானத்திலிருந்து ஒரு ஒளி அவனைச் சுற்றிப் பிரகாசித்தது; அவன் தரையிலே விழுந்தான். அப்பொழுது: சவுலே.... என்று தன்னுடனே சொல்லுகிற ஒரு சத்தத்தைக் கேட்டான். ... ... ... அவனுடனே கூடப் பிரயாணம் பண்ணிய மனுஷர்கள் சத்தத்தைக் கேட்டும் ஒருவரையுங் காணாமல் பிரமித்து நின்றார்கள்.” ஆனால் 22 ஆம் அதிகாரம் ஒன்பதாம் வசனத்தில், “என்னுடனேகூட இருந்தவர்கள் வெளிச்சத்தைக் கண்டு, பயமடைந்தார்கள்; என்னுடனே பேசினவருடைய சத்தத்தையோ அவர்கள் கேட்கவில்லை” என்று பவுலே கூறுகிறான்.

2. அதிகாரங்கள் 9, 22 ஆகியவற்றில் வானத்திலிருந்து தோன்றிய ஒரு பேரொளி தம்மைச் சுற்றி மட்டுமே பிரகாசித்ததாக அவன் கூறுகிறான். ஆனால் 26 ஆம் அதிகாரத்தில் தம்மையும் தம்முடன் பிரயாணம் செய்தவர்களையும் சுற்றி ஒரு ஒளி பிரகாசித்ததாக அவன் கூறுகிறான்.

3. அதிகாரம் 9-ல், அவன் மட்டும் பூமியில் விழுந்ததாகவும், மற்றவர்கள் பிரமித்து நின்றதாகவும் நாம் படிக்கிறோம். ஆனால் 26 ஆம் அதிகாரம் 14 ஆம் வசனத்தில் அவனும் அவனைச் சேர்ந்த யாவரும் பூமியில் விழுந்து விட்டதாக அவன் குறிப்பிட்டுள்ளான்.

4. அதிகாரம் 22ல், தான் என்ன செய்யவேண்டுமென்று கேட்டபொழுது இயேசு, “நீ எழுந்து, தமஸ்குவுக்குப் போ; நீ செய்யும்படி நியமிக்கப்பட்டதெல்லாம் அங்கே உனக்குச் சொல்லப்படும் என்று பதிலுரைத்ததாக அவன் கூறுகிறான். அவன் தமஸ்குவுக்குப் போய் சேர்ந்த போது அனனியா என்ற ஒருவன் வந்து, அவன் செய்யவேண்டியவற்றை அவனிடம் கூறினான். ஆனால் அதிகாரம் 26-ல் அவன் இதைப்பற்றி எதுவுமே கூறவில்லை. முன் கூறியதற்கு நேர் முரணாக, தான் செய்து முடிக்கவேண்டிய அத்தனை வேலைகளைப் பற்றியும் இயேசுவே தன்னிடம் கூறியதாகக் கூறுகிறான்.

அவன் தன்னை ஓர் அப்போஸ்தலன் என்று வாதிப்பதற்கு ஆதாரமாகக் கொண்ட தரிசனத்தில் இத்தனை முரண்பாடுகள்





இருப்பதால், நாம் அதன் நம்பகத்தன்மையைக் குறித்து சந்தேகிக்க வேண்டியதிருக்கிறது. அவன் ஒரு தரிசனத்தைக் காணவே செய்தான் என்று நாம் ஒப்புக்கொண்டாலும், ஒரு சாதாரண தரிசனம் மட்டும் ‘அவன் ஓர் அப்போஸ்தலன் ஆவான்’ என்ற வாதத்தை நிலை நிறுத்துவதற்குப் பலமான ஆதாரமாகாது. எவ்வாறாயினும், தமஸ்குவில் அவன் கிறிஸ்து மதத்தை தழுவி, உடனடியாக யூதஜெபக் கூடங்களில் கிறிஸ்து தேவனுடைய குமாரன் எனப் போதிக்க ஆரம்பித்து, இவரே கிறிஸ்து என்று திருஷ்டாந்தப்படுத்தி, தமஸ்குவில் குடியிருக்கிற யூதர்களைக் கலங்கப்பண்ணினான். ஆகவே யூதர்கள் அவனைக் கொலை செய்யும்படி ஆலோசனை பண்ணினார்கள்.[1]

இதற்கு முன்பு, யூதர்களால் ஸ்தேவான் கல்லெறிந்து கொல்லப் பட்டபோது, அவனைச் சாகடிக்கச் சம்மதித்தவனாக அவனும் அருகிலேயே நின்று கொண்டிருந்தான்.[2] எருசலேம் திருச்சபைக்கு ஒரு பெரும் துன்பம் ஏற்பட்டது. அப்போஸ்தலர் -களைத் தவிர அவர்கள் எல்லாரும் வெளி தேசங்களில் சிதறப்பட்டுப் போயினர்.[3]

### *5. பவுல் புறஜாதியாரிடம் செல்லுதல்*

யூதர்களால் இவ்வாறு துன்புறுத்தப்பட்ட அவன் இயேசு வாதித்தவற்றை அவர்கள் விடாப்பிடியாக ஏற்றுக்கொள்ள மறுப்பதை உணர்ந்தான். கிறிஸ்தவ மதத்தினுடைய மந்தமான நிச்சயமற்ற வளர்ச்சியில் திருப்தியடையாதவனாய்த் தன்னுடைய நிலையை நன்றாக ஆராயும் பொருட்டு தமஸ்குவிற்குத் தெற்கில் அரபிதேசம் என்று அழைக்கப்படும் ஒதுங்கிய பகுதிக்கு அவன் பின்வாங்கிச் சென்றான்.[4]

இயேசுவுக்குக்கூட உதித்திராத ஒரு யோசனையை அவனது சிந்தனை அவனுக்குக் காட்டிக் கொடுத்தது. அது என்னவென்றால், புறஜாதியாருக்கு கிறிஸ்துவின் போதனைகள் போதிக்கப்பட வேண்டும் என்பதேயாகும். அவனது மதமாற்றத்திற்கு மூன்று ஆண்டுகளுக்குப் பின்னால், பேதுருவுடன் நேரடியான தொடர்பு

கொள்ளும் பொருட்டு அவன் முதன்முறையாக எருசலேமுக்கு வந்தான்.[5]

சீடர்களின் கூட்டத்தோடு சேர்ந்துகொள்ள அவன் முயன்றான். ஆனால் முதலில் அவர்கள் அவனை ஏற்றுக் கொள்ளவில்லை. பர்னபாசு மூலமாகச் சீடர்களைச் சந்தித்து, தான் கண்ட தரிசனத்தை அவர்களிடம் கூறி, இயேசுவின் பேரால் தான் எருசலேமில் தைரியமாகப் போதித்ததையும் எடுத்துச் சொல்லி தனது நேர்மையை அவர்களிடத்தில் உறுதிப்படுத்தினான்.

கலாத்தியருக்கு அவன் எழுதிய நிருபத்தில் கூறப்பட்டுள்ளபடி, பேதுருவுடன் பதினைந்து தினங்கள் மட்டுமே அவன் தங்கியிருந்தான். அப்போது யாக்கோப்பைத் தவிர வேறு எந்த ஒரு சீஷரையும் அவன் காணவில்லை.[6]

ஸ்தேவான் மரணத்தின் நிமித்தமாய் எழும்பிய உபத்திரவத்தின் விளைவாக வெளிதேசங்களில் சிதறிப் போயிருந்தவர்களோ, இக்காலம் வரையிலும் சுவிசேஷ வசனத்தை யூதர்களுக்கேயன்றி மற்ற ஒருவருக்கும் அறிவியாமல் பெனிக்கே நாடு, சீப்புரு தீவு, அந்தியோகியா பட்டணம் வரைக்கும் சுற்றித் திரிந்தார்கள்.[7]

இதற்குள் யூதர்கள் மதம் மாறுவார்கள் என்ற நம்பிக்கையை பவுல் இழந்துவிட்டான். ஆகவே வெளிப்படையாகவே புற ஜாதியாருக்குப் போதிப்பதென அவன் முடிவு செய்தான். பவுல் அவ்வாறு முடிவு செய்தபோதிலும், அது இயேசுவின் போதனைக்கு முற்றிலும் எதிரானதாகும். இயேசு தமது சீடர்களை நோக்கி, "நீங்கள் புறஜாதியார் நாடுகளுக்குப் போகாமலும், சமாரியர் பட்டணங்களில் பிரவேசியாமலும், காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்குப் போங்கள்"[8] என்று கூறி புறஜாரியாரிடத்திற்குச் செல்வதைக் கடுமையாகத் தடை செய்திருந்தார்.

மேலும் அவர், "காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு அனுப்பப்பட்டேனேயன்றி, மற்றப்படியல்ல"





என்றும், "பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து, நாய்குட்டிகளுக்குப் போடுகிறது நல்லதல்ல" என்றும் கூறியிருந்தார்.[9] ✱

புற ஜாதியாருக்கு அவன் போதிப்பதைக் குறித்து இயேசுவின் சீடர்கள் அவனது மனதை மாற்ற முயன்ற வேளையில், தான் எருசலேமில் இருந்தபோது ஒரு தரிசனத்தின் மூலமாக இயேசுவே இவ்விதம் செய்யக் கட்டளையிட்டதாக அவன் வாதிட்டான்.

"அவர் என்னை நோக்கி, நீ என்னைக் குறித்துச் சொல்லும் சாட்சியை இவர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்; ஆதலால் நீ தாமதம் பண்ணாமல் சீக்கிரமாய் எருசலேமை விட்டுப்

---

*★9 இயேசு இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு மட்டுமே அனுப்பப்பட்டார் என்பதை சுவிசேஷத்திலுள்ள பிற பகுதிகளும் தெளிவாகக் கூறுகின்றன. உதாரணமாக, தேவதூதன் மரியாளிடம் இயேசுவுக்கு "அவரது பிதாவாகிய தாவீதின் சிங்காசனத்தை கர்த்தர் கொடுப்பார்" (லூக்கா 1:32) என்றும், "அவர் யாக்கோபின் குடும்பத்தாரை என்றென்றைக்கும் அரசாளுவார்." (லூக்கா 1:33) என்றும் கூறினான். மத்தேயு பெத்லகேமைக் குறித்து "இஸ்ரவேலை ஆளும் பிரபு உன்னிடத்திலிருந்து புறப்படுவார்" (மத்தேயு 2:6) என்று கூறுகிறார். மலைப்பிரசங்கம் இஸ்ரவேலர்களுக்காக மட்டுமே நிகழ்த்தப்பட்டது. பிற இனத்தவர்கள் யூதர்களுடனே பாலஸ்தீனத்தில் வாழ்ந்து வந்தபோதிலும் இயேசு அவர்களுக்கு ஒருபோதும் உபதேசிக்கவில்லை. தனது பன்னிரண்டு சீடர்களைக் குறித்து, "மனுஷகுமாரன் தம்முடைய மகிமையுள்ள சிங்காசனத்தின் மேல் வீற்றிருக்கும்போது, என்னைப் பின்பற்றின நீங்களும் இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும் நியாயந் தீர்க்கிறவர்களாகப் பன்னிரண்டு சிங்காசனத்தின்மேல் வீற்றிருப்பீர்கள்" என்று முன்னறிவிப்பு செய்கிறார் (மத்தேயு 19:28). பிலாத்துவின் அவையில் நடைபெற்ற விசாரணையும் இயேசுவின் இறைப்பணி யூதர்களுக்கு மட்டுமே உரியது என்பதை தெளிவாக்கியுள்ளது. பிலாத்து அவரை "யூதர்களின் ராஜா" என்று கருதினாரே தவிர (மத்தேயு 27:11) சகல ஜாதிகளின் ராஜாவாக கருதவில்லை. பேதுரு பிற இனத்தவர்களுக்கு போதிக்கவும், அவர்களுடன் உணவருந்தவும் ஆரம்பித்தபோது, விருத்தசேதனமுடைய பிறர் அவருடன் வாக்குவாதம் செய்தனர். அப்போது தனது நிலைக்கு சான்றாக இயேசு கிறிஸ்துவினுடைய ஒரு கூற்றையோ அல்லது அறிவுரையையோ அவரால் கூறமுடியவில்லை. மாறாக, தான் கண்ட ஒரு தரிசனத்தை மட்டுமே பேதுரு கூற முடிந்தது (அப்போஸ்தலர் 11:1-10). இதிலிருந்து, "நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி பிதா, குமாரன், பரிசுத்த ஆவியின் நாமத்திலே அவர்களுக்கு ஞானஸ்நானங் கொடுத்து...." (மத்தேயு 28:19) போன்ற பகுதிகள் பின்னர் சேர்க்கப்பட்டவையே என்று தெரிகிறது. மேலும் இம்மூவரின் நாமத்தில் சீடர்கள் எவருக்கும் ஞானஸ்நானங் கொடுத்ததில்லை.*

புறப்பட்டுப்போ... ... நீ போ, நான் உன்னைத் தூரமாய்ப் புறஜாதிகளிடத்திலே அனுப்புவேன் என்று சொன்னார் என்றான்."[10]

சீஷர்களிடமிருந்து வந்த எதிர்ப்பையும் மீறி, புறஜாதியாருக்கு தொடர்ந்து அவன் போதித்து வந்ததுடன், அவனது பிரச்சாரத்தில் வெற்றியும் கண்டான். கடுமையான அளவில் துன்பங்களுக்கு உள்ளாகியிருந்த சீஷர்கள், புறஜாதியாரின் மத்தியில் அவன் தொடர்ந்து பணியாற்ற வேண்டுமெனவும், தாங்கள் இஸ்ரவேலர்களுக்குப் போதிப்பது எனவும் அவனுடன் ஒப்பந்தங் கண்டனர்.[11]

## மோசேயின் பிரமாணம் ஒழிக்கப்பட்ட விதம்

புறஜாதியாருக்கு மத்தியில் வெற்றியை உறுதிப்படுத்த வேண்டுமெனில், இயேசுவால் கற்பிக்கப்பட்டு அவராலும் அவரது சீடர்களாலும் விசுவாசத்தோடு கடைபிடிக்கப்பட்ட போதனைகளைத் திருத்தியாக வேண்டும் என்பதை பவுல் உணர்ந்தான். மோசேயுடைய பிரமாணத்தின் சம்பிரதாயங்களும் சடங்குகளும் யூதர் அல்லாத மற்றவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது என்பதையும் அவன் கண்டுகொண்டான். ஆகவே அவனுக்கே உரித்தான தைரியத்தோடு அவன், மோசேயுடைய பிரமாணம் அதிலடங்கியுள்ள அத்தனை சம்பிரதாயங்களோடும் மதச்சடங்குகளோடும் ரத்து செய்யப்பட்டு விட்டதாக அறிவித்தான். அதன் மூலம் கிறிஸ்தவ மதத்திற்கு ஒரு புதிய பாதையைக் காட்டினான். அது அவனது தீவிர கற்பனை, ரோமானியரின் கொள்கை, கிரேக்கத் தத்துவம் ஆகியவை சேர்ந்த ஒரு கலவையாக அமைந்தது.

அவன் கூறுவதாவது:

1. " ... பாவத்தை அறிகிற அறிவு நியாயப் பிரமாணத்தினால் வருகிறபடியால், எந்த மனுஷனும் நியாயப் பிரமாணத்தின் கிரியைகளினாலே தேவனுக்கு முன்பாக நீதிமானாக்கப் படுவதில்லை. ... ... ஆதலால் மனுஷன் நியாயப் பிரமாணத்தின் கிரியைகளில்லாமல் விசுவாசத்தினாலேயே நீதிமானாக்கப் படுகிறான் என்று தீர்க்கிறோம்."[12]





2. "நீங்கள் நியாயப் பிரமாணத்திற்குக் கீழ்ப்பட்டிராமல் கிருபைக்குக் கீழ்ப்பட்டிருக்கிறபடியால், பாவம் உங்களை மேற்கொள்ள மாட்டாது."[13]
3. "நான் தேவனுடைய கிருபையை விருதவாக்குகிறதில்லை; நீதியானது நியாயப்பிரமாணத்தினாலே வருமானால், கிறிஸ்து மரித்தது வீணாயிருக்குமே."[14]
4. "... நியாயப் பிரமாணத்தின் கிரியைகளினாலல்ல. கிறிஸ்துவைப் பற்றும் விசவாசத்தினாலே நீதிமான்களாக்கப் படும்படிக்குக் கிறிஸ்து இயேசுவின் மேல் விசுவாசிகளானோம். நியாயப் பிரமாணத்தின் கிரியைகளினாலே எந்த மனுஷனும் நீதிமானாக்கப் படுவதில்லையே" [15]
5. "இதோ, நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக்கொண்டால் கிறிஸ்துவினால் உங்களுக்கு ஒரு பிரயோஜனமிராது என்று பவுலாகிய நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்." [16]

வாழ்நாள் முழுவதும் நியாயப் பிரமாணத்தின்படி நடந்து வந்த இயேசுவின் போதனைகளிலிருந்து இவை முற்றிலும் மாறுபட்டவை. யூதர்களால் இயேசு கிறிஸ்து கைதாக்கப்படுவதற்கு சற்று முன்னர்தான் பஸ்காவிற்கு ஆயத்தப்படுத்தி, சீஷர்களுடனே பந்தியமர்ந்து பஸ்காவைப் புசித்தார்.[17]

குஷ்டரோகத்திலிருந்து தாம் குணப்படுத்திய குஷ்டரோகி ஒருவனை நோக்கி, அவர், "ஆயினும் நீ போய், ஆசாரியனுக்கு உன்னைக் காண்பித்து, நீ சுத்தமானதினிமித்தம், மோசே கட்டளை யிட்டிருக்கிறவைகளை அவர்களுக்குச் சாட்சியாகச் செலுத்து என்று கண்டிப்பாய்ச் சொல்லி, உடனே அவனை அனுப்பி விட்டார்."[18]

மேலும் பலிபீடத்தின் முன் தங்களது காணிக்கைகளைச் செலுத்தும்படி அவர்களை ஏவினார்.[19] அவரது சீஷர்களும் நியாயப் பிரமாணத்தின்படியே நடந்து வந்தனர். எருசலேமுக்கு இயேசுவுடன் கூட வந்திருந்த பெண்கள் கந்த வர்க்கங்களையும் பரிமள தைலங்களையும் தயாரித்து கற்பனையின்படியே ஓய்வு நாளில் ஓய்ந்திருந்தார்கள்.[20]

ஆகவே, நியாயப் பிரமாணத்தின் கட்டளைகளை ஒழித்துக் கட்டுவதற்கோ அல்லது மாறுதல் செய்வதற்கோ பவுலுக்கு எவ்வித உரிமையோ அதிகாரமோ கிடையாது. அவன் மேசியாவோ, தீர்க்கதரிசியோ அல்லன். அவன் ஓர் அப்போஸ்தலனாகக்கூட இருந்த தில்லை. இயேசுவும்[21] அவரது எல்லா சீஷர்களும் விருத்தசேதனம் செய்தவர்களாயிருக்க "நீங்கள் விருத்தசேதனம் பண்ணிக்கொண்டால் கிறிஸ்துவினால் உங்களுக்கு ஒரு பிரயோஜனமுமிராது" என்று கூறுவதற்கு அவனுக்கு என்ன உரிமையுண்டு?

இயேசு வலியுறுத்திக் கூறுவதாவது: "நியாயப் பிரமாணத்தையானலும், தீர்க்கதரிசனங்களையானாலும் அழிக்கிறதற்கு வந்தேன் என்று எண்ணிக் கொள்ளாதேயுங்கள்; அழிக்கிறதற்கு அல்ல, நிறைவேற்றுகிறதற்கே வந்தேன்."[22] மேலும் "வேதத்தில் ஒரு எழுத்தின் ஒரு உறுப்பு அவமாய்ப்போவதைப் பார்க்கிலும், வானமும் பூமியும் ஒழிந்து போவது எளிதாயிருக்கும்"[23] என்றுமல்லவா இயேசு கூறியிருக்கிறார்.

நியாயப் பிரமாணத்தின் கிரியைகளினாலே எந்த மனிதனும் நீதிமானாக்கப்படுவதில்லை என்ற பவுலின் கூற்று முற்றிலும் தவறானது. இதோ ஆதாரங்கள்:

"அவர்கள் இருவரும் (சகரியாவும் அவனுடைய மனைவி எலிசபெத்தும்) கர்த்தரிட்ட சகல கற்பனைகளின்படியேயும் நியமங்களின்படியேயும் குற்றமற்றவர்களாய் நடந்து, தேவனுக்கு முன்பாக நீதியுள்ளவர்களாயிருந்தார்கள்."[24] அப்போஸ்தலர்களில் எவரும் பவுலுடைய நம்பிக்கையை கைக்கொண்டிருக்கவில்லை. உதாரணமாக இயேசுவின் சகோதரரான யாக்கோபு கூறுவதாவது: "என் சகோதரரே, ஒருவன் தனக்கு விசுவாசம் உண்டென்று சொல்லியும் கிரியைகளில்லாதவனானால் அவனுக்குப் பிரயோஜனமென்ன? அந்த விசுவாசம் அவனை இரட்சிக்குமா? ஒரு சகோதரனாவது சகோதரியாவது வஸ்திரமில்லாமலும் அநுதின ஆகாரமில்லாமலும் இருக்கும்போது, உங்களில் ஒருவன் அவர்களை நோக்கி: நீங்கள் சமாதானத்தோட போங்கள், குளிர்





காய்ந்து பசியாறுங்கள் என்று சொல்லியும், சரீரத்திற்கு வேண்டியவைகளை அவர்களுக்குக் கொடாவிட்டால் பிரயோஜன மென்ன? அப்படியே விசுவாசமும், கிரியைகளில்லாதிருந்தால் தன்னிலேதானே செத்ததாயிருக்கும்...... ஆதலால், மனுஷன் விசுவாசத்தினாலே மாத்திரமல்ல, கிரியைகளினாலேயும் நீதிமானாக்கப்படுகிறானென்று நீங்கள் காண்கிறீர்களே.... அப்படியே ஆவியில்லாத சரீரம் செத்ததாயிருக்கிறதுபோல, கிரியைகளில்லாத விசுவாசமும் செத்ததாயிருக்கிறது."[25]

நியாயப் பிரமாணத்திற்குப் புறம்பாக கிளப்பப்பட்டுள்ள பவுலின் போதனைகளை அப்போஸ்தலர்களும், மற்றவர்களும் அப்படியே மௌனமாக ஏற்றுக் கொள்ளவில்லை. நியாயப் பிரமாணம் முறிக்கப்பட்டதால் அவர்கள் பெரிதும் அதிர்ச்சி அடைந்து விட்டனர். அவர்களில் சிலர் யூதேயாவிலிருந்து பவுல் பிரச்சாரப் பணி செய்த இடத்துக்குச் சென்று, புதிதாக மதம் மாற்றப்பட்டோரிடம் நியாயப் பிரமாணத்திற்கு விசுவாசத்துடன் கீழ்ப்படிந்து நடப்பதும் மோசேயினுடைய முறைமையின்படியே விருத்தசேதனம் போன்ற நியமங்களை எவ்விதத் தயக்கமும் இன்றிப் பின்பற்றுவதும் தவிர வேறு எவ்வழியிலும் இரட்சிப்படைய முடியாது என்று எடுத்துக் கூறினார்கள்.[26] இதைத் தொடர்ந்து அவர்களுக்கும் பவுலுக்கும் இடையே பெரும் சச்சரவும், தர்க்கமும் உண்டாகியது. தன் கட்சியைச் சேர்ந்த சிலருடன் அவன் எருசலேம் செல்ல இதுவே காரணமாக இருந்தது. அங்குதான் அப்போஸ்தலர்களும், மூப்பர்களும், சீடர்களும் பங்கெடுத்துக் கொண்டு, மேற்கண்ட விஷயத்தைக் குறித்து ஆலோசிப்பதற்காக ஒரு கூட்டம் கூட்டப்பட்டது.

மிகக் கடுமையான பேச்சுவார்த்தைகள் நடந்தன. இக்காலத்திற்குள், பவுலுடைய பிரச்சாரப்பணி ஒரு குறிப்பிட்ட அளவுக்குத் திட்டவட்டமாக முன்னேறியிருந்தது. அப்போஸ்தலர் -களால் அதனை முறியடித்து நிறுத்துவது என்பது ஏறக்குறைய முடியாத காரியமாகி விட்டது. மற்றொரு புறத்தில் யூதர்களுக்குப் போதித்து வந்தவர்களால் எவ்வித முன்னேற்றமும் காண

இயலவில்லை. மேலும் பழைய யூத மதத்தை எதிர்த்து ஏதேனும் வெற்றிகிட்டுமென்ற நம்பிக்கையையும் அவர்கள் படிப்படியாக இழந்து வந்தனர். இந்த இரு காரணங்களைச் சாதகமாக்கிக் கொண்டு, பேதுரு கிளம்பி பவுலுடைய கொள்கைகளை உயர்த்திப் பேசினார். இறுதியில் யாக்கோபு ஒரு உரையாற்றி இவ்வாறு முடித்தார்: "ஆதலால் புற ஜாதிகளில் தேவனிடத்தில் திரும்புகிறவர்களைக் கலங்கப் பண்ணலாகாது என்றும்... நான் தீர்மானிக்கிறேன்."★

முடிவில் கீழ்க்கண்டவாறு அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதப்பட்டது:

"அப்போஸ்தலரும், மூப்பரும், சகோதரருமாகிய நாங்கள் அந்தியோகியாவிலும், சீரியாவிலும், சிலிசியாவிலும் இருக்கும் புறஜாதியராகிய சகோதரருக்கு வாழ்த்துதல் சொல்லி எழுதிய நிரூபம் என்னவென்றால், எங்களால் கட்டளை பெறாத சிலர் எங்களிடத்தில் இருந்து புறப்பட்டு, நீங்கள் விருத்தசேதனம் அடையவேண்டுமென்றும் சொல்லி, இப்படிப்பட்ட வார்த்தைகளால் உங்களைக் கலக்கி உங்கள் ஆத்துமாக்களைப் புரட்டினார்கள் என்று நாங்கள் கேள்விப்பட்ட படியினாலே... எவையெனில் விக்கிரகங்களுக்குப் படைத்தவை களுக்கும், இரத்தத்திற்கும் நெருக்குண்டு செத்ததிற்கும் வேசித்தனத்திற்கும், நீங்கள் விலகியிருக்க வேண்டும் என்பதே. அவசியமான இவைகளையெல்லாமல் பாரமான வேறொன்றையும் உங்கள்மேல் சுமத்தாமலிருப்பது பரிசுத்த ஆவிக்கும், எங்களுக்கும் நலமாகக் கண்டது."[27]

★ *அப். நடபடிகள் 15 : 19,20*





## *இயேசு மோசேயுடைய நியாயப் பிரமாணத்தைப் பின்பற்றியவரே*

'புற ஜாதியாருக்கு மட்டுமே பவுல் போதிக்க வேண்டும். ஆனால் நியாயப் பிரமாணத்தின் விதிமுறைகளை அவர்கள் நிறைவேற்ற வேண்டுமென்பதில்லை. யூதர்களோ நியாயப் பிரமாணத்தை மிக நுட்பமாகக் கைக்கொண்டு நடக்க வேண்டும்' என்ற ஒப்பந்தத்தின் பேரில் தமது முயற்சிகள் பெருவெற்றியடைவதை பவுல் கண்டான். எனவே பவுல் தன் நடவடிக்கைகளுக்கு இடப்பட்ட கட்டுப்பாட்டை மீண்டும் ஒருமுறை மீறி, நியாயப்பிரமாணம் முழுவதும் புறஜாதியாருக்கு மாத்திரமல்லாமல், யூதர்களுக்கும் விலக்கப்பட்டு விட்டது என்று போதித்தான். அதன் இடத்தை இயேசுவின் இரத்தத்தின் மீது கொண்ட விசுவாசம் நிரப்பிவிட்டது என்றும் கூறினான்.

அவன் கூறுவதாவது: "இவ்விதமாக, நாம் விசுவாசத்தினாலே நீதிமான்களாக்கப்படுவதற்கு நியாயப் பிரமாணம் நம்மைக் கிறிஸ்துவினிடத்தில் வழிநடத்துகிற உபாத்தியாய் இருந்தது. விசுவாசம் வந்த பின்பு நாம் உபாத்திக்குக் கீழானவர்களல்லவே."[28] "புது உடன்படிக்கை என்று அவர் சொல்லுகிறதினாலே முந்தினதைப் பழமையாக்கினார்; பழமையானதும் நாள்பட்டதுமாயிருக்கிறது உருவழிந்து போகக் காலம் சமீபத்திருக்கிறது."[29]

நீங்கள் உங்கள் மேசியாவை சபிக்கப்பட்ட மரணமடைய விட்டு விட்டீர்கள் என்று சொல்லிப் பரிகசித்த யூதர்களை நோக்கி, இயேசுவை வழியனுப்பி வைத்துவிட்டுத் திரும்பிய சீஷர்கள் அவர் மரித்தோரி லிருந்து எழுந்துவிட்டார் என்று பதிலுரைத்தனர். ஆனால் இயேசு உயிர்த்தெழுந்ததை நிரூபிப்பது அவர்களுக்குக் கஷ்டமாக இருந்தது. இயேசு அங்கு தங்கியிருந்த நாள் முழுவதும் பொதுமக்களுக்கு மத்தியில் பகிரங்கமாக வந்து தோன்றவில்லை; ஒளிந்தேயிருந்தார். அவர் வேறொரு நாட்டுக்கு குடிபெயர்ந்து சென்றபோது, அவர்கள் உவமான வார்த்தைகளில் அவர் பரமேறி

(வானத்திற்கு)ச் சென்று விட்டதாகக் கூறினர். இயேசு சபிக்கப்பட்ட மரணமடைந்து விட்டதாக எண்ணியிருந்த யூதர்களுக்கு, முந்திய பதிலைக் காட்டிலும் இது பெரிதும் நம்பமுடியாததாகவும், திருப்தியளிக்காததாகவும் இருந்தது.

நியாயப் பிரமாணத்தை ஒழித்துக்கட்டி, அறிக்கையிட்ட போதும், நியாயப் பிரமாணத்திற்கு இணங்கி நடப்பது மக்களுக்கு அவசியமல்ல என்று மக்களைத் தவிர்த்த போதும் யூதர்கள் கூறியது போலவே இயேசு சபிக்கப்பட்ட மரணமடைந்தார் என்று பவுல் தைரியமாகக் கூறினான். மரத்திலே தூக்கப்பட்ட எவனும் சபிக்கப்பட்டவன் என்று எழுதியிருக்கிறபடி கிறிஸ்து நமக்காகச் சாபமாகி, நியாயப் பிரமாணத்தின் சாபத்திற்கு நம்மை நீங்கலாக்கி மீட்டுக் கொண்டார்."[30] என்று அவன் சொன்னான்.

காணிக்கைகளும், மிருக பலிகளும் கொடுப்பதன் மூலம் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன என்ற நம்பிக்கை யூதர்களுக்கு மத்தியில் நன்கு வேரூன்றியிருந்தது. மீகா தீர்க்கதரிசி "என்னத்தைக் கொண்டு நான் கர்த்தருடைய சந்நிதியில் வந்து, உன்னதமான தேவனுக்கு முன்பாகப் பணிந்து கொள்வேன்? தகனபலிகளைக் கொண்டும், ஒரு வயது கன்றுக்குட்டிகளைக் கொண்டும் அவர் சந்நிதியில் வரவேண்டுமா? ஆயிரங்களான ஆட்டுக்கடாக்களின் பேரிலும், எண்ணெயாய் ஓடுகிற பதினாயிரங்களான ஆறுகளின் பேரிலும் கர்த்தர் பிரியமாயிருப்பாரோ? என் அக்கிரமத்தைப் போக்க என் முதற்பேறானவனையும், என் ஆத்துமாவின் பாவத்தைப் போக்க என் கர்ப்பக்கனியையும் கொடுக்க வேண்டுமோ?"[31] என்று கூறுகிறார்.

பவுல் இந்த நம்பிக்கையை நியாயப் பிரமாணத்தை ஒழிப்பதற்கான அடிப்படையாக எடுத்துக் கொண்டான். ஆகவே அவன், "**....** தம்முடைய சொந்த இரத்தத்தினாலும் ஒரே தரம் மகா பரிசுத்த ஸ்தலத்திலே பிரவேசித்து, நித்திய மீட்பை உண்டு பண்ணினார். அதெப்படியெனில், காளை வெள்ளாட்டுக்கடா இவற்றின் இரத்தமும், தீட்டுப்பட்டவர்கள் மேல் தெளிக்கப்பட்ட





கடாரியின் சாம்பலும், சரீர சுத்தியுண்டாகும்படி பரிசுத்தப்படுத்து மானால், நித்திய ஆவியினாலே தம்மைத்தாமே பழுதற்ற பலியாக தேவனுக்கு ஒப்புக்கொடுத்த கிறிஸ்துவினுடைய இரத்தம் ஜீவனுள்ள தேவனுக்கு ஊழியஞ் செய்வதற்கு உங்கள் மனச்சாட்சியைச் செத்த கிரியைகளறச் சுத்திகரிப்பது எவ்வளவு நிச்சயம்!"[32] என்று கூறியுள்ளான். மீண்டும் அவன், "(குமாரனாகிய) அவருக்குள், அவருடைய இரத்தத்தினாலே, பாவமன்னிப்பாகிய மீட்பு நமக்கு உண்டாகியிருக்கிறது"[33] என்றும் "கிறிஸ்துவானவர் வேத வாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து..."[34] என்றும் அவன் சொன்னான். மேலும் ரோமர் 5 : 10 வசனமும் காண்க.

புறஜாதியாரைப் பொறுத்தவரையில், தங்களது கடவுளர் சம்பந்தப்பட்டவரையில் இவ்விதமே நம்பி வந்தனர். இதனை நான் பின்வரும் அத்தியாயத்தில் காட்டப் போகிறேன். இயேசு கிறிஸ்து, "என்சுவிசேஷத்தின்படியே மரித்தோரிலிருந்தெழுப்பப்பட்டவ ரென்று நினைத்துக் கொள்"[35] என்று கூறிக்கொண்டு, பவுல் புறஜாதியினருக்குச் செய்த போதனைகளில் சிலுவை மரணத்தையும், அவர் உயிர்த்தெழுந்ததையும் அடிப்படையாக்கிக் கொண்டான்.

"கிறிஸ்து எழுந்திருக்கவில்லையென்றால், எங்கள் பிரசங்கமும் விருதா, உங்கள் விசுவாசமும் விருதா"[36] என்று பவுல் அறிவித்தான்.

பவுல் ஒரு ரோமனாக இருந்ததாலும்[37], சீரியா போன்ற நாடுகளில் தனது பிரயாணத்தின்போது பிற மக்களின் மனநிலையை அவன் அறிந்திருந்ததாலும், பிறமக்களிடத்தில் முன்பே நடைமுறையில் இருந்து வந்த எண்ணங்களை - அதாவது அவர்கள் எளிதில் கிரகித்து ஏற்றுக்கொள்ளக்கூடிய எண்ணங்களை அடிப்படையாகக் கொண்டே அவன் போதித்தான்.

பவுல் இயேசு கிறிஸ்துவைப் பார்த்ததில்லை என்பதும் இயேசு சிலுவையில் அறையப்பட்டபோதோ, அவர் அதிலிருந்து கீழே இறக்கப்பட்ட போதோ, கல்லறையிலிருந்து வெளியே வந்த போதோ, தமது சீடர்களை விட்டுப் பிரிந்து சென்றபோதோ அவன்

அங்கு இருந்திருக்கவில்லை என்பதும் புதிய ஏற்பாட்டிலிருந்து தெளிவாகிறது. அவன் மதம் மாறிய மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் எருசலேமுக்கு வந்து பதினைந்து தினங்கள் பேதுருவுடன் தங்கியிருந்தான். மீண்டும் பதினான்கு ஆண்டுகளுக்குப் பின்னரே, தமது போதனையின் உண்மையைப் பற்றி அப்போஸ்தலர்களைத் திருப்திப்படுத்த எருசலேமுக்கு அவன் வந்தான்.

பவுல் இயேசுவின் சிலுவை மரணம், உயிர்த்தெழுதல் ஆகிய கொள்கைகளுக்கு முதன்மையளித்துப் பரப்பியதற்கான காரணம்தான் என்ன? நியாயப் பிரமாணத்தை ஒழித்து பிற மக்களை மதம் மாற்றவும், அவர்களின் பாவங்களை அவர்களை விட்டுப் போக்கவும், நியாயப் பிரமாணத்தின் சடங்குகளிலிருந்து அவர்களுக்கு விலக்கமளிக்கவும் கருதியே அவன் இவ்வாறு செய்தான். அப்போஸ்தலர்களில் அவனை ஆதரித்துப் பின்பற்றி அவனது போதனை முறைகளைக் கைக் கொண்டவர்களில் பேதுருவும் ஒருவர். இவருடன்தான் பவுல் பதினைந்து தினங்கள் தங்கியிருந்தான். பேதுரு உறுதியான உள்ளம் உடையவரல்ல என்றும், அடிக்கடி மனம் மாறக்கூடியவர் என்றும், தாம் கொண்ட விசுவாசத்தில் நிலைத்து நிற்பவரல்லர் என்றும் சுவிசேஷங்களி லிருந்து நாம் தெரிந்து கொள்கிறோம். மத்தேயுவின் சுவிசேஷத்தில் அவர் இயேசுவை நோக்கி, ".... உமது நிமித்தம் எல்லாரும் இடறலடைந்தாலும், நான் ஒருக்காலும் இடறலடையேன்"[38] என்று சொன்னதாக நாம் படிக்கிறோம். ஆனால் சிறிது நேரம் கழித்ததும், அவர் மும்முறை இயேசுவை மறுதலித்ததுடன், இயேசுவைத் தமக்குத் தெரியாதென்று ஆணையிட்டும் கூறினார்.[39]

பேதுரு நம்பிக்கையில் உறுதியற்றவர் என்று பவுலே சாட்சியம் கூறுகிறான். "மேலும், பேதுரு அந்தியோகியாவுக்கு வந்தபோது, அவன் மேல் குற்றஞ் சுமந்ததினால், நான் முகமுமாய் அவனோடே எதிர்த்தேன். எப்படியெனில் யாக்கோபினிடத்தி லிருந்து சிலர் வருகிறதற்கு முன்னே, அவன் புறஜாதியினருடனே சாப்பிட்டான்; அவர்கள் வந்தபோதோ, விருத்தசேதமுள்ளவர் களுக்குப் பயந்து, விலகிப் பிரிந்தான். மற்ற யூதரும் அவனுடனே





கூட மாயம் பண்ணினார்கள்; அவர்களுடைய மாயத்தினாலே பர்னாபவும் இழுப்புண்டான். இப்படி அவர்கள் சுவிசேஷத்தின் சத்தியத்திற்கேற்றபடி சரியாய் நடவாததை நான் கண்டபோது, எல்லாருக்கும் முன்பாக நான் பேதுருவை நோக்கி சொன்னது என்னவென்றால் யூதனாயிருக்கிற நீர் யூதர் முறைமையாக நடவாமல், புறஜாதியார் முறைமையாக நடந்து கொண்டிருக்க, புறஜாதியாரை யூதர் முறைமையாக நடக்கும்படி நீர் எப்படிக் கட்டாயம் பண்ணலாம்?"[40] என்று அவன் கேட்கிறான்.

எனவே பேதுருவைப் போன்ற ஒருவர் - பவுலுடைய செல்வாக்கிற்கு உட்பட்டு - பவுலைப் போன்றே தாமும் ஒரு தரிசனம் கண்டதாகக் கூறிக்கொண்டு, இயேசுவுடைய இரத்தத்தில் தாம் நம்பிக்கை கொண்டிருப்பதாகக் காட்டி, தமது தலைவருடைய போதனைக்கு எதிராகப் போதித்தால் அது நம்பத்தகுந்தது அல்ல. "அவன் (பேதுரு) மிகுந்த பசியடைந்து சாப்பிட மனதாயிருந்தான்; அதற்கு அவர்கள் ஆயத்தம் பண்ணுகையில், அவன் ஞானதிருஷ்டி அடைந்து, வானம் திறந்திருக்கிறதாகவும், நாலு முனைகளும் கட்டப்பட்ட பெரிய துப்பட்டியைப்போல ஒருவிதமான கூடு தன்னிடத்தில் இறங்கித் தரையில் விடப்பட்டிருப்பதாகவும், அதிலே பூமியிலுள்ள சகலவிதமான நாலுகால் ஜீவன்களும், காட்டு மிருகங்களும், ஊரும் பிராணிகளும், ஆகாயத்துப் பறவைகளும் இருக்கிறதாகவும் கண்டான். அல்லாமலும்: பேதுருவே, எழுந்திரு. அடித்துப்புசி என்று அவனுக்குச் சொல்லும் ஒரு சத்தம் உண்டாயிற்று. அதற்குப் பேதுரு : அப்படியல்ல, ஆண்டவரே, தீட்டும் அசுத்தமாயிருக்கிற யாதென்றையும் நான் ஒருக்காலும் புசித்ததில்லை என்றான். அப்பொழுது: தேவன் சுத்தமாக்கினவைகளை நீ தீட்டாக எண்ணாதே என்ற இரண்டாந்தரமும் சத்தம் அவனுக்கு உண்டாயிற்று. மூன்றாந்தரமும் அப்படியே உண்டாயிற்று. பின்பு அந்தக்கூடு திரும்ப வானத்துக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது."[41]

தரிசனங்களைப்பற்றி இந்த மக்கள் சிறிதேனும் சிந்தித்திருந்தால் சாத்தானின் செய்கைகளால் தரிசனங்கள் தோன்றி இருக்கக்கூடும் என்பதையோ அல்லது தங்களது எண்ணங்களின்

விளைவாகவே அவை ஏற்பட்டிருக்கக்கூடும் என்பதையோ அவர்கள் அறிந்திருப்பார்கள். இறைவனின் வார்த்தைக்கு முரணான தரிசனம், இறைவனிடமிருந்து தோன்றியிருக்க முடியாது. இறைவன் மோசேக்கு "பன்றியும், புசிக்கத்தகாதது;... அது உங்களுக்கு அசுத்தமாயிருப்பதாக"[42] என்று அருளியிருக்கும் போது, எல்லா மிருகங்களும் சுத்தமானவைகளே என்று பேதுரு கேட்ட சப்தம் நிச்சயமாக சாத்தானின் குரலேயன்றி, இறைவனுடையதல்ல.

பவுலைப் பொருத்தவரையில், அவனே தன்னைப்பற்றி விவரித்திருப்பதைவிடத் தெளிவாக நம்மால் ஏதும் விவரிக்க முடியாது. "யூதரை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கு நியாயப் பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டவனைப் போலவுமானேன். நியாயப் பிரமாணமில்லதவர்களை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கு அவர்களுக்கு நியாயப் பிரமாணம் இல்லாதவனைப் போலவுமானேன்"[43] என்று அவனே கூறியுள்ளான்.

தன் மனதில் ஒளித்து வைத்திருந்த ஒரு விஷயத்தைக் கீழ்க்கண்டவாறு அவன் வெளிப்படுத்தி விட்டான். "அன்றியும், என் பொய்யினாலே தேவனுடைய சத்தியம் அவருக்கு மகிமையுண்டாக விளங்கினதுண்டானால், இனி நான் பாவியென்று தீர்க்கப்படுவானேன்?"[44]

பவுலுடைய இந்தக் கொள்கைதான், அவனே இயேசுவின் போதனைகளை மாற்றியமைக்கும்படிச் செய்து, வேறு வழியின்றித் தான் செய்தவற்றுக்காக அவனை வாதிடச் செய்தது. அவன் ஓர் அப்போஸ்தலனாக இல்லாதிருந்தும், இயேசுவுடன் வாழ்ந்திருந்த அப்போஸ்தலர்களுள் ஒருவனாகவே தன்னை அவன் அறிவித்தான். நான் மேலே குறிப்பிட்டதுபோல, இயேசு உயிர்த்தெழுந்த பின்னர், பகிரங்கமாக மக்கள் மத்தியில் தோன்றாமல் சீடர்களுக்கு மட்டுமே காட்சி தந்தார் என்று பேதுரு மிகவும் தெளிவாக அறிவித்துள்ளார். சுவிசேஷகர்களுடைய நான்கு சுவிசேஷங்களும் அதனையே உறுதிப்படுத்துகின்றன.





ஆனால் பவுலோ தான் ஓர் அப்போஸ்தலன் என்பதை உறுதிப்படுத்துவதற்காக கேபாவுக்கும், பின்னர் பன்னிருவருக்கும் (ஆனால் அப்போது பதினோரு பேர்தான் இருந்தனர்), அதன் பின்பு ஐந்நூறு பேருக்கு அதிகமான சகோதரருக்கும், யாகோப்புக்கும் அதன் பின்பு அப்போஸ்தலரெல்லாருக்கும் இயேசு தரிசனமானார். எல்லாருக்கும் பின்பு எனக்கும் தரிசனமானார்[45] என்று கூறி சுவிசேஷத்தை எழுதியோர் அனைவரையும் மறுத்துரைக்கின்றான்.

பிற மக்களுக்காக பவுலும், பேதுருவும் இவர்களைப் பின்பற்றிய மற்றவர்களும் சேர்ந்து இயேசுவால் கற்பிக்கப்பட்ட போதனைகளை மாற்றிவிட்டார்கள். அவர் சிலுவையில் இறந்தார் என்றும், பின்னர் உயிர்த்தெழுந்தார் என்றும் அவர்கள் நம்பினர். அவர்களது பாவங்களை அவர்களை விட்டுப் போக்குவதற்காக அவர் 'சபிக்கப்பட்டவரானார்' என்றும் நம்பினார்கள். இரட்சிப்பை பெறுவதற்கு ஒரு மனிதன் இயேசுவினுடைய இரத்தத்தில் நம்பிக்கை வைத்தால் போதுமானது என்று அவர்கள் மக்களுக்குப் போதித்தனர். படிப்படியாக இந்த புதிய மதம் - இதனைப் 'பவுல் மதம்' என்றுதான் அழைக்க வேண்டும் - மேன்மேலும் வளர்ச்சி பெற்றது. இறுதியில் இன்று கிறிஸ்தவமதம் என்றழைக்கப்படுவதைத் தோற்றுவித்தவர் உண்மையில் என்ன போதித்தாரோ அந்தத் தத்துவங்களில் மிச்சம் மீதியிருந்தவற்றையும் அது துடைத்தெடுத்து விட்டது.

## *குறிப்புகள்*

1. *அப். நடபடிகள் 9 : 23*
2. *அப். நடபடிகள் 22 : 20*
3. *அப். நடபடிகள் 8 : 1*
4. *கலாத்தியர் 1 : 17*
5. *கலாத்தியர் 1 : 18*
6. *கலாத்தியர் 1 : 19*
7. *அப். நடபடிகள் 11 : 19*
8. *மத்தேயு 10 : 5,6*
9. *மத்தேயு 15 : 24-26*
10. *அப். நடபடிகள் 22 : 18-21*
11. *கலாத்தியர் 2 : 7-12*

12. ரோமர் 3 : 20,28
13. ரோமர் 6 : 14
14. கலாத்தியர் 2 : 21
15. கலாத்தியர் 2 : 15,16
16. கலாத்தியர் 5 : 2
17. மாற்கு 14 : 12-18
18. மாற்கு 1 : 44
19. மத்தேயு 5 : 24
20. லூக்கா 23 : 56
21. லூக்கா 2 : 21
22. மத்தேயு 5 : 17
23. லூக்கா 16 : 17
24. லூக்கா 1 : 6
25. யாக்கோபு 2 : 14-26
26. அப். நடபடிகள் 15 : 1
27. அப். நடபடிகள் 15 : 23-29
28. கலாத்தியர் 3 : 24,25
29. எபிரேயர் 8 : 13
30. கலாத்தியர் 3 : 13
31. மீகா 6 : 6,7
32. எபிரேயர் 9 : 12-14
33. கொலோசெயா 1 : 14
34. I கொரிந்தியர் 15 : 3
35. II திமோத்தேயு 2 : 8
36. I கொரிந்தியர் 15 : 14
37. அப். நபபடிகள் 22 : 25
38. மத்தேயு 26 : 33
39. மத்தேயு 26 : 72
40. கலாத்தியர் 2 : 11-14
41. அப். நடபடிகள் 10 : 10-16
42. உபாகமம் 14 : 8
43. I கொரிந்தியர் 9 : 20-21
44. ரோமர் 3 : 7
45. I கொரிந்தியர் 15 : 6-9





# அத்தியாயம் - 9

## புறசமயமும் பவுலும்

நான் முந்தைய அத்தியாயத்தில் குறிப்பிட்டபடி, தமது சீடர்கள் இஸ்ரவேலர் அல்லாத பிற மக்களுக்குப் போதிப்பதை இயேசு தடை செய்திருந்தார். தம் வருகையின் நோக்கத்தைப் பற்றி அவர் இவ்வாறு கூறுகிறார்: "காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேலர் வீட்டாரிடத்திற்கு அனுப்பப்பட்டேனேயன்றி மற்றப்படியல்ல..."

மற்ற கோத்திரத்தாரை நாய்களுக்கு ஒப்பிட்டு அவர் இவ்வாறு கூறுகிறார்: "பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து, நாய்க்குட்டிகளுக்குப் போடுகிறது நல்லதல்ல..."[1]

தாம் பணிபுரிந்த காலம் முழுவதும், இயேசு இஸ்ரவேலர் -களுக்கு மட்டுமே போதித்தார். அதேபோன்றுதான் சீடர்களும் செய்தார்கள். இயேசு புறசமயத்தாருக்காகவும் அனுப்பப்பட்டவராக இருந்திருந்தால் அவர் அவர்களுக்கும் போதனை செய்திருப்பார். அவர்கள் பாலஸ்தீனத்தில் யூதர்களோடு கலந்து அருகருகே வாழ்ந்து வந்தனர். ஆயினும் அவர்களுக்கு அவர் போதிக்க வில்லை. மத்தேயு 28:19ல் உள்ள "சகல ஜாதிகளையும் சீடராக்கி" என்பது போன்ற சில வசனங்கள் மேலே கூறப்பட்ட இயேசுவின் சொற்களுக்கும் செயலுக்கும் எதிராக இருக்கின்றன. அவை இனந்தெரியாத எவராலோ சேர்க்கப் பட்டவையாக இருக்க வேண்டும். அல்லது அவ்வசனத்திலுள்ள மூலச்சொல் எல்லா மக்களும் என்று பொருள் தராமல் (சில குறிப்பிட்ட) கோத்திரத்தார் என்றே பொருள்தரும். (வேதாகமக் கலைக்களஞ்சியத்தைப் பார்க்கவும்). இந்த வசனம் இயேசுவின் இரண்டாவது வருகையோடு தொடர்புடையதாக இருந்தால், இந்தத் தீர்க்கதரிசனம் அஹ்மதிய்யா இயக்கத்தை நிறுவிய ஹஸ்ரத் அஹ்மது (அலை) அவர்களின் தோற்றத்தால் நிறைவேற்றப்பட்டு விட்டது. இதனைப்பற்றி, 'இஸ்லாம்' என்ற என்னுடைய நூலில் எழுதியிருக்கிறேன்.

இயேசுவின் கட்டளைகளுக்கும் அவரது சீடர்களின் செயல் முறைக்கும் முரணாக பிற இனத்தவருக்கு போதிக்கும் புதிய எண்ணத்தை உண்டாக்கியவர் பவுலே ஆவார். இயேசுவும் அவரோடு வாழ்ந்த அவரது சீடர்களும் இயேசு வருகையின் உண்மையான நோக்கத்தை அறிய இயலாமலிருக்கும்போது, இயேசுவைச் சந்திப்பதற்கும் அவரது பேச்சைக் கேட்பதற்கும் ஒருபோதும் வாய்ப்பில்லாதிருந்த பவுல், இயேசு எதற்காக அனுப்பப்பட்டாரோ அந்த உண்மையான நோக்கத்தைக் கண்டு கொண்டார் என்று கூறுவதை நம்மால் கொஞ்சங்கூட புரிந்து கொள்ள முடியவில்லை. இதைவிட நகைப்புக்குரிய விஷயம் வேறு ஏதுமிருக்கும் என்று நான் நினைக்கவில்லை.

“நீங்கள் புறஜாதியார் நாடுகளுக்குப் போகாமலும், சமாரியர் பட்டணங்களில் பிரவேசியாமலும், காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்குப் போங்கள்”[2] என்று இயேசு தமது சீடர்களுக்கு மிகத் தெளிவாகக் கட்டளையிட்டுள்ளார். ஆனால் யூதர்களிடமிருந்து கிளம்பும் எதிர்ப்பினால் பெரிதும் தொந்தரவுக்கு உள்ளான பவுலோ “நான் சுத்தமாயிருக்கிறேன்; இது முதல் புற ஜாதியாரிடத்திற்குப் போகிறேன்”[3] என்று சொல்லி விட்டார்.

போதனை செய்வதற்கென்று தம்மால் போடப்பட்ட வரையறைகளை மீறினால் என்ன விளையுமென்று இயேசு முன்னறிவித்திருந்தாரோ, அதுவே நடந்து விட்டது. இயேசு முன்னறிவித்திருந்ததாவது: “பரிசுத்தமானதை நாய்களுக்குக் கொடாதேயுங்கள்; உங்கள் முத்துக்களைப் பன்றிகள் முன் போடாதேயுங்கள்; போட்டால் தங்கள் கால்களால் அவைகளை மிதித்து, திரும்பிக்கொண்டு உங்களைப் பீறிப்போடும்.”[4]

பவுல் பிற இன மக்களுக்கு போதனை செய்யத் தொடங்குகையில் அவர்களின் நிலை, இயேசுவின் போதனைகளை மாற்றியமைக்கும்படி அவரைக் கட்டாயத்திற்குள்ளாக்கியது. அவர்கள் தங்கள் கடவுளரை எவ்வாறு நம்பியிருந்தனரோ அதே





முறையில் சிலுவையிலறையப்பட்ட இயேசுவைப் பற்றியும் அவர்களுக்குப் பவுல் அறிவித்தார். பிற இன மக்கள் நம்பிக்கை கொண்டிருந்த சில தெய்வங்களை உதாரணமாகக் கீழே தந்திருக்கிறேன்.

1) கிரேக்க நாட்டிலும், மேற்காசியாவிலும் கொண்டாடப்பட்ட ‘அடோனிஸ்’ திருவிழாக்களில், ஆண்டு தோறும் பெருத்த சப்தத்தோடு அந்தக் கடவுளின் மரணத்திற்காக மக்கள் - குறிப்பாகப் பெண்கள் - புலம்பி அழுதார்கள். பிரேதத்தைப் போன்று அலங்கரிக்கப்பட்ட அவனது உருவங்களைப் புதைப்பதற்காக எடுத்துச் சென்று கடலிலோ அல்லது நீரூற்றுகளிலோ எறிந்தார்கள். அதற்கு அடுத்த நாளில், சில இடங்களில் அவன் உயிர் பெற்றெழுந்ததைக் கொண்டாடினர். அலெக்சாண்டிரியாவிலோ, இறந்து போனவன் மீண்டும் உயிர்பெற்று வருவான் என்று நம்பிக்கையோடு பாட்டிசைத்தார்கள். பைபிலஸ் பகுதியிலுள்ள பெரிய ஃபினீசியன் அஸ்டார்டே புகலிடத்தில் வருடா வருடம் அடோனிஸ் மரித்துப் போனதற்காகத் துக்கம் அனுசரிக்கப்பட்டது... அடுத்த நாள் மீண்டும் உயிரோடு வந்து, அவனை வணங்குவோரின் முன்னிலையில் வானத்திற்கு ஏறிச் செல்லுவதாகவும் அவர்கள் நம்பினார்கள்.[5]

2) தூக்கில் தொங்கிய தேவன் : பண்டைக் காலத்தில், இளவேனிற் காலத்து சிபிலி திருவிழாவின்போது ‘அட்டிஸ்’ தேவனின் பெயரைச் சூட்டிக் கொண்டு, அவனுடைய பாகமேற்று நடித்த ஆசாரியன் வழக்கமாகத் தூக்கில் போடப்பட்டான். அல்லது புனிதமான மரத்தில் வைத்துக் கொல்லப்பட்டான். பிற்காலத்திலோ, ஆசாரியன் ஒரு மரத்தினடியில் நின்று கொண்டு தன்னுடைய உடம்பிலிருந்து சிறிது இரத்தத்தை வெளியே எடுத்து, தனக்குப்பதிலாக ஓர் உருவத்தை அடிமரத்தோடு சேர்த்துக் கட்டிவிடுவான். இந்த அளவுக்கு முந்தைய கொடிய அநாகரீகப் பழக்கம் குறைத்துக் கொள்ளப் பட்டது அப்சேலில் புனித தோட்டத்தில் உள்ள புனிதமான மரங்களிலே மனிதர்களும், மிருகங்களும் தொங்கவிடப்பட்டு, பலிகொடுக்கப் பட்டார்கள்.

ஓடினுக்கு அர்ப்பணிக்கப்பட்ட மனிதப் பலிகளும் கொல்லப் பட்டார்கள். அவர்களைத் தூக்கில் தொங்கவிட்டோ அல்லது ஈட்டியால் குத்தியும் தொங்க விட்டுமோ - அதாவது மனிதர்களை ஒரு மரத்திலோ அல்லது தூக்கு மரத்திலோ கட்டி, ஈட்டியால் காயப்படுத்தி வழக்கமாகக் கொன்றார்கள். எனவே, ஓடின், தூக்குமர தேவன் அல்லது தூக்கிலிடப்பட்டவர்களின் கடவுள் என்று அழைக்கப்பட்டதோடு, தூக்கு மரத்தின் அடியில் உட்கார்ந்து கொண்டிருப்பதே அவனது அறிகுறியாகவும் கொள்ளப்பட்டது. ஹாவமால் என்னும் தலைவிதி குறித்த ஒரு பாடலில் உண்மையிலேயே அவன் தன்னைத்தானே தனக்குத் தியாகம் செய்துவிட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தப் பாடலிலிருந்து அவன் மாயாஜால வித்தையைக் கற்றுக் கொண்டதன் மூலம் எவ்வாறு அந்த தெய்வீக சக்தியை பெற்றான் என்பதை நாம் அறிகிறோம். இதோ அப்பாடல்:

"காற்றையள்ளி வீசும் அம்மரத்தில் தொங்கியதை நான் அறிவேன்; அப்படியே ஒன்பது முழு இரவுகள் தொங்கினேன். ஈட்டியால் காயப்படுத்தப்பட்டவனாகவும், ஓடினுக்கு அர்ப்பணிக்கப்பட்டவனாகவும் நான் கிடந்தேன். அதாவது எனக்கு என்னையே அர்ப்பணித்துக் கொண்டேன்."

3) ஆர்தர் வெய்கல் என்பார் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்: "பழங்காலத்தில் கிறிஸ்தவ மதம் வேரூன்றி இருந்த இடங்களில் அந்தியோகியாவும் ஒன்று. ஆனால் அந்தப் பட்டணத்தில் ஒவ்வொரு ஆண்டும் தாமுஸ் அல்லது அடோனிஸ் தெய்வத்தின் மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் கொண்டாடினார்கள். அடோனிஸ் என்பதன் பொருள் 'தேவன்' என்பதுதான். பெத்லகேமில் இயேசு பிறந்த இடம் என்று பழங்கால கிறிஸ்தவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட இடம் ஏதென்றால், அது இந்தப் புறஜாதிக் கடவுளின் பழைய கோவிலைத் தவிர வேறில்லை. (உண்மையில் இயேசு பிறப்பு நிகழ்ச்சி எங்கு நடந்தது என்பதைக்கூட அவர்கள் அறிந்து கொள்ளவில்லை.) இயேசு கிறிஸ்துவோடு தாமுஸ் - அடோனிஸ் பெயர்கள் சேர்ந்து மக்கள்





மனதில் குழப்பமேற்பட்டு விட்டது என்ற உண்மையை அறிந்து தூய ஜெரோம் பெரிதும் பயந்துவிட்டாராம். இந்தக் கடவுள் கொடிய முறையில் மரணமடைந்ததாகவும், நரகத்திற்கோ பாதாள உலகிற்கோ இறங்கிவிட்டதாகவும், மீண்டும் உயிர்பெற்றெழுந்து பரலோகத்துக்கு ஏறிச் சென்றதாகவும் நம்பப்பட்டது. பல நாடுகளில் நடப்பது போல, அவருக்கு விழாக் கொண்டாடி அவரது மரணத்தை குறித்து அழுதார்கள். அவரது சடலத்தைப் போன்ற உருவம் ஒன்றைத் தயாரிப்பார்கள். அதைத் தண்ணீரால் கழுவி எண்ணெய் பூசிப் புதைத்து விட்டு, மறுநாள் அவர் உயிர்த்தெழுந்ததை ஞாபகத் திருநாளாக பெருமகிழ்ச்சியோடு கொண்டாடினார்கள். அநேகமாக, தேவன் உயிர்த்தெழுந்தான் என்று அதே வார்த்தைகளே உபயோகப்படுத்தப் பட்டன. அவரை வணங்குபவர்களின் முன்னிலையில் அவர் பரமேறிச் செல்லும் நிகழ்ச்சியை நடத்துவதே திருவிழாவின் கடைசிக் கட்டமாகும்.[7] அடானிஸ் மதத்திலிருந்தும் - உண்மையைச் சொல்லப் போனால் மற்ற புற சமயங்களிலிருந்தும் உண்மையிலேயே கடன் வாங்கப்பட்டதாகத் தெரியும் ஒரு சுவிசேஷ நிகழ்ச்சி என்னவென்றால், 'தேவன் நரகத்துக்கு இறங்குதல்' என்பதுதான்."[8]

4) தற்செயலாக விழுந்த அடியினால் கொல்லப்பட்ட வீரதேவன் ஹயாசிந்த் அல்லது ஸ்பார்ட்டன் தேவன் என்பவனை வணங்கும் மற்றொரு மதத்தின் செல்வாக்கும் கிறிஸ்தவ மதத்தைப் பாதித்திருக்கிறது. இலையுதிர் காலத்திலாவது, கோடை காலத்தின் முற்பகுதியிலாவது ஒவ்வொரு வருடமும் மூன்று தினங்கள் இவனுக்காகத் திருவிழா நடைபெறும். முதல் நாள் அவன் மரித்து விட்டதாக எல்லாரும் அழுவார்கள். இரண்டாம் நாளில் மகிழ்ச்சி ஆரவாரத்தோடு அவன் உயிர்த்தெழுந்த நிகழ்ச்சியைக் கொண்டாடுவார்கள். மூன்றாவது நாளின்போது, அவன் பரமேறிச் சென்றது கொண்டாடப்பட்டதாகத் தெரிகிறது. கல்லறையிலிருந்த சிலைகள் அவன் பரமேறிச் செல்வதை எடுத்துக் காட்டின. அவனோடும் அவனது கன்னிச் சகோதரியோடும், தேவதூதர்களோ அல்லது தேவ கன்னிகைகளோ செல்லுவார்கள்.[9]

5) இவை தவிர, 'அட்டிஸ்' வணக்கமும் வழக்கத்தில் இருந்தது. உன்னதத் தாய் என்ற சிபிலியின் மகனாகவும், அதே நேரத்தில் கன்னி நானாவின் மகனாகவும் இருந்த அட்டிஸ் ஒரு நல்ல மேய்ப்பன். கன்னி மரியாளின் கதையிலுள்ளது போல, மனிதனின் தொடர்பு இல்லாமல் அவனை கன்னி நானா கருவுற்றாளாம். இவன் தனது வாலிபப் பருவத்தில் தன்னுடைய உடலுறுப்புகளைத் தானே அறுத்துக்கொண்டு, தன்னுடைய புனித தேவதாரு மரத்தினடியில் இரத்தம் கொட்டிச் செத்தான். ரோம் நகரத்தில், இவனது மரணத்தைக் குறித்தும் ஒவ்வொரு வருடமும் மார்ச் 22 ஆம் நாளிலிருந்து 25 ஆம் நாள் வரை திருவிழா கொண்டாடப்படும்... ... இந்தத் திருவிழாவில் மார்ச் 22 ஆம் நாளில் ஒரு தேவதாரு மரம் வெட்டித் தள்ளப்பட்டு அதன் அடிமரத்தில் தேவனைப் போன்ற ஒரு உருவம் சேர்த்துக் கட்டப்படும். இவ்வாறு பைபிள் சொல்வழக்குப்படி அட்டிஸ் தேவன் குத்திக் கொல்லப்பட்டு, மரத்தில் தொங்கவிடப்பட்டான். பிறகு இந்த உருவம் ஒரு கல்லறையில் கொண்டு புதைக்கப்படும். மார்ச் 24 ஆம் நாள் இரத்த தினமாகும். அன்று பிரதான ஆசாரியன் தன்னையே அட்டிஸாக உருவகப்படுத்திக் கொண்டு, தன்னுடைய உடலிலிருந்து சிறிது இரத்தத்தை வெளியில் எடுப்பான். இப்படிச் செய்வதன் மூலம் தன்னையே பலிகொடுத்து விட்டதாக எண்ணிக் கொள்ளுவான். இவ்விஷயம் எபிரேயருக்கு எழுதப்பட்ட நிரூபத்திலுள்ள வார்த்தைகளை நமக்கு ஞாபகமூட்டுகிறது.

"கிறிஸ்துவானவர் வரப்போகிற நன்மைகளுக்குரிய பிரதான ஆசாரியராய் வெளிப்பட்டு... ... வெள்ளாட்டுக்கடா, இளங்காளை இவைகளுடைய இரத்தத்தினாலே அல்ல. தம்முடைய சொந்த இரத்தத்தினாலும்... ... நித்திய மீட்பை உண்டு பண்ணினார்."★

அன்று இரவு, ஆசாரியர்கள் கல்லறைக்குச் சென்று அதன் உட்புறம் ஒளிமயமாய் இருப்பதைக் கண்டார்கள். பின்னர் கல்லறை

★ *எபிரேயர் 9 : 11,12*





காலியாக இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அதாவது மூன்றாவது நாளில் கடவுள் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்து விட்டார். இதனை 25 ஆம் தேதியில் மாபெரும் உற்சாக ஆரவாரத்தோடு உயிர்த்தெழுதல் விழாவாகக் கொண்டாடினர். அப்போது அவர்கள் ஏதோ ஒரு வகை வைதீக உணவை உட்கொண்டு, புதியவர்கள் இரத்தத்தினால் ஞானஸ்னானம் பெற்றார்கள். இப்படி இரத்தத்தினால் ஞானஸ்னானம் பெற்றதால் அவர்களின் பாவங்கள் கழுவப்பட்டு அவர்கள் புதிய பிறவி எடுத்தார்கள்."[10]

6) "அடானிஸின் மரணத்தையும், அவன் உயிர்த் தெழுந்ததையும், அடோனிஸை வணங்கியவர்கள் கொள்கைகளாக வைத்திருந்தனர். ஒரு காட்டுப் பன்றியால் அடோனிஸ் கொல்லப்பட்டான். ஆனால் காட்டுப்பன்றி என்பது அவனுடைய மறு அவதாரமேயாகும். ஆகவே பலி வாங்கியவனும், பலியானவனும் இந்தக் குட்டிக் கடவுள்தான். இதே கொள்கைதான் எபிரேயருக்கு எழுதிய நிரூபத்தில் எடுத்துரைக்கப் பட்டிருக்கிறது. அந்த நிரூபத்தில் இயேசுவை பிரதான ஆசாரியாக வருணித்து, மக்களின் பாவங்களைத் துடைப்பதற்காகத் தம்மைத் தாமே பலியாக்கிக் கொண்டதாகக் கூறப்பட்டுள்ளது. இதேவிதமாக, மித்ரா ஒரு காளையைப் பலியிட்டான். ஆனால் அந்தக் காளையும் இவனும் ஒன்றுதான். ஒரு வெள்ளாடும், ஒரு காளையும் டயோனிசாசுக்கு பலியிடப்பட்டன. ஆனால் அவை இரண்டும் அந்தக் கடவுளுடைய அம்சங்களே. ஆர்டிமிசுக்கு ஒரு கரடி பலியாக்கப்பட்டது. ஆனால் ஆர்டிமிசே கரடியாகவும் இருந்தாள். இப்படியே எத்தனையோ சொல்லிக் கொண்டு போகலாம்... இவ்விதம் மக்களின் பாவத்திற்காக ஒரு கடவுள் தன்னைத்தானே பலியிட்டுக் கொள்வதாக ஒரு நம்பிக்கை எங்கும் பரவியிருந்தது. மக்களின் நன்மையைக் கருதி கடவுள்கள் மரித்ததை நினைவுபடுத்தும் வகையில் நேரிடையாகவோ மறைமுகமாகவோ மனிதர்களைப் பலியிடும் வழக்கம் மக்களிடையே ஒரு சாதாரண விஷயமாக கருதப்பட்டும் பேசப்பட்டும் வந்தது. திபேரியா ஸ்தானிகராக இருந்த காலம் வரையிலும், குழந்தைகள் சனி

கிரகத்துக்கு பலியாக்கப்பட்டார்கள் என்று டெர்டூலியன் கூறுகிறார். ஜூலியஸ் சீசரின் காலத்தில், செவ்வாய் கிரகத்துக்கு இரண்டு போர் வீரர்கள் பலியாக்கப்பட்டதைப் பற்றி டயான் காஸியஸ் கூறுகிறார். இயேசுவின் காலத்தில் இப்பேர்ப்பட்ட மனித உயிர்ப்பலியின் சக்தியை நம்புவது எவ்வளவு சாதாரணமாக இருந்தது என்பதைக்காட்ட இன்னும் பல உதாரணங்கள் கொடுக்கலாம்."[11]

"பாவத்தைத் தொலைப்பதற்காக, நினைவுக்கு அப்பாற்பட்ட காலத்திலிருந்து யூதர்கள் கொண்டிருந்த கொள்கைகள், இயேசுவின் காலத்தில் நன்கு நிலைபெற்றிருந்தன. பாவத்தை விட்டு விடுதலை பெறுவதற்காக ஒரு செம்மறியாட்டையோ, வெள்ளாட்டையோ வேறு ஏதேனும் ஒரு பிராணியையோ பலியிடுவது ஒரு சாதாரண வழக்கமாக இருந்தது. ஒரு கோத்திரத்தின் எல்லாப் பாவங்களையும் சுமந்து கொண்டிருக்கும் பலியாட்டை கொடிய வனவிலங்குகளுக்கு இரையாக்கும் பொருட்டு அது வனாந்தரத்திற்குள் விரட்டியடிக்கப் பட்டது. முந்தைய பழக்கத்திற்கு ஒரு மாற்றாகவே இப்படியும் செய்யப்பட்டது. எல்லா இடங்களிலும் பிற இன மக்களின் கடவுள்கள் மனிதர்களுக்காகத் துன்பப்பட்டு இரத்தங்கொட்டிச் செத்ததாகவே கருதப்படுகிறது. பாவங்களைவிட்டு மீட்சி பெறுவதற்காகத் துன்புறுத்தி வெட்டிக் கொல்லப்பட்ட பலிப்பிராணி களின் இரத்தத்தாலும் மனித இரத்தத்தாலும் அவர்களின் பீடங்கள் நாற்றமடித்தன."[12]

ஸர் ஜேம்ஸ் பிரேசர் கூறுகிறார்:

"ஒரு பக்திமானை அல்லது பிராணியை பலிப்பொருளாக உபயோகிப்பதை விசேஷமாகக் குறிப்பிட வேண்டும்... ... தீங்குகள் (பாவங்கள்) ஒரு கடவுளின்மீது இறக்கப்படுவதாக நம்பப்பட்டது. அந்தக் கடவுளே பின்னர் கொல்லப்படுவார்... ... ஒரு புறம், காலப்போக்கில் கடவுளுடைய தெய்வீக பலம் குறைந்து போகாமல் தடுப்பதற்காக மனிதக் கடவுளை அல்லது மிருகக் கடவுளை கொல்லுவது வழக்கமாக இருந்தது என்பதை நாம் அறிந்திருக்கிறோம். மற்றொரு புறத்தில், வருடத்திற்கு ஒரு முறை





தீங்குகளையும் பாவங்களையும் பொதுப்படையாக இதன் மூலம் அப்புறப்படுத்தி விடுவதும் வழக்கமாக இருந்தது என்பதையும் நாம் பார்க்கிறோம். இந்த இரண்டு வழக்கங்களையும் மக்கள் இணைத்துப் பார்க்க நேர்ந்தால், அவர்கள் சாகக்கூடிய கடவுளை ஒரு பலிப்பொருளாக ஆக்கி விடுவார்கள். உண்மையில் அவன் பாவங்களைச் சுமப்பதற்காக கொல்லப்படவில்லை. ஆனால் மூப்படைந்த வயது காரணமாக அவனது வாழ்வு அஸ்தமித்துப் போகாதபடிக் காப்பதற்காகவே அவன் கொல்லப்பட்டான். எவ்வகையிலும் அவன் கொல்லப்பட வேண்டியவனாக இருந்ததால், மக்கள் தங்கள் துயரச் சுமையையும் பாவங்களையும் அவன் மீது சுமத்துவதற்கு ஏற்றதொரு வாய்ப்பாக அதனைப் பிடித்துக் கொண்டு, அவ்வாறு சுமத்தப்பட்ட பாவச் சுமையை, கல்லறைக்கு அப்பாலுள்ள யாருமறியாத உலகிற்கு அவன் தன்னோடு சுமந்து செல்வான் என்று எண்ணினார்கள்."[13]

இந்தப் பிற சமய நம்பிக்கைகளை, பவுல் பிறரிடத்தில் வருணித்த இயேசு சிலுவையிலறையப்பட்ட கதையோடு ஒப்பிட்டுப் பார்த்தால், பிந்தியது முந்தியதைப் பார்த்து காப்பியடித்ததுதான் என்பதை நாம் கண்டு கொள்வோம். உண்மையில், இயேசுவின் சீடர்கள் இயேசுவின் சிலுவை மரணத்தையோ, அவர் உயிர்த்தெழுந்ததையோ வலியுறுத்திக் கூறவில்லை. பிற இன மக்களுக்கு போதித்து விட்டு, பவுல் அரேபியாவிலிருந்து திரும்பி வரும் வரையில் இந்த புதுமையான கொள்கையைப் பற்றி நாம் அதிகம் கேள்விப்பட வில்லை. கிறிஸ்தவ மதத்திற்காக முதன் முதலில் தன்னுயிரைத் தியாகம் செய்தவர் ஸ்தேவான் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். இவரது மரணம் பவுலுடைய மனதை வெகு ஆழமாகத் தாக்கி விட்டது. அப். நடபடிகள் 6, 7 அதிகாரங்களில் இப்பெரும் உயிர்த் தியாகத்தைப்பற்றிய விபரங்களை நாம் படிக்கிறோம். அவன், "ஜனங்களுக்குள்ளே பெரிய அற்புதங்களையும், அடையாளங்களையும் செய்தான்." யூதர்களோடு பெரிய வாக்குவாதத்தை நிகழ்த்தினான். அங்குள்ள பரிசுத்த ஸ்தலத்தில் நடைபெறும் வணக்க முறைகளை தாக்கிப்

பேசினான். மோசேக்கும் தேவனுக்கும் விரோதமாகவும் அவன் பேசிய அவதூறுகள் காரணமாக அவன் சிறைப்பிடிக்கப்பட்டான். அதன்பின்பு வேதாகம விஷயங்களைப் பற்றி மிகச்சிறந்த உயிருள்ளதோர் சொற்பொழிவு நிகழ்த்தினான். அவனது அந்த நீண்ட வாக்குவாதம் முழுவதிலும் இயேசு உயிர்த்தெழுந்ததைப்பற்றி ஒரு வார்த்தை கூட அவன் சொல்லவில்லை. கர்த்தர் உயிர்த்தெழுந்தார் என்பது அவனது நம்பிக்கையின் உயிர்நாடி என்றால், அவன் ஏன் அதைப்பற்றிக் குறிப்பிடவில்லை? அவன் தன்னுடைய சொற்பொழிவில் மற்றெல்லா விஷயங்களையும்விட உயிர்த்தெழு தலைப் பற்றி அதிகமாக வலியுறுத்திக் கூறியிருக்க வேண்டும்.ஆனால் அப்படி நடக்கவில்லை.

(தி ரெவியூ ஆஃப் ரெலிஜன்ஸ் பத்திரிகை - பாகம் 27, எண்:9, பக்கம் 24)

பவுல் மாத்திரமே, இயேசு சிலுவையில் மரித்த விஷயத்தை வலியுறுத்திக் கூறுகிறார். அவர் ஒருவரே உயிர்த்தெழுதலைப் பற்றிய ஆர்வங்கொண்டவராகவும் இருக்கிறார். அவரே கூறுவது போன்று, "கிறிஸ்து எழுந்திருக்கவில்லையென்றால் எங்கள் பிரசங்கமும் விருதா, உங்கள் விசுவாசமும் விருதா."[14]

"கிறிஸ்து நமக்காகச் சாபமாகி, நியாயப் பிரமாணத்தின் சாபத்திற்கு நம்மை நீங்கலாக்கி மீட்டுக் கொண்டார் என்று சொன்னவர் பவுலே.[15]

இயேசு கிறிஸ்துவின் சிலுவையைக் குறித்து மேன்மை பாராட்டியவரும் அவரே.[16]

ஆரம்பகால சீடர் கூட்டம் அவரது புதிய கண்டுபிடிப்பைப் புகழ்ந்து பேசாமல், தன்னால் இயன்றவரையிலும் அவரை எதிர்த்தது. ஆயினும் காலம் செல்லச்செல்ல அவரது எளிய மதம், யூதர்கள் எதிர்த்த போதிலும் புறஜாதி ரோம சாம்ராஜ்யத்தின் அரசு மதமாக ஆகி விட்டது. ஏனைய இன மக்களின் மதச்சடங்குகளும் நம்பிக்கைகளும் அப்படியே நடைமுறைப்படுத்தப்பட்டதால் அட்டிஸ் தேவனை வணங்கி வந்தோர் ஏசு தேவனை வணங்கத் தலைப்பட்டனர். சிலுவை சம்பவம் நடந்தேறி ஏறத்தாழ மூன்று





நூற்றாண்டுகள் கழிந்த பின்னர், 325 ஆம் ஆண்டில் நிசி சபையில் வைத்துதான், கிறிஸ்தவ திருச்சபையினரால் இயேசு முதன்முதலாகக் கடவுளாக அதிகார பூர்வமான முறையில் அங்கீகரிக்கப்பட்டார்."[17] இவ்விதம் பவுலால் புத்தம் புதிதாக ஆரம்பித்து வைக்கப்பட்ட ஒரு கொள்கை, மனிதப் பிறவியான இயேசுவை கடவுளாகக் கொள்ளும்படிச் செய்து விட்டது. ஆயினும் உண்மையில் அவர் இறைவன் ஒருவன் என்ற உண்மையை நிலைநிறுத்தவும், அவனைத் தவிர வேறு எரையும் வணங்கக்கூடாது என்பதைப் போதிப்பதற்குமே அனுப்பப்பட்டவராயிருந்தார்.

## *சிலுவையில் அறையப்படுவதையும், உயிர்த்தெழுவதையும் பற்றி இயேசு தீர்க்கதரிசனம் உரைத்திருந்தாரா?*

1927ல் நான் டமஸ்கஸில் இருந்தபோது, டமஸ்கஸ் கிறிஸ்தவ சங்கத்தின் பொறுப்பாளராக இருந்த சங்கைக்குரிய ஆல்பிரட் நெல்சன் அவர்களுக்கும் எனக்கும் எழுத்து மூலமாக ஒரு விவாதம் நடைபெற்றது. இயேசு சிலுவையில் மரித்தாரா? என்பதுதான் விவாதத்தின் பொருள். இந்த விவாதத்தின்போது அவர் என்னிடம் இந்தக் கேள்வியைக் கேட்டார். "இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்று நாம் நம்பினால், தாம் கொல்லப்பட்டு மூன்றாம் நாளில் உயிர்த்தெழுவதாக அவர் கூறிய தீர்க்கதரிசனம் பொய்யானதல்லவா?"

இந்தக் கேள்விக்குரிய எனது பதில் இதுதான் : இந்த வார்த்தைகள் இயேசுவால் சொல்லப்பட்ட அதே வார்த்தைகள் என்று நீங்கள் உறுதிப்படுத்திக் கூறமுடியாது. பவுல் கண்டுபிடித்த சிலுவை மரணம் என்ற தத்துவம் பெரும்பான்மைக் கிறிஸ்தவர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டிருந்த வேளையில்தான் இப்புத்தகங்கள் (சுவிசேஷங்கள்) எழுதப்பட்டன.

லூக்கா பெரும்பாலும் பவுலோடு கூடவே இருந்தார் என்பது நமக்குத் தெரியும். அவர் மேற்கொண்ட பிரயாணங்களின்போது

லூக்காவும் கூடவே சென்றிருக்கிறார்."[18] ரோமாபுரியிலும் லூக்கா அவருடன் இருந்தார்.[19] பாப்பியாஸ் எழுதிய ஒரு சிறு நிரூபத்தில் சொல்லப்பட்டுள்ளபடி மாற்கு, பேதுருவைப் பின்பற்றியவராகவும், அவரது கூற்றுக்குப் பொருள் விரித்துக் கூறுபவராகவும் இருந்தார்.[20]

இன்னும் சொல்லப்போனால், மற்ற இரு சுவிசேஷங் களையும் எழுதியது யார் என்பது பற்றிய சர்ச்சை இன்னும் நிலவுகிறது. ஆகவே பவுலின் கொள்கைளை ஆதரிக்கும் சில வசனங்களை இந்தப் புத்தகங்களில் நாம் கண்டு கொள்ளுவதில் ஒரு விநோதமும் இல்லை. இந்தத் தீர்க்கதரிசனத்தைச் சொல்லும் வார்த்தைகள் ஒவ்வொரு சுவிசேஷத்திலும் வித்தியாசப்படுகின்றன என்பதையும் நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். மனுஷர் கையில் அவர் ஒப்புக் கொடுக்கப்படுவாரென்றும், அவர்கள் அவரைக் கொலை செய்வார்கள் என்றும், ஆகிலும் மூன்றாம் நாளிலே உயிர்த்தெழுந்திருப்பார் என்றும் இயேசு கூறியபோது, அவர்கள் மிகுந்த துக்கமடைந்தார்கள்[21] என்று மத்தேயு கூறுகிறார். அவர் என்ன சொன்னார் என்பதைப் புரிந்து கொண்டு அதனால் அவர்கள் துக்கப்பட்டார்கள் என்று இந்த வாக்கியம் காட்டுகின்றது.

லூக்காவோ, மனுஷர் கைகளில் அவர் ஒப்புக்கொடுக்கப் படப்போகிறார் என்றும், "அவர்கள் அந்த வார்த்தையின் கருத்தை அறிந்து கொள்ளவில்லை. அது அவர்களுக்குத் தோன்றாமல் மறைபொருளாயிருந்தது. அந்த வார்த்தையைக் குறித்து அவரிடத்தில் விசாரிக்கவும் பயந்தார்கள்"[22] என்று கூறுகிறார். ஆனால் நான்காம் சுவிசேஷத்தி லிருந்து அவர் மரித்தோரிலிருந்து எழுந்திருக்க வேண்டும் என்ற எந்த ஒரு தீர்க்கதரிசனத்தைப் பற்றியும் அவர்கள் அறிந்திருந்தார்கள் என்பது விளங்குகிறது.[23]

மாற்கு இவ்வாறு கூறுகிறார்: "துக்கப்பட்டு அழுது கொண்டிருந்த சீடர்களை நோக்கி, அவர் உயிரோடிருப்பதாகவும், தனக்குக் காணப்பட்டார் என்றும் மகதலேனாமரியாள் சொன்ன போது, அவர்கள் அதை நம்பவில்லை. அதன் பின்பு அவர்களில் இரண்டு சீடர்களுக்கு தோன்றினார். அவர்கள் அதை





மற்றவர்களுக்குச் சொன்னபோதும் அவர்கள் நம்பவில்லை. அதன் பின்பு பதினொருவரும் போஜனபந்தி யிலிருக்கையில் அவர்களுக்கு அவர் தரிசனமாகி, உயிர்த்தெழுந்திருந்த தம்மைக் கண்டவர்களை அவர்கள் நம்பாமற் போனதினிமித்தம் அவர்களுடைய அவிசுவாசத்தைக் குறித்தும், இருதய கடினத்தைக் குறித்தும் அவர்களைக் கடிந்துகொண்டார்."[24] அவர் உயிரத்தெழுந்த செய்தியில் அவர்கள் அவிசுவாசம் கொண்டு துக்கித்து இருந்ததிலிருந்து இதைப்போல எந்தவிதமான தீர்க்கதரிசனத்தைப் பற்றியும் அவர்களுக்குத் தெரியாது என்பதைக் கண்டுகொள்ளுகிறோம்.

மூன்றாவதாக, "மூன்றாம் நாளிலே உயிர்த்தெழுந் திருப்பார்" என்ற தீர்க்கதரிசனத்தின் முதல் பகுதி சொற்பொருளின் படி அப்படியே நிறைறேவில்லை என்பதையும் நாம் கூறமுடியும். யோனா தீர்க்கதரிசி மீன் வயிற்றில் மூன்று பகலும் மூன்று இரவும் தங்கியதைப் போலல்லாமல், யோவான் 20:1, லூக்கா 24:1 ஆகியவற்றில் சொல்லப்பட்டபடி அவர் கல்லறையில் ஒரு பகலும், இரண்டு இரவுமே தங்கியிருந்தார். சிலுவையில் இயேசு மரித்துப் போனதாக தோற்றமளித்ததைத் தவிர, தீர்க்கதரிசனத்தின் இரண்டாம் பகுதிகூட அதன் சொற்பொருளின்படி நிறைவேறவில்லை. "அடிக்கப்பட்ட வண்ணமாயிருக்கிற ஒரு ஆட்டுக்குட்டியாக,"[25] யோவான் அவரைக் கண்டார் என்பதன் பொருள், அவரது மரணம் குறிப்பினால் உணர்த்தப்பட்டது அல்லது சிலுவையில் அவர் அனுபவிக்கப்போகும் கடும் துன்பமும் அதைத் தொடர்ந்து ஏற்படும் மயக்கநிலையும் உருவக முறையில் மரணமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது என்பதேயாகும்.

மற்றொரு வகையில் பார்த்தால் சிலுவை மரணத்திலிருந்து இறைவன் அவரைக் காப்பாற்றுவான் என்பதைக் காட்டக்கூடிய பல தீர்க்கதரிசனங்கள் இருக்கின்றன. அவற்றில் சிலவற்றை நான் முதலாம் அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளேன். அவர் உயிர் பிழைக்கமாட்டார் என்று ஒவ்வொருவரும் நம்பிக்கையிழந்துவிட்ட போது, இறைவன் அவரை மரணத்திலிருந்து காப்பாற்றி, அவர்

முன்னறிவித்ததை நிறைவேற்றி வைத்தான் என்பதை எவராலும் மறுக்க இயலாது. யோனா தீர்க்கதரிசி மீன் வயிற்றில் உயிரோடு தங்கியிருந்ததைப் போலவே, இயேசுவும் கல்லறையினுள் உயிரோடு தங்கியிருந்தார்.

## குறிப்புகள்

1. மத்தேயு 15 : 24-26
2. மத்தேயு 10 : 5
3. அப். நடபடிகள் 18 : 6
4. மத்தேயு 7 : 6
5. ஸர் ஜேம்ஸ் பிரேசர் எழுதிய அடோனிஸ், அட்டிஸ் ஓரிசிஸ் - இரண்டாம் பதிப்பு பக்கம் 183-184. மாக்மில்லன் அன் கோ லிமிடெட் இலண்டன் 1907.
6. அதே புத்தகம் பக்கம் 243, 244
7. வெய்கல் எழுதிய பேகனிசம் இன் அவர் கிறிஸ்டியானிட்டி - பக்கம் 110,111 ஹட்சின்சன் அன் கோ லிமிடெட், இலண்டன்.
8. அதே புத்தகம் பக்கம் 113
9. அதே புத்தகம் பக்கம் 155
10. அதே புத்தகம் பக்கம் 116 - 117
11. அதே புத்தகம் பக்கம் 154 - 155
12. அதே புத்தகம் பக்கம் 156 - 157
13. ஸர் ஜேம்ஸ் ஃபிரேசர் எழுதிய கோல்டன் போவ் பாகம் 6, பலியாடு பக்கம் 226, இலண்டன் 1913.
14. I கொரிந்தியர் 15 : 14
15. கலாத்தியர் 3 : 13
16. கலாத்தியர் 6 : 14
17. பேகனிசம் இன் அவர் கிறிஸ்டியானிட்டி - பக்கம் 168
18. எடுத்துக்காட்டாக அப். நடபடிகள் 16:12 , 28:13
19. II திமோத்தேயு 4 : 11
20. பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் - இரண்டாம் பதிப்பு - புத்தகம் 17, பக்கம் 729
21. மத்தேயு 17 : 23
22. லூக்கா 9 : 45, மாற்கு 9:32
23. யோவான் 20 : 9
24. மாற்கு 16 : 10-14
25. வெளி 5 : 6





# அத்தியாயம் - 10

# இரட்சிப்பு அல்லது பாவநிவர்த்தி

அடோனிஸ், அட்டிஸ், ஒடிசிஸ், மித்ரா ஆகியோரும் இன்னும் பலரும் வேதநியமத்திற்காகத் துன்பப்பட்டு, மரித்து உயிர்த்தெழுந்தார்கள் என்று புறசமயத்தார் தங்கள் கடவுள்களைப் பற்றி நம்பியிருந்தார்கள் என்பது முந்தைய அத்தியாத்திலிருந்து தெளிவாகப் புலனாகும். இக்கடவுள்கள் யாவரும் மனித குலத்தின் பாவத்திற்காக மரித்ததாகவே நம்பப்பட்டார்கள். பல்வேறு நாடுகளைச் சேர்ந்த ஆதிகால அரைகுறை நாகரீக உருவ வழிபாட்டுக்காரர்கள் - குறிப்பாக மேற்கு ஆப்பிரிக்கக் காரர்கள் - பலவிதமான வகைகளில் பலி செலுத்தி வந்தார்கள். இப்போது தடை செய்யப்பட்டுள்ள டஹோமி வருடாந்திர விழா நடவடிக்கைகளில் நூற்றுக்கணக்கான மனிதர்கள் ஒரு காலத்தில் பலியிடப்பட்டார்கள். இப்பிராந்தியத்தில் 1. பலியாடு (பலியாகும் நபர்) 2. தூதன் 3. பாவ நிவர்த்திப் பொருள் என மூன்று முக்கியமான வகையாகப் பாகுபடுத்தி மனிதர்களைப் பலியிடும் முறை வழக்கத்தில் இருந்தது. ஆயினும் ஒன்றுடன் ஒன்று கலந்து பலியிடுதலும் அடிக்கடி நடந்தது. பெரும்பாலும், பலியாகும் நபர் காவலில் வைக்கப்பட்டு அவனுக்கு நன்கு உணவு அளிக்கப்பட்டது. அவனது தலை சாம்பலால் மூடி மறைக்கப்பட்டிருக்க அவனை ஊர்வலமாகக் கூட்டி வந்தபோது மக்கள் அவர்களது பாவங்களை அவன்மீது சுமத்துவதற்காகத் தங்கள் கைகளை அவன்மீது வைத்தார்கள். பலிபீடத்திற்குச் செல்லும் வழியில் மூன்று அடைப்பு வேலிகள் இருந்தன. அவற்றில் இரண்டாவது வேலி முக்கிய பிரமுகர்களுக்கும் பண்டிதர்களுக்கு மட்டுமே உரியது. மூன்றாவது வேலி விழா நடத்தும் அதிகாரிக்கும், அவனது உதவியாளருக்கும் உரியது. பலியிடப்படுபவனின் இரத்தம் குட்டிக் கடவுள்களுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டது.[1]

பாவநிவர்த்திக்காக மிருகங்களைப் பலியிடுவது என்ற கொள்கை யூத மதத்தில் ஏற்கனவே உள்ளது. (பாபிலோனிய

புறஜாதிக்காரர்களிட மிருந்து இந்த வழக்கம் யூதர்களிடத்தில் வந்திருக்கலாம்.) ஆனால் யூதர்கள் மனிதப் பலியில் நம்பிக்கை வைக்க வில்லை. அதோடு தங்களுடைய மேசியா உலக மக்களின் பாவத்திற்காகச் சிலுவையில் அறையப்பட்டு பலியிடப்படுவார் என்ற நம்பிக்கையும் அவர்களிடத்தில் இல்லை.

தன்னுடைய மரணத்தின் விளைவாக, ஒருவனுடைய தனிப்பட்ட பாவமாயினும் சரி, பரம்பரைப் பாவமாயினும் சரி மன்னிக்கப்படும் என்றோ அல்லது இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே இணக்கம் ஏற்படுமென்றோ பொருள் தரக்கூடிய எதையும் இயேசு கிறிஸ்து தம்முடைய வாயினால் சொன்னதே கிடையாது. தன்னுடைய மரணம், பாவ நிவர்த்திப்பலியாகக் கருதப்படும் என்றும் அவர் சொன்னதில்லை. "மனுஷ குமாரனும்... ... மீட்கும் பொருளாகத் தம்முடைய ஜீவனைக் கொடுக்கவும் வந்தார்"[2] என்னும் வார்த்தைகள் நிச்சயமாக சுவிசேஷத்தை எழுதியவருடைய விரிவுரையே தவிர இயேசுவின் வார்த்தைகளல்ல. அவை இயேசுவால் பேசப்பட்ட வார்த்தைகளாகவே இருந்தாலும்கூட மற்றவர்களின் மகிழ்ச்சிக்காக அவர் எவ்வாறு உயிர் வாழ்ந்திருந்தாரோ அவ்வாறே அதே மகிழ்ச்சி நிலைத்திருக்க சீடர்களைத் துன்புறுத்தாமல் தன்னுயிரை மாய்ப்பதற்கு தயாராக இருந்தார் என்பதுதான் அவ்வார்த்தைகளின் பொருளாக இருந்திருக்கும்.

கடைசி இரவு விருந்தின் போது அவர் கூறிய வார்த்தைகள் அவரது மரணத்திலுள்ள தியாக சீலமான பாவநிவர்த்திக் குணத்தை எடுத்துக்காட்டுவதாகப் பொதுவாகக் கூறப்படுகின்றது. ஆனால் இந்த எடுத்துக்காட்டு தவறானதேயாகும். மாற்கு எழுதின சுவிசேஷத்தில் "இது அநேகருக்காகச் சிந்தப்படுகிற புது உடன்படிக்கைக்குரிய என்னுடைய இரத்தமாயிருக்கிறது" என்றும், தூய லூக்கா எழுதின சுவிசேஷத்தில், "இந்தப் பாத்திரம் உங்களுக்காகச் சிந்தப்படுகிற என்னுடைய இரத்தத்தினாலாகிய புதிய உடன்படிக்கையாயிருக்கிறது" என்றும் இயேசு கூறுகிறார்.





ஆனால் காலத்தால் பெரிதும் பிந்திய மத்தேயு எழுதிய சுவிசேஷத்தில் மட்டுமே, பாவமன்னிப்புண்டாகும்படி... என்ற வார்த்தைகள் அவற்றுடன் புதிதாகச் சேர்க்கப்பட்டுள்ளன. கார்லிசில் டீனாகிய ஹேஸ்டிங் ராஷ்டால் "அதிகப்படியான இந்த வார்த்தைகள் சுவிசேஷத்தை எழுதுபவருடைய விரிவுரைதான் என்று கருதுவதில் மிகப் பழமைப் பற்றுள்ள திறனாய்வாளன் ஒருவனுக்கு எவ்விதத் தயக்கமும் இராது"[3] என்கிறார். மற்ற வார்த்தைகளுக்குப் பொருள் அவரது நண்பர்களுக்காக உயிரைக் கொடுக்க ஆயத்தமானார் என்றும், அவரது கோரிக்கைக்காகச் சாகச் சித்தமாக இருந்தார் என்றுமே இருக்கலாம்.[4] இயேசு சிலுவையில் மரித்தார் என்ற யூதர்களின் கூற்றை பவுலும் அவருடன் உழைத்தவர்களும் அப்படியே ஏற்றுக்கொண்டு, இயேசுவின் சிலுவை மரணத்தை பாவநிவர்த்தியாகவும், உலகத்திலுள்ள பாவங்களுக்கெல்லாம் மீட்பாகவும் புறஜாதியாரிடத்தில் அறிவித்தனர். புறஜாதியார் ஏற்கனவே தங்களுடைய குட்டி கடவுள்களைப் பற்றி இவ்விதமே நம்பிக் கொண்டிருந்தனர்.

"அவருக்குள், அவருடைய, இரத்தத்தினாலே பாவமன்னிப்பாகிய மீட்பு நமக்கு உண்டாயிருக்கிறது[5] என்று பவுல் சொல்லுகிறார். மேலும் "அவர் சிலுவையில் சிந்தின இரத்தத்தினாலே சமாதானத்தை உண்டாக்கினார்"[6] என்றும், எபிரேயரில் அவருடைய இரத்தத்தை "நன்மையானவைகளைப் பேசுகிற இரத்தமாகிய தெளிக்கப்படும் இரத்தம்"[7] என்றும் அவர் சொல்லுகிறார். "நம்முடைய பாவங்களை நிவர்த்தி செய்கிற கிருபாதாரபலி அவரே; நம்முடைய பாவங்களை மாத்திரம் அல்ல, சர்வலோக பாவங்களையும் நிவர்த்தி செய்கிற பலியாயிருக்கிறார்"[8] என்று யோவான் கூறுகிறார். இந்த வசனத்திற்கு தெளிவுரை கூறும்போது பல ஆசிரியர்கள் தங்களுடைய உரை நூற்களில், "தேவனுடைய இருதயத்தில் பாவத்தைப் பற்றிய கோபம் இருந்தது. பாவத்திற்காக கிறிஸ்துவானவர் ஒரேயொரு முறை பலியானதன் மூலம் இறைவன் தனது எல்லாக் கோபத்தையும் கைவிட்டு விட்டதுடன் நியாயவானாகவும், இருக்க முடிந்தது" என்று எழுதியுள்ளார்கள்.

கிறிஸ்தவர்களுக்கு மத்தியில் சாதாரணமாக நிலவிவரும் நம்பிக்கை இதுதான்; தடுக்கப்பட்ட கனியை உண்டதால் ஆதாம் பாவம் செய்தார். அவர் (பாவத்தில்) வீழ்ந்ததால் அவரது வழித்தோன்றலாகிய மனிதகுலம் எல்லாம் பாவத்தில் விழுந்து அவரிடமிருந்து பாவத்தைப் பரம்பரை பரம்பரையாகப் பெற்றது. எனவே இறைவன் தனது அளவற்ற கருணையினால் தன்னுடைய ஒரு மகனை - குற்றமற்ற, பாவமற்ற, தீங்கறியாத கடவுளும் மனிதனுமாகிய தனது ஒரே மகனை - (இவ்வுலகிற்கு) அனுப்பி வைப்பதைத் தவிர பாவநிவர்த்திக்கான வேறு வழியில்லை. தனது பிதாவுக்கும் நமக்கும் இணக்கம் ஏற்படுத்துவதற்காகவும், மக்களுடைய பரம்பரைப் பாவம் மட்டுமல்லாமல் அவர்களுடைய சொந்தப் பாவத்திற்கும் பலியாவதற்காகவும், உண்மையாகவே துன்பங்களை அனுபவித்து, மரித்து பின்னர் புதைக்கப்பட்டார்.[9]

இந்தக் கொள்கையைப் பற்றி நான் எவ்விதக் கருத்தையும் வெளியிடும் முன்னர், கிறிஸ்தவ வாசகர்களிடம் ஒரு விஷயத்தைத் தெளிவாகக் கூறிவிட விரும்புகிறேன். எனது சகோதரர்களுடைய உணர்ச்சிகளைத் தாக்கவேண்டுமென்ற எண்ணமோ விருப்பமோ எனக்கு இல்லை. சிலுவை தண்டனை, உயிர்த்தெழுதல், பாவ நிவர்த்தி ஆகியவற்றைக் குறித்து இஸ்லாம் கூறுவதென்ன என்பதைக் கிறிஸ்தவ சகோதரர்களின் முன்னிலையில் சமர்ப்பிப்பதே இந்தச் சிறு நூலை திரட்டி உருவாக்கியதன் ஒரே நோக்கமாகும். இதனால் நமக்குள் நம்பிக்கை வேறுபடாமல் ஏற்பட்டுள்ள இடைவெளி நீக்கப்பட்டு உடலமைப்பால் நாம் ஒன்றுபட்டிருப்பதைப் போலவே ஆத்மீக ரீதியிலும் ஒன்றுபட்டு விடுவோம். பாவநிவர்த்திக் கொள்கை பற்றிய என்னுடைய கருத்துக்களைக் கீழே தந்திருக்கிறேன். அக்கொள்கையிலுள்ள அறிவுக்குப் பொருந்தாத தன்மையை அதில் காட்டியுள்ளேன்.

1) இவ்வுலகத்தில் இன்று வாழ்ந்து வருகிறவர்கள் எல்லாரும், ஆறாயிரம் ஆண்டுகளுக்கு அல்லது அதற்கும் முன்னால் வாழ்ந்திருந்த ஆதாம், ஏவாள் ஆகியோரின் சந்ததியார்களே என்ற ஊகத்தின்மீது கட்டப்பட்டிருப்பது





பாவநிவர்த்திக் கொள்கை. இன்றைய மனித குலத்தின் ஆரம்பம் வேதாகமத்தில் வரும் ஆதாம் ஏவாளைவிட[10] எவ்வளவோ முந்தியது என்பதை தற்கால விஞ்ஞான அறிவு நிரூபித்திருக்கிறது. ஆதியாகமம் நான்காம் அதிகாரத்தின் வசனங்கள் (14-17) கூட, ஆதாம் ஏவாள் வசித்த இடம் நீங்கலாக உலகத்தின் மற்றப் பகுதிகளிலும் மனிதர்கள் வசித்துக் கொண்டிருந்தார்கள் என்பதையே சுட்டிக் காட்டுகின்றன. ஏனென்றால், “நான் உமது சமூகத்துக்கு விலகி மறைந்து, பூமியில் நிலையற்று அலைகிறவனா யிருப்பேன்; என்னைக் கண்டுபிடிக்கிறவன் எவனும் என்னைக் கொன்று போடுவானே என்று காயீன் கூறினான். காயீனைக் கண்டு பிடிக்கிறவன் எவனும் அவனைக் கொன்று போடாதபடிக்குக் கர்த்தர் அவன்மேல் ஒரு அடையாளத்தைப் போட்டார். பின்னர் அவன் தனது பெற்றோர் வாழ்ந்திருந்த இடத்தை விட்டகன்று ஏதேனுக்குக் கிழக்கான நோத் என்னும் தேசத்தில் குடியிருந்தான். காயீன் தன் மனைவியை அறிந்தான்; அவள் கர்ப்பவதியாகி ஏனோக்கைப் பெற்றாள்; அப்பொழுது அவன் ஒரு பட்டணத்தைக் கட்டி அந்தப் பட்டணத்துக்குத் தன் குமாரனாகிய ஏனோக்குடைய பேரை இட்டான்.”

ஆதாம் ஏவாளுடைய பிள்ளைகளைத் தவிர வேறு யாரும் அப்போது வாழ்ந்திருக்கவில்லை என்றால், எவனாவது காயீனைக் கொன்று போடாதிருக்கும்படி தேவன் காயீன்மீது ஏன் அடையாள மிட்டார்? தன்னுடைய மனைவியை அவன் எங்கிருந்து பெற்றான்? அவனைத் தவிர உலகத்தின் அப்பகுதியில் வேறு மக்கள் யாரும் இல்லாதிருந்தால் அவன் எவ்வாறு ஒரு பட்டணத்தைக் கட்டினான்?

ஆதியாகமத்தில் ஐந்தாவது அதிகாரம்கூட, மனிதனைப் படைக்கும் வேளையில் தேவன் அவர்களை ஆணும் பெண்ணுமாகப் படைத்து ஆசீர்வதித்து, அவர்களைச் சிருஷ்டித்த நாளிலே அவர்களுக்கு ஆதாம் (-மனுஷர்) என்று பேரிட்டான் என்று அறிவிக்கின்றது.[11]

மற்ற மனிதர்கள்கூட ஆதாம் என்று அழைக்கப்பட்டார்கள் என்பதையும், படைக்கப்பட்ட எல்லா மனிதர்களுக்கும் இது ஒரு

பொதுவான பெயர் என்பதையும் இது காட்டுகின்றது. எல்லா மக்களும், பாவம் செய்தவராகக் கருதப்படும் ஆதாமுடைய சந்ததியினர் அல்லர் என்பது உறுதியாகும்போது, ஆதாம் பாவத்தில் விழுந்தார் என்ற நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட பாவநிவர்த்திக் கொள்கை தூள்தூளாக நொறுங்கி விடுகிறது.

2) உண்மையில் இறைவனுடைய கட்டளையை வேண்டும் என்றே தெரிந்து கொண்டு மீறுபவன்தான், தண்டனைக்குரிய பாவியாக இருக்க முடியும். அறியாமை காரணமாக மீறுபவன் பாவியாக இருக்க முடியாது. பாவம் என்பதென்ன என்ற கண்ணோட்டத்தில் பார்க்கும் போது ஆதாம் ஒரு பாவியே அல்லர். ஆதியாகமம் 2:18 ஆம் வசனத்திலிருந்து தேவன் அவருக்கு ஒரு துணையை உண்டுபண்ணப் போவதாக அறிவித்தான் என்பது மிகவும் தெளிவு. தடுக்கப்பட்ட மரத்தின் கனியை அவர் தின்றதற்கான காரணத்தை அவரிடம் கேட்டபோது, என்னுடனே இருக்கும்படி தேவரீர் தந்த ஸ்திரீயானவள் அவ்விருட்சத்தின் கனியை எனக்குக் கொடுத்தாள். நான் புசித்தேன் என்று சரியாகவே பதில் கூறினார். அந்த ஸ்திரீயிடம் தேவன், நீ இப்படிச் செய்தது என்னவென்று கேட்டபோது அந்த ஸ்திரீயானவள்: “சர்ப்பம் என்னை வஞ்சித்தது. நான் புசித்தேன்” என்றாள். தான் வஞ்சிக்கப்பட்டுவிட்டதாக ஒப்புக்கொண்டு மனம் வருந்தினாள். ஆதாமிடம் அவள் கனியைக் கொடுக்கும்போது அது தடுக்கப்பட்ட மரத்தின் கனிதான் என்று அவள் சொல்லவில்லை என்பதை இவ்வாக்கியம் காட்டுகின்றது. ஆகவே உண்மையில் ஆதாம் ஒரு பாவத்தையும் செய்யவில்லை. பவுல்கூட இதே கருத்தை இந்த வசனத்தில் வெளியிட்டுள்ளார்: “மேலும் ஆதாம் வஞ்சிக்கப்பட வில்லை. ஸ்திரியானவளே வஞ்சிக்கப்பட்டு மீறுதலுக்கு உட்பட்டாள்.”[12] ஏதேன் தோட்டத்திலிருந்து அவர்கள் வெளியேற்றப் பட்டதற்கு ஆதியாகமத்தில் கொடுக்கப்பட்டுள்ள காரணம் நகைப்பிற்குரியதாக இருக்கிறது. அந்தக் காரணம் இதுவே: “பின்பு தேவனாகிய கர்த்தர் : இதோ, மனுஷன் நன்மை தீமை





அறியத்தக்கவனாய் நம்மில் ஒருவரைப் போல் ஆனான்; இப்பொழுதும் அவன் தன் கையை நீட்டி ஜீவ விருட்சத்தின் கனியையும் பறித்து, புசித்து என்றைக்கும் உயிரோடிராதபடிக்குச் செய்ய வேண்டும் என்று... ... தேவனாகிய கர்த்தர் அவனை ஏதேன் தோட்டத்திலிருந்து அனுப்பி விட்டார்.”[13]

நன்மை தீமையைப் பிரித்தறிய முடியாதபடி அறியாமையில் வைத்திருப்பதற்காக மனிதனை இறைவன் படைத்தான் என்பதை உங்களால் நம்ப முடிகிறதா? இறைவன் மனிதனைத் தனது சாயலாகவும் தனது ரூபத்தின் படியேயும் படைக்கவில்லையா?[14] ஜீவவிருட்சத்தின் கனியைப் பறித்து ஆதாம் புசித்துவிடக்கூடும் என்ற இறைவனுடைய பயத்தினால்தான் அவர் தோட்டத்தை விட்டு வெளியேற்றப்பட்டார் என்றும், ஆதாம் பாவம் செய்தார் என்பதால் அல்ல என்றும் இவ்வசனங்கள் தெளிவாகச் சுட்டிக் காட்டுகின்றன. ஆகவே ஆதாம் பாவம் செய்தார் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்ட பாவநிவர்த்திக் கொள்கையும் உண்மையானதல்ல என்பது தெளிவாகின்றது.

இறைவன் திருக்குர்ஆனில், “நாம் இதற்கு முன்னர் ஆதமிடம் (ஒரு விஷயத்தை) வலியுறுத்திக் கூறினோம். ஆனால் அவர் (அதனை) மறந்து விட்டார். மேலும் (எமக்கு மாறு செய்யும்) எந்த உறுதியான எண்ணமும் அவரிடத்தில் நாம் கண்டதில்லை.”[15] என்று கூறுகின்றான்.

3) எல்லா மனிதர்களும் பாவம் செய்கிறார்கள்; பரம்பரைப் பாவத்திற்காக இயேசு தம்மையே பலியிட்டதை நம்பாமல் இறைவனின் முன்பு ஒருவனுக்கும் நியாயப் பிரமாணத்தால் நீதியளிக்கப்பட மாட்டாது என்று கூறுவது முற்றிலும் தவறு. லூக்கா முதல் அதிகாரம் ஆறாம் வசனத்தில் சகரியாவும் அவரது மனைவியும் “கர்த்தரிட்ட சகல கற்பனைகளின்படியேயும் நியமங்களின்படியேயும் குற்றமற்றவர்களாய் நடந்து தேவனுக்கு முன்பாக நீதியுள்ளவர்களாயிருந்தார்கள்” என்று எழுதப்பட்டுள்ளது. ரோமன் கத்தோலிக்கர்களின் நம்பிக்கைப்படி, இயேசுவின் தாயாரான மரியாள் குற்றமற்றவளே.

4) பரம்பரைப் பாவம் என்பது புறசமயக் கிறிஸ்தவர்களின் கண்டுபிடிப்புதானேயொழிய பழைய ஏற்பாட்டில் எந்த இடத்திலும் இவ்விஷயம் குறிப்பிடப்படவில்லை. இவ்விஷயத்தில் கிறிஸ்தவப் பெரியார்களுக்குள் அபிப்பிராய பேதம் இருக்கிறது.

ஐந்தாம் நூற்றாண்டில் பெலாஜியஸ் என்பவர், ஒவ்வொருவனும் அவனவனுடைய சொந்த முயற்சிகளினால் புண்ணியவானாவதற்கு அவனவனுக்கும் திறமையிருக்கிறது என அறிவித்து, மதத்தின் விதிமுறைகளை முழுமைப்படுத்தும் வேலையில் ஈடுபடுவதற்காக திருச்சபை உறுப்பினர்களை ரோமபுரிக்கு அழைத்தார். அவரது நண்பர் சீலாசியஸ் 412-ல் மத விரோதமான கருத்துக்களை வெளியிட்டதற்காக குற்றம் சுமத்தப்பட்டு மதத்திலிருந்து தள்ளி வைக்கப்பட்டார். ஏனென்றால் ஆதாமும் அவரது சந்ததியாரும் அழிந்து போகக் கூடிய உடலமைப்பைக் கொண்டவர்கள் ஆதலால், ஆதாம் பாவத்தில் விழுந்த காரணத்தால் மனித இனமே பாவத்தில் விழுந்தது என்ற கூற்றை அவர் மறுத்தார்; புதிதாகப் பிறக்கும் குழந்தைகள் முழுக்க முழுக்க பாவமற்றவை என்பதை வலியுறுத்தினார்; இயேசுவின் வருகைக்கு முன்பும் பாவமற்றோர் இருந்ததை சுட்டிக் காட்டினார்... ... பாவம் என்பது நம்மால் செய்யப்படும் ஒரு செயல் என்றும், அது பிறப்பினால் ஏற்படும் ஒரு நிலையல்ல என்றும் வலியுறுத்தினார். அதாவது பாவமென்பது மன விருப்பதைத் தவறாக உபயோகிப்பதால் ஏற்படுவதாகும். ஒவ்வொரு மனிதனுடைய செயலுக்கும் அவனவனே பொறுப்பாளியாயிருப்பதால் அச்செயலினால் கிடைக்கும் தண்டனையையும் அவனே பெறவேண்டியவனாயிருக்கிறான்."[16]

பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்ட எங்கள் இஸ்லாம், பரம்பரைப் பாவம் என்று எதனையும் ஏற்றுக் கொள்ளவில்லை. ஒவ்வொரு குழந்தையும் தூய குற்றமற்ற இயல்புடனேயே பிறக்கின்றது. 'சுபாவத்தினாலே மற்றவர்களைப் போலக் கோபாக்கினையின் பிள்ளைகளாயிருந்தோம்.' (அதாவது தண்டனைக்கு உரியவர்களா யிருந்தோம்) என்று பவுல் கூறுவதைப் போன்று அல்ல.





5) விலக்கப்பட்ட மரத்தின் கனியைப் புசித்தாலோ, அதனைத் தொட்டாலோ அதன் இயற்கையான விளைவு மரணமாகும். "நீங்கள் சாகாதபடிக்கு அதைப் புசிக்கவும் அதைத் தொடவும் வேண்டாம்..."[17]. இயேசு சிலுவையில் மரித்ததன் மூலம் பரம்பரைப் பாவத்திற்குரிய மீட்சிப் பொருளைச் செலுத்தி விட்டார் என்பது உண்மையானால், அதற்குப் பின்னர் ஒருவர்கூட மரித்திருக்கக்கூடாது. ஆயினும் இன்னும் மரண தண்டனை நிறைவேற்றப்படுவதையும், மனிதர்கள் மரித்துப் போவதையும் நாம் பார்க்கிறோம். குறிப்பாக கிறிஸ்தவ நாடுகளே மிகக் கொடியதும், விரைவில் உயிரைக் குடிக்கக்கூடியதுமான வழிவகைகளைக் கண்டுபிடித்திருக்கின்றன.

6) இறைவன் எக்குற்றமும் அறியாத தன் மகனைக் கொன்று தனது நீதியையும் கருணையையும் நிலைபெறச் செய்தான் என்பது கொஞ்சங்கூடப் புரிந்து கொள்ளத்தக்கதாக இல்லை. "குற்றமற்ற ஒருவன் தன்னை அர்ப்பணிக்க முன் வந்தாலும், தர்ம நீதி அவனைக் குற்றமுள்ளவனாகக் கருதாது. நீதியே இப்படிச் செய்கிறது என்று கருதுவது, நீதியை நிலைத்திருக்கவொட்டாமல் அதன் சட்ட திட்டங்களை அழித்தொழிப்பதாகும். இப்படிச் செய்தால் அது நீதியாகவுமிராது. அது பழிவாங்குதலே ஆகும்."[18]

யூதா, யோசேப்பிடம் தன் தம்பிக்குப் பதிலாகத் தன்னை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டிக் கொண்டபோது யோசேப்பு "அப்படிப்பட்ட செய்கை எனக்குத் தூராமாயிருப்பதாக; எவன் வசத்தில் பாத்திரம் கண்டுபிடிக்கப்பட்டதோ, அவனே எனக்கு அடிமையாயிருப்பான்; நீங்களோ சமாதானத்தோடே உங்கள் தகப்பனிடத்திற்குப் போங்கள் என்றான்."[19]

பாவநிவர்த்திக்கொள்கை தவறானதும் இறைநீதிக்கு முரணானதுமாகும் என்பதைக் காட்டும் மறுக்க முடியாத அத்தாட்சி இது. இஸ்ரவேலர்கள் தங்களுக்காக ஒரு கன்றுக்குட்டியை தங்கத்தில் அமைத்து அதைக் கடவுளாகக் கொண்டபோது, மோசே அவர்களைப் பார்த்து, "நீங்கள் மகா பெரிய பாவம் செய்தீர்கள்;

உங்களுக்கு பாவநிவர்த்தி செய்யக்கூடுமோ என்று அறிய இப்பொழுது நான் கர்த்தரிடத்துக்கு ஏறிப்போகிறேன் என்றான்.” பின்னர் மோசே இறைவனிடம் இரண்டு வேண்டுதல்கள் செய்தான். “ஆகிலும், தேவரீர் அவர்கள் பாவத்தை மன்னித்தருள்வீரானால் மன்னித்தருளும்; இல்லா விட்டால் நீர் எழுதின உம்முடைய என் புஸ்தகத்திலிருந்து என் பேரைக் கிறிக்கிப் போடும்” என்றான். இவ்விடத்தில் இயேசு கிறிஸ்து ஒருபோதும் செய்யாத ஒரு காரியத்தை மோசே செய்தார். மக்கள் செய்த பாவத்திற்காக தன்னைத் தானே பாவநிவர்த்தியாக மோசே அர்ப்பணித்தார். ஆனால் இறைவனோ, “எனக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தவன் எவனோ அவன் பேரை என் புஸ்தகத்திலிருந்து கிறுக்கிப் போடுவேன்” என்று சொல்லி குற்றம் செய்தவனுக்குப் பதிலாக, குற்றமற்றவனைத் தண்டித்தல் தன்னுடைய நீதிக்கு எதிரானது என்று மோசேயின் வேண்டுதலுக்குப் பதிலளித்து விட்டான். (யாத்திராகமம் 32:30-33) ஆகவே குற்றம் செய்தவனுக்குப் பதிலாக ஒரு பாவமும் அறியாத ஒருவனைக் கொல்லுவது நீதிக்கும் இரக்கச் சித்தத்திற்கும் முரணாக இருக்கிறது. இப்படி நடந்திருந்தால் இறைவன் தனது பண்புகளாகிய நீதியையும், கருணையையும் நிலைநாட்டுவதற்குப் பதிலாக அவ்விரண்டையும் அழித்துவிட்டான் என்றே கூற வேண்டும்.

7) முழு உலகப் பாவத்திற்குமாக நேர்மையாளரான இயேசு பிராயச்சித்தப் பலியானார்[20] என்று கூறுவது அறிவுக்குப் புலனாகாதது மட்டுமல்லாமல், “நீதிமானுக்குப் பதிலாகத் துன்மார்க்கனும், செம்மையானவனுக்குப் பதிலாக துரோகியும் மீட்கும் பொருளாவார்கள்”[21] என்ற பழைய ஏற்பாட்டுத் தத்துவத்திற்கே முரணானது.

8) சிலுவையில் இயேசு மரித்தபின்னர் மூன்று தினங்களுக்கு நரகத்தில் இருந்தார்; அந்த வேளையில் உலகப் பாவங்களுக்கான தண்டனையை அவர் அனுபவித்தார் என்ற நம்பிக்கை, அவருடன் சிலுவையிலறையப்பட்ட இரண்டு திருடர்களில் ஒருவனுக்கு இயேசு கிறிஸ்து தாமே என்ன சொன்னாரோ அதற்கு நேர் முரணாக





இருக்கிறது. “இன்றைக்கு நீ என்னுடனேகூடப் பரதீசிலிருப்பாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.”[22]

9) ஒரு பாம்பின் உருவத்தில் ஏவாளை வஞ்சித்ததாகச் சொல்லப்படும் சாத்தானையே பாம்பின் உருவத்தில் சிலுவையில் தொங்கிக் காட்டுமாறு இறைவன் செய்ய வேண்டியதிருக்க, கடைசியில் சாத்தானே, சர்வ வல்லமையுள்ள இறைவனை அவருடைய மகன் இயேசுவின் ரூபத்தில் சிலுவையில் தொங்கிக் காட்டுமாறு கட்டாயத்திற் குள்ளாக்கியது என்று நம்புவது முழுமூடத்தனமாகும். இவ்வாறு நம்புவதன் மூலம் கிறிஸ்தவர்கள் சர்வவல்லமையுள்ள இறைவனைக் கீழேவிழச் செய்து வஞ்சகன் சாத்தானை வெற்றிபெறச் செய்கிறார்கள்.

10) இயேசுவின் இரத்தத்தில் நம்பிக்கை வைப்பதன் மூலம், ஒரு மனிதன் பாவத்தின் தண்டனையிலிருந்து விடுவிக்கப்பட்டுக் காப்பாற்றப்படுவான் என்ற எண்ணம், இயேசு கிறிஸ்து கூறிய கீழ்க்கண்ட வாக்கியங்களுக்கு நேர் எதிராக இருக்கின்றது.

அ) “மனுஷர் பேசும் வீணான வார்த்தைகள் யாவையும் குறித்து நியாயத் தீர்ப்பு நாளிலே கணக்கொப்புவிக்க வேண்டும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஏனெனில், உன் வார்த்தைகளினாலே நீதிமான் என்று தீர்க்கப்படுவாய். அல்லது உன் வார்த்தைகளினாலே குற்றவாளி என்று தீர்க்கப்படுவாய் என்றார்.”[23]

ஆ) “எவனாகிலும் மனுஷகுமாரனுக்கு விரோதமான வார்த்தை சொன்னால் அது அவனுக்கு மன்னிக்கப்படும்; எவனாகிலும் பரிசுத்த ஆவிக்கு விரோதமாகப் பேசினால் அது இம்மையிலும் மறுமையிலும் அவனுக்கு மன்னிக்கப்படுவதில்லை.” (மத்தேயு 12:32)

இ) “உன் கையாவது உன் காலாவது உனக்கு இடறல் உண்டாக்கினால், அதைத் தறித்து எறிந்து போடு; நீ இரண்டு கையுடையவனாய், அல்லது இரண்டு காலுடையவனாய் நித்திய அக்கினியிலே தள்ளப்படுவதைப் பார்க்கிலும்,

சப்பாணியாய் அல்லது ஊனனாய், நித்திய ஜீவனுக்குள் பிரவேசிப்பது உனக்கு நலமாயிருக்கும்.”[24]

ஈ) “இப்படியே உலகத்தின் முடிவிலே நடக்கும். தேவதூதர்கள் புறப்பட்டு, நீதிமான்களின் நடுவிலிருந்து பொல்லாதவர்களைப் பிரித்து அவர்களை அக்கினிச் சூளையிலே போடுவார்கள்; அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்டாயிருக்கும் என்றார்.”[25]

உ) “மனுஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னித்தால், உங்கள் பரமபிதா உங்களுக்கும் மன்னிப்பார். மனுஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னியாதிருந்தால், உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களையும் மன்னியாதிருப்பார்.” (மத்தேயு 6:14-15)

ஊ) மத்தேயு 25 ஆம் அதிகாரம் 31 லிருந்து 46 வரையுள்ள வசனங்களை நீங்கள் வாசித்தால், இந்த உலகத்தில் தாங்கள் செய்த நற்கருமங்களுக்காக நீதிமான்கள் (வலது பக்கத்தில் நிற்பவர்கள்) நித்திய ஜீவனை அடையப் போவார்கள் என்றும், இடது பக்கத்தில் நிற்பவர்கள் நற்கருமங்களைச் செய்யாததற்காக நித்திய ஆக்கினையை அடையப் போவார்கள் என்றும் நீங்கள் அறிந்து கொள்வீர்கள். இருப்பினும், இடது பக்கத்திலும் வலது பக்கத்திலும் நிற்கும் எல்லாருமே கிறிஸ்துவை விசுவாசித்த கிறிஸ்தவர்களாகவே இருப்பார்கள். பாவநிவர்த்திக் கொள்கைக்கும் இயேசுவின் இந்த வாக்கியங்களுக்கும் எவ்வித உடன்பாடும் இல்லை.

11) தாமஸ் பெய்ன் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்: “எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. எனக்கு ஏழு அல்லது எட்டு வயதாக இருக்கும்போது, மத பக்தி நிறைந்த எனது உறவினர் ஒருவர் தேவகுமாரனுடைய மரணத்தினால் உண்டான பாவநிவர்த்தி என்ற பொருள் பற்றி வாசித்த சொற்பொழிவை கேட்டேன். சொற்பொழிவு முடிந்ததும் நான் தோட்டத்தினுள்ளே நுழைந்து, படிக்கட்டின் வழியே இறங்கிக் கொண்டிருந்தபோது சற்று முன்னர் கேட்ட பேச்சை ஞாபகப்படுத்தி கடுமையாகச் சிந்தித்தேன்.





இக்கொள்கை வேறு வழியில் பழிவாங்க முடியாத காரணத்தால் - தன்னுடைய மகனையே கொன்ற வெறிபிடித்த மனிதனாக எல்லாம்வல்ல இறைவனை காட்டுகின்றது என மனதிற்குள் எண்ணிக்கொண்டேன். இப்படிப்பட்ட காரியம் செய்யும் ஒரு மனிதன் தூக்கிலிடப்படுவான் என்பதை நான் அறிந்திருந்தேன். அப்படியானால் இவர்கள் என்ன நோக்கத்திற்காக இப்பேர்ப்பட்ட போதனைகளை செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை என்னால் கண்டுகொள்ள முடியவில்லை. குழந்தைத்தனமான அறியாமை யினால் எழுந்த எண்ணங்களில் இதுவும் ஒன்றல்ல; இறைவன் இப்பேர்ப்பட்ட ஒரு காரியத்தைச் செய்யக்கூடாத அளவுக்கு அவ்வளவு நல்லவர், அதைச் செய்வதற்கு எந்த அத்தியாவசியமும் ஏற்படாத அளவுக்கு அவ்வளவு வல்லமைமிக்கவர் என்ற எண்ணத்தினால் நான் கடுமையாக சிந்தனை வசப்பட்டிருந்தேன். இந்தக் கணம் வரையிலும் அதே முறையில்தான் நான் நம்பி வருகிறேன். மேலும் ஒரு குழந்தையின் மனதில் அதிர்ச்சி உண்டாக்கக்கூடிய ஏதேனும் விஷயத்தைக் கொண்டிருக்கிற ஒரு மார்க்கம் உண்மையான மதமாக இருக்க முடியாது என்றும் நான் நம்புகிறேன்.”[26]

12) இவ்விடத்தில் ஒரு கிறிஸ்தவன் இப்படிக் கூறலாம்; (வழக்கமாக கிறிஸ்தவர்கள் இப்படித்தான் கூறி வருகிறார்கள்). “நான் ஒருவனுக்குப் பணம் கடன்பட்டிருந்து அதை அவனுக்குக் கொடுக்க இயலாவிட்டால், அவன் என்னைச் சிறையில் தள்ளுவதாகப் பயமுறுத்தினால் அந்தக் கடனை மற்றொருவன் தன் பேரில் ஏற்றுக் கொண்டு அதனை எனக்காகச் செலுத்திவிட முடியும்.” இதே போன்று தேவகுமாரனாகிய இயேசு, நம்முடைய பாவங்களுக்கான மீட்சிப் பொருள் செலுத்தி, மூன்று இரவும் மூன்று பகலும் நரகத்தில் உழன்றிருக்கிறார். பாவத்தை ஒரு கடனாகவும் கடனாளியை கடவுளைப் போலல்லாமல் ஒரு பலமற்ற ஏழையாகவும் வைத்துக் கொண்டால் அதனை நியாயமாகக் கொள்ளலாம். ஆனால் பாவம் ஒரு குற்றமாக, அதாவது வேண்டுமென்றே இறைவனுடைய கட்டளையை மீறுவதாகக்

கருதப்பட்டால் எந்த நீதியின் சட்டமாயினும் சரி, குற்றவாளியைத் தவிர வேறு எவனையும் தண்டிக்காது. அல்லது பாவத்தை ஓர் ஆத்மீக நோய் என்று வரையறுத்தால், அதற்கான மருந்தை பாவம் செய்தவனைத் தவிர மற்றொருவனுக்கு அளிப்பதால் அந்த நோய் குணமடையாது. அதற்கும் மேலாக இயேசு தாமாகவே முன்சென்று தன்னை அர்ப்பணித்துக் கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக இறைவனிடம் மன்றாடி, தம்மை மரணத்தினின்றும் காப்பாற்றும்படி கண்ணீர் மல்கப் பிரார்த்தனை செய்தார். மேலும் மிகுந்த அபயக்குரலோடு, "என் பிதாவே, இந்தப் பாத்திரத்தில் நான் பானம் பண்ணினாலொழிய இது என்னைவிட்டு நீங்கக் கூடாதாகில், உம்முடைய சித்தத்தின்படி ஆகக்கடவது"[27] என்றும் கூறினார்.

பின்னர் அவர் சிலுவையிலிருக்கும்போதே இதயத்தைப் பிழியும் வகையில், "என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்"[28] என்றும் சப்தமிட்டார். தாம் மறைந்திருந்த இடத்தை யூதர்களுக்குக் காட்டிக்கொடுத்த யூதாசைப்பற்றி "...அந்த மனுஷனுக்கு ஐயோ; அந்த மனுஷன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு நலமாயிருக்கும்"[29] என்று கூறினார்.

உண்மை இவ்விதமிருக்கையில், பாவம் செய்தவர்களுக்காக அவர் தாமே முன்சென்று தம்மை அர்ப்பணித்துக் கொண்டார் என்று யாராவது உளப்பூர்வமாக கூறமுடியுமா?

புதிதாகப் புனையப்பட்ட இந்தத் தத்துவத்தின் விளைவு என்னவென்றால், கிறிஸ்தவர்கள் நிறைந்த ஐரோப்பா நாத்தீகத்தின் பிறப்பிடமாக ஆகி வருகிறது. பாவத்தைப் பற்றிய உணர்வுகூட அங்கு செத்துப்போய் விட்டது.

சங்கைக்குரிய ஹெச்.ஆர். கவ் அவர்கள் இவ்வாறு எழுதுகிறார்: "நம்முடைய மக்களில் பெரும்பகுதியினருக்கு பாவத்தைப் பற்றிய உணர்வே இல்லை. இயற்கையில் அவர்கள் தீய ஒழுக்கம் இல்லாதவர்களாய் இருக்கலாம். ஆனால் அவர்களிடத்தில் எந்த நல்லொழுக்கமுமில்லை. மனச்சாட்சியின் ஏவலுக்குத் தொடர்ந்து பணியாமல் நடந்துவிட்டதால் நன்மை, தீமையென்ற





உணர்வு அற்றுப் போகுமளவுக்கு மனச்சாட்சி மந்தமாகிவிட்டது. நம்முடைய பாவத்தைப் பற்றி நாம் வெட்கப்படுபவர்களாகக் காணப்படவில்லை. ஒரு மக்கள் கூட்டம் இந்த நிலைக்கு வந்துவிட்டால், அழிவு மிகவும் சமீபத்திலேயே இருக்கிறது."[30]

அவர்கள் தங்களின் பாவங்களைப் பற்றி ஏன் வெட்கப்பட வேண்டும்? அவர்களுடைய இரட்சிப்புக்காக வேண்டி தேவன் தன்னுடைய கருணையினால் குற்றமறியாத தன் மகனுடைய இரத்தத்தை (ஏன் தன்னுடைய இரத்தத்தையே) கொட்ட வில்லையா? எப்படி யிருந்தாலும் இந்த இரட்சிப்புக் கொள்கை பாவம் செய்வதற்கு தங்கு தடையில்லாத ஒரு 'லைசென்சை' கொடுத்து விடுகிறது. இதன் விளைவாகவே ஐரோப்பா அமெரிக்காவிலுள்ள கிறிஸ்தவர்கள் உலகத்தின் வேறு எந்தப் பகுதியைக் காட்டிலும் வெளிப்படையாகவே ஒழுக்கக் குறைவான குற்றங்கள் புரிகிறார்கள். இப்படிக் குற்றம் புரிபவர்கள் சாதாரணக் கிறிஸ்தவர்கள் மட்டுமல்ல; போதகர்களும் ஆசாரியர்களும் கூடத்தான். விளக்கத்திற்கு நியுயார்க்கில் பிரசுரிக்கப்பட்ட 'தி கிரைம்ஸ் ஆஃப் பிரீச்சர்ஸ்' என்ற புத்தகத்தையும், J.M. வீலர் (இலண்டன் 1887) இயற்றிய 'தி கிரைம்ஸ் ஆஃப் கிறிஸ்டியானிட்டி' என்ற நூலையும், கென்மோர் கன்னித்துறவி எழுதிய 'வாழ்க்கை' என்ற புத்தகத்தையும், ஒரு கிறிஸ்தவப் பிரமுகர் எழுதி இலண்டன் ஐடியல் பப்ளிசிங் யூனியன் லிமிடெட் பிரசுரம் செய்த 'இன்சைடு தி சர்ச் ஆஃப் ரோம்', வை இஸ் கிறிஸ்டியானிட்டி எ ஃபேய்லியர்' என்ற நூற்களையும் பாருங்கள்.

எல்லா வகைகளிலும் பாவம் இன்னும் நிலைத்திருக்கிறது. அதிலும் குறிப்பாக கிறிஸ்தவ உலகத்தில் நிலைத்திருக்கிறது. அவர்களுடைய பாவம் மன்னிக்கப்படுவதற்கு பவுல் கற்பித்த கிறிஸ்தவமதம் எந்த ஒரு வழியையும் காட்டும் என்று நான் நினைக்க வில்லை. ஏனெனில் பவுல், "சத்தியத்தை அறியும் அறிவை அடைந்த பின்பு நாம் மனப்பூர்வமாய்ப் பாவஞ்செய்தவர்களாயிருந்தால், பாவங்களினிமித்தம் செலுத்தத்தக்க வேறொரு பலி இனியிராமல் ...."[31] என்று கூறுகிறார். இயேசுவின் சிலுவை

மரணத்தில் நம்பிக்கை வைத்த பின்னர் பாவஞ் செய்கின்ற கிறிஸ்தவ உலகம் பாவத்திலேயே மரித்து, மேலே கூறப்பட்ட வசனத்தின்படி, ஒருபோதும் இரட்சிப்பை அடையப் போவதில்லை.

## *உண்மையான பாவநிவர்த்தி*

1943 ஆம் ஆண்டில், சைனாவிலுள்ள முஸ்லிம்களின் தோழர் சங்கத்தின் செயலாளர் எனக்கு எழுதிய கடிதமொன்றில் அவளுடைய நம்பிக்கையை கீழ்க்கண்ட வார்த்தைகளில் விளக்கியிருந்தாள்: "இறைவன் இயேசுவுடைய உருவத்தில் வந்து, பாவத்தை (அதாவது பாவத்திற்குரிய தண்டனையை மட்டுமல்லாது பாவத்தையே) தன்மீது ஏற்றுக் கொண்டான்." இயேசு மரித்துப் போகாதபடி, பாவம் மன்னிக்கப்பட்டு மனிதர்கள் நேர்மையாளர் களாக முடியாது."

அவளுக்கு நான் அளித்த பதில் இதுதான்: "இப்படி நம்புவது இறைவன் சிலுவையிலேயே தற்கொலை செய்து கொண்டு மூன்று நாட்கள் நரகத்தில் இருந்தான் என்று நம்புவதோடு மக்கள் செய்த பாவத்திற்காக அவர்களைத் தண்டிக்காதபடி அவர்களை மன்னிப்பதற்கு அவனுக்கு உரிமையில்லை என்று நம்புவதற்குச் சமமாகும். மேலும் இப்படி நம்புவது இறைவன் இரக்கமுள்ளவனாகவோ கருணை யுள்ளவனாகவோ இல்லாமல், மேலதிகாரிகளால் தனக்குத் தரப்பட்ட சட்டத்தின்படி குற்றவாளிகளைத் தண்டித்துத் தீரவேண்டிய நீதிபதியைப் போல இருக்கிறான் என்று நம்புவதற்கும் சமமாகும். மற்றவர்களுக்காக, ஒரு குற்றமும் அறியாத ஒருவனைக் கொல்லுவது கருணையாகுமா? ஒரேயொரு மகனை வைத்திருக்க வேண்டிய எந்த ஓர் இரக்கசித்தமுள்ள தந்தையிடமும் கேளுங்கள் - அது எந்த நியாயத்தையும் கருணையையும் சேர்ந்ததென்று? இயேசுவின் இரத்தத்தால் பாவம் கழுவப்படும் என்று எண்ணுவது அறிவுக்குப் புறம்பானது மாத்திரமல்ல. கருணை, நீதி ஆகியவற்றின் அனைத்துக் கோட்பாடுகளுக்கும் எதிராகவுமுள்ளது.





இறைவனைப்பற்றி இஸ்லாம், அவன் மிகுந்த இரக்கமுள்ளவன்; அளவற்ற கருணையாளன்; தன் அடியார்களை மன்னிக்கின்றவன் என்றெல்லாம் கூறுகின்றது. திருக்குர்ஆனில் இறைவன், "நீர் கூறுவீராக. தமக்கே (பாவஞ்செய்து) அநீதியிழைத்துக் கொண்ட என் அடியார்களே! நீங்கள் அல்லாஹ்வின் கருணை பற்றி நம்பிக்கை இழந்து விடாதீர்கள். நிச்சயமாக அல்லாஹ் எல்லா பாவங்களையும் மன்னிக்கிறான். நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவனும் மேன்மேலும் கருணை காட்டுபவனுமாவான்."[32]

அவனே எல்லா மனிதர்களையும் படைத்தவனாகவும், ஒரே எஜமானனாகவும் இருக்கிறான். அவன் விரும்புபவனை மன்னிப்பான், குற்றவாளிக்குத் தண்டனை நன்மையளிக்கு மென்றால், அவன் தண்டனையை அளிப்பான்.

பாவி ஒருவன், கருணைமிக்க இறைவனின் முன்னிலையில் விழுந்து அவனது நெற்றியைப் பதித்து உருக்கத்துடனும் கண்ணீர் சிந்தியும் தான் செய்த பாவத்தை உணர்ந்து வருந்தி, மீண்டும் தான் பாவமே செய்வதில்லை என்ற உறுதியோடு இறைவனைப் பிரார்த்திக்கும்போது, தாயையும் தந்தையையும்விட அதிக கருணையுள்ள இறைவன் அவனைக் காப்பதற்கு முன்வந்து அவனுடைய பாவங்களை மன்னிக்கிறான். இந்த வகையில்தான் பாவம் ஒரு நியாயமான முறையில் மன்னிக்கப்பட முடியும். தனது ஊழியனுக்குப் பத்தாயிரம் ரூபாய் கடன் கொடுத்திருந்த ஓர் அரசனுடைய கதையைத் தாங்கள் படித்ததில்லையா? அந்தக் கடனை அரசன் கேட்டபோது, ஊழியக்காரன் கீழே விழுந்து வணங்கி, "தேவரீர், என் பொருட்டு பொறுமையாக இருங்கள். நான் எல்லாக் கடன்களையும் செலுத்தி விடுகிறேன்" என்றான். பின்னர் அந்த ஊழியனின் எஜமான் அவன்மீது கருணை கொண்டு அவனை விடுவித்து அவனது கடனையும் மன்னித்தான்.

அப்போஸ்தலனாகிய பேதுரு இயேசுவிடத்தில் வந்து எனது சகோதரன் குற்றம் செய்தால் நான் எத்தனை தரம் அவனை

மன்னிக்க வேண்டும் - ஏழு தரம் மட்டுமா என்று கேட்டபோது, ஏழு தரம் மாத்திரமல்ல. ஏழெழுபது தரம் மட்டும்[33] என்று அவர் பதிலளிக்க வில்லையா? மனிதர்கள் தங்கள் கருணையினாலும் இரக்கத்தாலும் தங்களுக்கு எதிராக குற்றம் செய்பவர்களை தண்டனை தராமல் மன்னிக்கக் கூடுமானால், மிகுந்த கருணையுள்ள இறைவன் தனது அன்பாலும் அருளாலும் தனக்கெதிராகக் குற்றம் புரிபவர்களைத் தண்டிக்காமல் மன்னித்தால் அது எப்படி நீதியற்றதாகும்? பாவமன்னிப்புக்கு உண்மையான வழி முன்பு செய்த குற்றத்தை மனப்பூர்வமாக உணர்ந்து வருந்துவதுதான். இவ்வாறு திருக்குர்ஆனில் குறிப்பிடப்பட்டுள்ளதோடு, எல்லா தீர்க்கதரிசிகளாலும் கற்பிக்கப் பட்டுள்ளது.

இறைவன் திருக்குர்ஆனில் இவ்வாறு கூறுகின்றான்: "கழிவிரக்கம் கொண்டு (மனந்திருந்தி) நம்பிக்கை கொண்டு நற்செயல்கள் செய்வோர் நீங்கலாக (மற்றவர்களையே தண்டிக்கின்றான்) அல்லாஹ் இத்தகையோரின் தீய செயல்களை நற்செயலாக மாற்றுகிறான். அல்லாஹ் மிக்க மன்னிப்போனும் மேன்மேலும் கருணை காட்டுபவனும் ஆவான்."[34]

எசக்கியேல் தீர்க்கதரிசி தேவன் தன்னிடம் சொன்னதாக இவ்வாறு கூறுகிறார்: "பாவஞ்செய்கிற ஆத்துமாவே சாகும். குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதுமில்லை; தகப்பன் குமாரனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதுமில்லை. நீதிமானுடைய நீதி அவன்மேல்தான் இருக்கும். துன்மார்க்கனின் துன்மார்க்கமும் அவன்மேல்தான் இருக்கும். துன்மார்க்கன் தான் செய்த எல்லாப் பாவங்களையும் விட்டுத் திரும்பி, என் கட்டளைகளையெல்லாம் கைக்கொண்டு நியாயத்தையும், நீதியையும் செய்வானேயாகில் அவன் பிழைக்கவே பிழைப்பான்; அவன் சாவதில்லை. அவன் தான் செய்த எல்லா மீறுதலும் நினைக்கப்படுவதில்லை. அவன் தான் செய்த நீதியிலேயே பிழைப்பான்."[35] II நாளாகமம் ஏழாம் அதிகாரம் 12 லிருந்து 14 வரையுள்ள வசனங்கள், ஏசாயா 55 ஆம் அதிகாரம், 7 ஆம் வாக்கியம் ஆகியவற்றைப் படியுங்கள். இவற்றில்





தாழ்மை, பிரார்த்தனை மற்றும் இறைவனுடைய முன்னிலையைத் தேடி, தீங்கானதும் நேர்மையற்றதுமான வழிகளை உதறிதள்ளுதல் ஆகியவைகளே பாவம் மன்னிக்கப்டுவதற்குரிய வழிகளாகும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆகவே கிறிஸ்தவர்கள் நம்புவது போன்று, இயேசு சிலுவையில் மரித்தார் என்று நம்புவது, பாவம் மன்னிக்கப் படுவதற்குரிய வழியல்ல. கருணைமிக்க இறைவன் மற்றவர்களின் பாவத்தைப் போக்குவதற்காக ஒரு குற்றமுமறியாத ஒருவருடைய இரத்தத்தைச் சிந்தவைத்து அவரைச் சபிக்கப்பட்டவராக்கினான் என்று நம்புவதே ஒரு பெரிய பாவமாகும். நான் உள்ளத்தைத் தொட்டுச் சொல்லுகிறேன் - இயேசு ஒரு முறையல்ல ஆயிரம் முறை சிலுவையிலேயே இறந்து போவதாயிருந்தாலும் அவரது மரணத்தால் மற்றவர்களுடைய பாவத்தைப் போக்க முடியாது. நம்முடைய பாவங்களை விட்டு நாம் தப்பிப்பதற்காக இறைவனின் மிகுந்த அன்பிற்குரிய தீர்க்கதரிசியாகிய இயேசு சிலுவையில் மரித்து சபிக்கப்பட்டவரானார் என்று நாம் குற்றம் சாட்டுவது எவ்வகையிலும் பொருத்தமானதன்று. இதனால் இயேசுவின் உள்ளம் இறைவனைப் புறக்கணித்துவிட்டதென்றும் அவர் இறைவனுக்குக் கீழ் படியாதவரானார் என்றுமே பொருள் ஏற்படும். இறைவன் வாக்களிக்கப்பட்ட மஸீஹை (மேசியாவை) இக்காலத்தில் அனுப்பியிருப்பதன் நோக்கங்களில் ஒன்று, சிலுவை மரணத்தின் சாபத்திலிருந்து இயேசுவை விடுவிப்பதாகும். இது இறைவனின் விருப்பமாகும். அவனது விருப்பமே நடந்தேறும், சிந்தனையும், அறிவுத்திறனும் நிறையப் பெற்றுள்ள கிறிஸ்தவர்கள் புற சமயத்திலிருந்து கடன் வாங்கப்பட்டுள்ள எல்லாவிதமான அறிவுக்குப் பொருந்தாத கொள்கைகளையும் விட்டுவிடக்கூடிய நேரம் வந்து கொண்டிருக்கிறது. உண்மையில், இயேசு இறைவனால் அனுப்பப்பட்ட ஒரு தீர்க்கதரிசியாகவே இருந்தார். இறைவன் அவரை சிலுவையின் சபிக்கப்பட்ட மரணத்திலிருந்து காப்பாற்றி ஏனைய இறைதூதர்களைப் போன்றே மரணம் அடையும்படிச் செய்தான்.

## குறிப்புகள்


1. பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் இரண்டாம் பதிப்பு - Sacrifice என்ற தலைப்பு.
2. மாற்கு 10 : 45
3. H. ராஷ்டால் எழுதிய 'தி ஐடியா ஆஃப் அட்டான்மென்ட்' (பாவநிவர்த்திக் கொள்கை)
4. வெய்கால் எழுதிய 'பேகனிசம் இன் அவர் கிறிஸ்டியானிட்டி' பக்கம் 160.
5. கொலோசெயர் 1 : 14
6. கொலோசெயர் 1 : 20
7. எபிரேயர் 12 : 24
8. I யோவான் 2 : 2
9. பொதுப் பிரார்த்தனை நூல்
10. 'நியூ டிஸ்கவரீஸ் டூ தி ஆன்டிகுட்டி ஆஃப் மேன்' - ஸர் ஆர்தர் கெய்த் எழுதியது
11. ஆதியாகமம் 5 : 1-2
12. I தீமோத்தேயு 2 : 14
13. ஆதியாகமம் 3 : 22-23
14. ஆதியாகமம் 1 : 26
15. திருக்குர்ஆன் 20 : 116
16. பிரிட்டானியக் கலைக்களஞ்சியம்
17. ஆதியாகமம் 3 : 3
18. தாமஸ் பெய்ன் எழுதிய தி ஏஜ் ஆஃப் ரீஸன்
19. ஆதியாகமம் 44 : 17
20. I யோவான் 2 : 2
21. நீதிமொழிகள் 21 : 18
22. லூக்கா 23 : 43
23. மத்தேயு 12 : 36-37
24. மத்தேயு 18 : 8-9
25. மத்தேயு 13 : 49-50
26. தாமஸ் பெய்ன் எழுதிய தி ஏஜ் ஆஃப் ரீஸன்
27. மத்தேயு 26 : 42
28. மத்தேயு 27 : 46
29. மத்தேயு 26 : 24
30. தி வாட்ச்மேன், மார்ச்சு 1941 பக்கம் 93 (இலண்டன்)
31. எபிரேயர் 10 : 26
32. திருக்குர்ஆன் 39 : 54
33. மத்தேயு 18 : 21-22
34. திருக்குர்ஆன் 25 : 71
35. எசக்கியேல் 18 : 20-22






# அத்தியாயம் - 11

## இயேசு எங்கே சென்றார்?

"இயேசு சிலுவையில் மரிக்காமலும், வானத்திற்கு ஏறிச் செல்லாமலுமிருந்தால், அவர் வேறு எங்கே சென்றார்?" என்ற கேள்வி இவ்விடத்தில் எழுகிறது.

இயேசு அவருடைய சீடர்களுக்கு கடைசியாகப் பிரியாவிடை கூறிவிட்டு பின்னர் எங்கே சென்றார் என்பதைப் பற்றி ஒன்றும் அறியாதவர்கள், அவர் எங்கோ ஓரிடத்திற்குச் சென்று மரணித்திருக்க வேண்டும் என்று சொல்லுவார்கள். இந்த விஷயத்தில் அவரது நடத்தை, தன்னுடைய நாட்டு மக்களுக்கு விடை கொடுக்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டு அவர்களறியாத ஓர் இடத்திற்குச் சென்று பின்னர் அவர்களைக் காண்பதற்கு ஒருபோதும் திரும்பி வராத ஒருவனைப் போன்றிருக்கிறது. இதன் விளைவாக, ஒரு குறிப்பிட்ட காலக்கெடு கழிந்த பின்னர் அவர் மரணித்து விட்டதாக அறிஞர்கள் கருதிவிட்டார்கள். உதாரணமாக, இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்று நம்பிய பேராசிரியர் ஹென்றி இபர்ஹார்டு காட்லோப் பவுலுஸ் (1761-1851) இவ்வாறு எழுதுகிறார்: "இயேசு உண்மையில் எங்கு மரித்தார் என்பதை அவர்கள் (சீடர்கள்) அறியவில்லை. ஆகவே அவர் பிரிந்து சென்றதை, அவர் பரமேறிச் சென்றுவிட்டதாக வருணிக்க ஆரம்பித்தனர்."[1]

இதைப்போலவே, சிட்னி மாவட்ட நீதிபதியாகிய ஏனெஸ்ட் பிரௌஹாம் டோக்கர் என்பார் கூறியதாவது:

"இயேசு சிலுவையில் மரிக்கவில்லையென்றால் இவ்வுலக வாழ்க்கையிலிருந்து அவர் எப்படி, எப்போது, எவ்விடத்தில் வைத்துப் பிரிந்து சென்றார்? இதற்குப் பதிலளிக்கக்கூடிய அளவுக்கு நம்மிடம் அத்தாட்சிகள் இல்லை என்பதை நாம் ஒப்புக் கொண்டேயாக வேண்டும். என்னைப் பொருத்தவரையில் அவர் மனிதராக இருந்ததால், "மனித வர்க்கத்தில் உள்ள மற்ற எல்லாரும்

போய்த் தீரவேண்டிய குறுகிய பயங்கரமான மரணப்பாதையின் வழியேதான்" அவரும் சென்றார் என்று நம்புவதில் நான் திருப்தியடைகிறேன். ஒருவேளை கலிலேயாவில் தாம் அடைக்கலமடைந்திருந்த இடத்தை விட்டு அவர் வெளியேறாது இருந்திருக்கலாம். அல்லது திபேரியாக் கடற்கரையிலுள்ள ஏகாந்தமான தன் வாசஸ்தலத்திலோ தன்னந்தனியான ஏதோவொரு மலையுச்சியிலோ ஆள் நடமாட்டமற்ற ஒரு பள்ளத்தாக்கிலோ தன்னுடைய சரீரக் காயங்களின் தாங்க முடியாத வேதனையை அனுபவித்துக் கொண்டு சிறுகச்சிறுக மரணமடைந்திருக்கலாம். 'இந்நாள் வரைக்கும் ஒருவனும் அவன் பிரேதக் குழியை அறியான்.'[2] அறிவுத் திறத்தாலும் நடந்திருக்கும் உண்மையான நிகழ்ச்சிகளாலும் இயேசு சிலுவையில் மரித்ததையும், அவர் வானத்திற்கு பறந்து சென்றதையும் மறுப்பவர்கள், அவர் இயற்கை மரணம் அடைந்தார் என்பதை நம்புகிறார்கள். ஆனால் அவர் எவ்விடத்தில், எப்போது மரணமடைந்தார் என்பதை அவர்களால் கூற இயலவில்லை.

தற்காலத்தில் ஐரோப்பிய சிந்தனையாளர்கள் இயேசு அடக்கம் செய்யப்பட்டுள்ள இடத்தை அறிந்து கொள்ள இயலாதவர்களாய் அவருடைய வாழ்க்கை வரலாறு முழுவதுமே ஒரு கட்டுக்கதை என்று கருத ஆரம்பித்தார்கள். ஒரு குரல் கடந்த நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் இந்தியாவின் முக்கியமான ஓர் இடத்திலிருந்து அதாவது (பஞ்சாபிலுள்ள) காதியானிலிருந்து எழுந்தது. அந்தக்குரல் அறிவித்த தென்னவென்றால், நூற்றாண்டுக் காலமாக தவறான முறையில் கடவுளாக வணங்கப்பட்டு வந்தவரும், மூன்றவாது வானத்தில்[3] வாழ்ந்து வருவதாக நம்பக்கூடியவருமாகிய இயேசு, காஷ்மீரில் ஸ்ரீ நகரிலுள்ள கான்யார் வீதியில் அடங்கப்பட்டுள்ளார் என்பதேயாகும். அப்போது காதியான் எவருக்கும் தெரியாத சிறு கிராமமாக இருந்தது. ஆனால் இன்று இஸ்லாமிய மறுமலர்ச்சியின் செழிப்புமிக்க தலைமையகமாக விளங்குகிறது.





இக்குரல் நூறாயிரக்கணக்கான அறிவுடைய மக்களை, அந்தக் கல்லறையில் அடக்கப்பட்டு இருப்பவர் மரியாளின் மகனும் இஸ்ரவேல் வீட்டாரின் காணமாற்போன ஆடுகளின் தீர்க்கதரிசியுமாகிய இயேசுவே என்று பலம்மிக்க ஆதாரங்களின் துணை கொண்டு நம்பச் செய்தது.

இறைவன் நாடினால், இந்தக் கண்டுபிடிப்பு கிறிஸ்தவ உலகிற்குள் ஒரு புரட்சியை ஏற்படுத்தி இலட்சோப இலட்சம் மக்கள் ஒரு பிறவியை வணங்கும் வழக்கத்தையும், புற சமயத்திலிருந்து கடன் வாங்கப்பட்ட மற்றக் கொள்கைகளையும் கைவிடுமாறு செய்வதற்கு வலிமை பெற்றது. இயேசுவின் கல்லறையைக் கண்டுபிடித்த மகான் இக்காலத்தின் தீர்க்கதரிசியாவார். இவரது தோற்றம் பற்றி பல்வேறு சமுதாயத் தீர்க்கதரிசிகளும் முன்னறிவிப்புச் செய்திருக்கிறார்கள். இயேசுவின் இரண்டாவது வருகையைப் பற்றிய தீர்க்கதரிசனம் இவரது வருகையால் நிறைவேறி விட்டது.

திருக்குர்ஆனில் கூறப்பட்டபடியும் உபாகமம் 18:18 ல் காணப்படும் மோசேயின் தீர்க்கதரிசனப்படியும், முஹம்மது நபி (ஸல்) அவர்கள் மோசேயைப் போன்றவராக இருந்தார்கள். இக்காலத்தின் தீர்க்கதரிசியாகிய அஹ்மது (அலை) அவர்கள் இயேசுவைப் போன்றவராக இருக்கிறார்கள். இயேசுவின் இரண்டாவது வருகையைப் பற்றிய தீர்க்கதரிசனத்தின்படி தோன்றியவர் இவரே.

## *மோசேயின் கல்லறை*

உபாகமம் 34:6ல் "இந்நாள் வரைக்கும் ஒருவனும் அவன் பிரேதக்குழியை அறியான்" என்று கூறப்பட்டுள்ளது. மேலும் மோசேயின் வாழ்க்கை முடிவு, இயேசுவின் வாழ்க்கை முடிவைப்போல கட்டுக்கதைகள் நிறைந்தது. "மோசே மக்களை விட்டுப் பிரிந்து சென்ற பின்னர் நீபோ மலையுச்சியில் எலியேசரையும் யோசுவாவையும் சந்திப்பதற்குச் சென்று கொண்டிருந்தார். அப்போது திடீரென ஒரு மேகம் அவர் மீது வந்து

நின்றது. அவர் மறைந்து விட்டார்.” உண்மை இவ்வாறிருக்கையில் அவரது அதி உன்னத நற்குணங்கள் காரணமாக அவர் ஒரு இறைவனாக மாறிவிட்டார் என்று மக்கள் சொல்லலாம் என்ற பயத்தினால் தாம் மரணித்துவிட்டதாக வேதாகமத்தில் அவர் எழுதி வைத்துச் சென்றார். **(Ant. iv.8 and 48)** பிற்காலத்தில் மோசே மரிக்கவில்லையென்றும், எலியாவைப் போல் பரலோகத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டார் என்றும் ஒரு நம்பிக்கை பரவி விட்டது.”[4] அவர் அடக்கப்பட்டுள்ள இடம் ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளாக, ‘அவரைப் போன்றவர்’ அதாவது திருத்தூதர் (ஸல்) அவர்கள் தோன்றி அதனைக் கண்டுபிடிக்கும் வரை யாருக்கும் தெரியாமலே இருந்தது. ‘மரணம் நெருங்கி வருவதையறிந்த மோசே, வாக்களிக்கப்பட்ட புனித நிலத்திலிருந்து கல்லெறி தூரத்திற்குள் உள்ள ஓர் இடத்திற்குச் செல்ல தன்னை அனுமதிக்குமாறு இறைவனிடம் வேண்டினார். அங்கு சென்று அவர் மரணமடைந்தார்” என்று அவர்கள் அருளினார்கள். அபூஹுரைரா என்ற அறிவிப்பாளர் கூறுகிறார்: “நான் அங்கு இருந்திருந்தால் வீதிக்குப் பக்கத்தில் பழுப்புநிற மணல்மேட்டின் அடிப்பாகத்தில் அமைந்துள்ள அவருடைய கல்லறையை உங்களுக்குக் காட்டியிருப்பேன் என்று திருநபியவர்கள் கூறினார்கள்.”[5]

பாலஸ்தீனத்திலுள்ள குறிப்பிட்ட இக்கல்லறை ‘கப்ர் நபி மூஸா’ (அதாவது மோசே தீர்க்கதரிசியின் கல்லறை) என்ற பெயரில் முஸ்லிம்களுக்குத் தெரிந்திருக்கிறது.★

இதே போன்று இயேசுவின் கல்லறையும் அதே காலமான இரண்டாயிரம் வருடங்களாக உலகத்தாருக்குத் தெரியாமலே

*★[5] டாக்டர் பிலிப் என்பவர் இவ்வாறு எழுதுகிறார்: “மோசேயின் கல்லறை சாக்கடலுக்கும் மார்ஸபாவுக்கும் இடையில் அமைந்துள்ளது. இது நபி மூஸாவின் கல்லறை என்று அடையாளமிடப்பட்டுள்ளது. ஈஸ்டர் நாட்களின் போது முஸ்லிம் யாத்திரிகர்கள் இங்கு கூடுகின்றனர். ஜெருசலேமிலுள்ள ஸெயின்ட் ஸ்டீபன்ஸ் கேட்-டிலிருந்து கெத்ரான் பள்ளத்தாக்கு வழியாக நபி மூஸாவின் கல்லறைக்கு ஊர்வலமாக மக்கள் செல்கின்ற அற்புத காட்சியை நான் கண்டேன்.”*

(‘Through Bible Lands’ - Page 303 London, James Nisbet & Co., 1888)





இருந்து, ‘இயேசுவைப் போன்றவரான’ வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (மேசியா) அஹ்மது (அலை) அவர்களாலேயே இயேசுவின் கல்லறை கண்டுபிடிக்கப்பட்டது. இப்போது ஆயிரக்கணக்கான மக்களால் இக்கல்லறை ‘கப்ர் நபி ஈஸா’ அதாவது தீர்க்கதரிசி இயேசுவின் கல்லறை என்று கருதப்படுகிறது. இது இறைவனுடைய செயலாக, நம்முடைய கண்களுக்கு ஈடு இணையற்றதாக இருக்கிறது. இக்காலத்தின் தீர்க்கதரிசியாகிய ஹஸ்ரத் அஹ்மத் (அலை) அவர்கள் ‘மஸீஹ் இந்துஸ்தான் மெயின்’ (இந்தியாவில் இயேசு) என்ற தமது நூலில் இவ்விஷயம் பற்றி விளக்கமாக ஆராய்ந்திருக்கிறார்கள். ஆயினும் எனது இந்த நூலின் அளவைக் கருத்தில் கொண்டு இந்த அரிய கண்டுபிடிப்பைப் பற்றிய சில விஷயங்களை மட்டுமே இங்கு குறிப்பிடுகிறேன்.

## *இஸ்ரவேலின் காணாமற்போன கோத்திரத்தார்*

சாலமோன் இறந்த பிறகுள்ள காலம் வரைக்கும் பன்னிரு கோத்திரத்தார்கள் ஒரு தலைமையின் கீழ் இணைந்தவர்களாக ஒரே கூட்டமாகவும் தொடர்ந்து இருந்து வந்தார்கள். பின்னர் இஸ்ரவேலின் பத்துக் கோத்திரத்தார், இஸ்ரவேல் வீட்டுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்து யெரொ பெயாமைத் தங்களுடைய ராஜாவாக்கினார்கள். இதே வேளையில் யூதா, பென்யமீன் ஆகிய இரு கோத்திரத்தார் மட்டும் ரெகொபெயாமுடைய ஆட்சியின்கீழ் இருந்து வந்தார்கள். (1 இராஜாக்கள் 12:16-21) பின்னர் அவ்விரு அரசாங்கங்களுக்கும் முழு எபிரேய சமுதாயத்திற்கும் நேரிட்ட துன்பங்களுக்கெல்லாம் கோத்திரத்தாரின் இப்பிரிவினையையே பிரதான காரணமாகக் கொள்ளலாம். ரூபானியர், காத்தியர், நப்தலி, மனாசேயின் பாதிக்கோத்திரம் ஆகியவர்களை முதன்முதலில் தில்காத் பில்நேசர் வந்து சிறையாகப் பிடித்துக் கொண்டு போனான். (1 நாளாகமம் 5:26, 2 இராஜாக்கள் 15:29) ... சில வருடங்கள் கழித்து அசீரியாவின் இராஜாவாகிய சல்மனாசார் சமாரியாவைக் கைப்பற்றி, அதனை அழித்து இஸ்ரவேல் வாசிகளில் எஞ்சியிருந்த கோத்திரத்தைப் பிடித்து யூப்ரெடீசுக்கு

அப்பால் கொண்டு போனான். அங்கு வாழ்ந்திருந்த மற்றவர்களை, தேசத்திற்குள் அனுப்பி நிலத்தை உழுது அவர்களுக்கே சொந்தமாக்கிக் கொள்ளும் பொருட்டு அனுப்பி வைத்தான். (2 இராஜாக்கள் 17:6, 24, 18:10,11) இத்துடன் இஸ்ரவேலின் பத்து கோத்திரத்தாருடைய அரசாங்கம் முடிவு பெற்றது. நாடு கடத்தப்பட்ட இந்தப் பத்து கோத்திரத்தார்களும் தங்களுடைய தாய் நாட்டுக்கு ஒருபோதும் திரும்பி வரவில்லை என்பது கிறிஸ்தவ மறைத் தந்தைமார் களிலும் விரிவுரை கூறுவோரிலும் **(interpretors)** பெரும் பகுதியினர் கொண்டுள்ள கருத்து. இதற்கு மாறாக மற்றவர்கள், அவர்கள் திரும்பி வரத்தான் செய்தார்கள் என்று எண்ணுகிறார்கள். அதே நேரத்தில் வரலாற்று நூற்களில் அவர்கள் திரும்பி வந்த விபரம் முழுமையாகவும் நிறைவு பெற்றதாகவும் இல்லையென்பதையும் ஆனால் இஸ்ரவேலர்களில் பெரும்பான்மையோர் அதன் பின்னரும் யூப்ரெடீசுக்கு அப்பால் தங்கியிருந்தார்கள் என்பதையும் அவர்கள் ஒப்புக் கொள்கிறார்கள்.[6]

ஆல்பிரடு ஈடெர்ஷீம் எழுதுவதாவது: “யூதர்கள் கிழக்கு நாடுகளுக்கு வெளியேறிச் சென்றதைக் குறித்துப் பொதுவாக இதனை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டியது மிகவும் முக்கியம். அதாவது யூதர்களில் மிகச் சிறுபான்மையினரே - மொத்தத்தில் ஏறக்குறைய 50,000 பேர்களே - முதலில் செருபாபெல் தலைமையிலும், பின்னர் எஸ்ரா தலைமையிலும் பாபிலோனில் இருந்து திரும்பி வந்தார்கள். (கி.மு.537 - கி.மு.459/8) அவர்கள் எண்ணிக்கையில் மாத்திரம் குறைந்தவர்களாக இருக்கவில்லை. யூதர்களில் மிகப்பெரும் செல்வந்தர்களும், மிகவும் செல்வாக்குப் பெற்றவர்களும் (அவர்களோடு தொடர்ந்து வராமல்) அங்கேயே தங்கிவிட்டார்கள். ஜோஸபஸ் சொல்லுவது போல **(Ant. 11,5)** - இவர் கூறுவதை ஃபிலோவும் அப்படியே ஒப்புக் கொள்கிறார் - இலட்சக்கணக்கில் மதிப்பிடக்கூடிய பெருந்தொகையான மக்கள் யூப்ரெடீசுக்கு அப்பாலுள்ள பிராந்தியங்களில் சென்று குடியமர்ந்தார்கள். நாடு கடத்தப்பட்ட யூதர்கள் மேலும் மேலும் அங்கு வந்து குடியேறுவதை சைரஸ் தடை செய்யுமளவுக்கு





பெர்ஷிய சாம்ராஜ்யத்தில் யூத மக்களின் கூட்டம் அடர்ந்து இருந்தது என்றும், இல்லையேல், (அவர்களின் வருகை காரணமாக) சொந்த நாட்டு மக்கள் முழுவதும் வெளியேற வேண்டியதுவரும் என்றும் பரம்பரைக் குறிப்பு ஒன்று கூறுகிறது. இவ்வளவு பெரிய, ஒன்றுபட்ட ஒரு கூட்டம் வெகு சீக்கிரத்தில் ஆளும் வர்க்கமாக ஆனார்கள். பாபிலோனியாவை நோக்கி வெளியேறிச் சென்ற கூட்டம், ஒவ்வொரு திசையிலும் விரிந்து பரந்து பரவியிருந்தது… … கிழக்குத் திசையில் இந்தியா வரையிலும் சென்றிருந்தது.” “இருப்பினும் பத்துக் கோத்திரத்தாரில் பெரும் பகுதியினர் இப்போது நம்முடைய காலத்திலிருப்பதைப் போலவே இயேசுவின் காலத்திலும் எபிரெயர் களுக்கு காணாமற் போனவர்களாகவே இருந்து வந்தார்கள்.”[7]

“எஸ்றாவின் நான்காம் புத்தகத்தில் (13:39-45) பத்துக் கோத்திரத்தார்களும் சல்மனாசார் காலத்தில் ராஜாவாக இருந்த ஹோசியாவால் யூப்ரெடீசு நதிக்குப் பிடித்துப் போகப்பட்டு, அது குறுகலாகப் பாய்ந்து செல்லும் இடத்திலிருந்து ஒன்றரை வருடங்கள் பிரயாணம் செய்து அப்ஸாரெத் என்றழைக்கப்படும் ஓர் இடத்துக்கு சென்றார்கள்.”[8] கி.மு.586ல் நெபுகாட்நசர் எருசலேமைப் புயலெனத் தாக்கிக் கொள்ளையடித்தான். புனித ஆலயத்தைத் தீக்கரையாக்கி பெருஞ் செல்வந்தர்களையும் செல்வாக்குள்ளவர் களையும் சிறைக் கைதிகளாகப் பாபிலோனுக்கு கொண்டு சென்றான். யூதா வாசிகளுக்கு 134 ஆண்டுகளுக்கு முன்னரே நாடு கடத்தப்பட்ட இஸ்ரவேலர்கள், மீண்டும் திரும்பிச் செல்லவே யில்லை. அவர்களுக்கு என்ன நேர்ந்தது என்பது ஒரு தெளிவற்ற ஊகமாகவே எப்போதும் இருந்திருக்கிறது. இனியும் எக்காலத்திற்கும் அது அப்படியேயிருக்குமென்றே நாம் கருதுகிறோம்.”[9]

## ***இந்தியாவில் இஸ்ரவேலர்கள்***

பத்துக் கோத்திரத்தார்களும் காணமாற்போய் பல்வேறு நாடுகளில் சிதறிப் போய்விட்டார்கள் என்பது மேலே கூறப்பட்ட மேற்கோள்களிலிருந்து தெள்ளத் தெளிவாக இருக்கிறது. நான்

எடுத்துக் கொண்ட பொருள் இந்தியாவை மட்டும் பொருத்ததாக இருப்பதால் இந்தியப் பகுதிகளில் இந்த காணாமற்போன கூட்டத்தார் தங்கி இருப்பதற்கு ஏதேனும் அடையாளம் இருக்கிறதா என்பதை நாம் பார்ப்போம்.

ஆப்கானியர்கள், காஷ்மீரிகள், பம்பாயிலுள்ள பனி - இஸ்ரவேலர்கள் ஆகியோர் இஸ்ரவேலரின் சந்ததியார் என்று தற்காலத்திய ஆராய்ச்சி காட்டியுள்ளது.

1) யூதக் கலைக்களஞ்சியத்தில் 'டிரைப்ஸ்' (கோத்திரத்தார்) என்ற தலைப்பின்கீழ் இப்படி எழுதப்பட்டிருப்பதை நாம் படிக்கலாம். "ஆபிரகாம் பாரிசால் என்பவர் கோஸான் நதியும் கங்கை நதியும் ஒன்றென அடையாளம் காட்டுகிறார். மேலும் இந்தியாவிலுள்ள பனி இஸ்ரவேலர்கள் காணாமற்போன பத்து கோத்திரத்தாரின் சந்ததியர்களே என்றும் கருதுகிறார். இருபத்தைந்து வருட காலமாக துருக்கியர்வசம் சிறைக் கைதியாக இருந்தவரும், பெஸ் வரைக்கும் சென்று அங்கிருந்து இந்தியாவுக்கும் சென்றவருமாகிய, மிலானைச் சேர்ந்த வின்செண்ட் என்ற ஒரு கிறிஸ்தவப் பயணி இந்தியாவில் சம்பாசன் நதியை பார்த்திருக்கிறார். கருஞ்சிவப்பு நிற பட்டுத் துணியில் உடையணிந்த பல யூதர்களைக் கண்டிருக்கிறார். அவர்கள் ஏழு அரசர்களால் ஆளப்பட்டார்கள். சுல்தான் சலீமுக்குக் கப்பம் செலுத்தும்படி அவர்களைக் கேட்டும் எந்த சுல்தானுக்கும் அரசருக்கும் அவர்கள் கப்பம் கட்டவில்லை."

### *ஆப்கானியர்கள்:*

ஆப்கானியர்களின் சொந்த பாரம்பரிய வழக்குப்படி, அவர்களைக்கூட காணமாற்போன பத்துக் கோத்திரத்தார்களாகவே அடையாளம் கண்டு கொள்ள வேண்டியதிருக்கிறது. நெபுகாட்நசர் தங்களை நாடு கடத்தி கோர் மலைக்கு விரட்டிவிட்டதாக அவர்கள் அறிவிக்கிறார்கள். அங்கிருந்துகொண்டு அவர்கள் அரேபிய யூதர்களுடன் எழுத்துத் தொடர்பு கொண்டு வந்தார்கள். அதன் விளைவாக அவர்கள் முஸ்லிம்களாக மதம் மாறினர். (மல்காம்





எழுதிய ஹிஸ்டரி ஆஃப் பெர்ஷியா 11,596 இலண்டன்,1815.) ஆப்கானியர்கள் இன்னும் தங்களை 'பனீ இஸ்ராயீல்' (இஸ்ரவேலரின் சந்ததியினர்) என்றே அழைக்கிறார்கள். அவர்களிடம் குறிப்பிடத்தக்க அளவு யூதர்களின் உருவத் தோற்றம் அமைந்திருந்ததாகவும் அறிவிக்கப் பட்டுள்ளது. தாங்கள் இஸ்ரவேலர் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்ற அவர்களது உரிமை வாதம் பெரும்பான்மை முஸ்லிம் எழுத்தாளர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஜி. மூர் என்பார் தாம் எழுதிய 'லாஸ்ட் டிரைப்ஸ்' என்ற நூலில் (பக்கம் 143-160, இலண்டன் 1886). ஆப்கானியர்களை பத்து கோத்திரத்தாராகவே அடையாளம் காட்டியிருக்கிறார்.

2) ஸர் ஹென்றி யூல் **K.C.S.I.** இவ்வாறு எழுதுகிறார்: "ஆப்கானிய சரித்திர ஆசிரியர்கள் தங்கள் மக்களை 'பனி இஸ்ரேல்' (இஸ்ரவேலின் குழந்தைகள் என்பதன் அரபுப்பதம் இது) என்றே அழைக்கிறார்கள். அவர்கள் சவுல் ராஜாவுக்கு எரேமியா என்றழைக்கப் படும் ஒரு மகனைக் கற்பித்து அவன் மூலமாக சவுல் ராஜாவிலிருந்து தோன்றியது தங்கள் பரம்பரை என்று வாதிடுகிறார்கள். எரேமியாவுக்கு ஆப்கானா என்றொரு மகனிருந்தான். ஆப்கானாவிட மிருந்து தோன்றிய எண்ணற்ற மக்கள் நெபுகாட்நச்சர் என்பவரால் வெளியேற்றப்பட்டு, ஹீராத்துக்குக் கிழக்கிலும் வடக்கிலுமுள்ள கோர் பேரோஸா மலைகளுக்குச் சென்றுவிட்டார்கள்."

3) ஜேம்ஸ் பி. பிரேஸர், 'ஹிஸ்டாரிக்கல் அன்டு டிஸ்கிரிப்டிவ் அக்கௌண்ட் ஆஃப் பெர்ஷியா அண்டு ஆப்கானிஸ்தான்' (பக்கம் 298, நியூயார்க், 1843) என்ற தமது நூலில் இவ்வாறு எழுதுகிறார்:

"அவர்களுடைய (ஆப்கானியர்களுடைய) பாரம்பரிய வழக்குப்படி, யூதர்களிலிருந்து தங்களின் பரம்பரை இறங்கியதாக அவர்கள் நம்புகிறார்கள். ஆப்கானிய வரலாற்று நூலொன்று பதினாறாம் நூற்றாண்டில் எழுதப்பட்டுப் பின்னர் பெர்ஷிய மொழியிலிருந்து பெயர்த்தெழுப்பட்டது. (நியமத்துல்லா என்பவர் எழுதிய, மொழி பெயர்ப்புப் குழுவினர் மொழி பெயர்த்தது).

இந்நூலில் சவுல் என்ற இஸ்ரவேல் ராஜாவுடைய மகனாகிய எரேமியாவின் குமாரன் ஆப்கானிடமிருந்து அவர்கள் தோன்றியதாகக் கூறப்பட்டுள்ளது. அவர்கள் அடிமைப்பட்டிருந்த காலத்தில் சிறைப்பிடிக்கப்பட்டு, அவர்களை வெற்றி கொண்டவனால் கோர், காந்தர், கஜ்னி ஆகிய மலைப்பகுதிகளில் குடியமர்த்தப்பட்டார்கள். அவர்கள் இஸ்லாம் மார்க்கத்தைத் தழுவும் வரை தங்களுடைய மதத்தின் தூய்மையைக் காப்பாற்றி வந்தார்கள்."

4) 'சிவில் அண்ட் மிலிடரி கெஜட்' (நவம்பர் 23, 1898) பத்திரிகையில் இதைப்பற்றி ஒரு கட்டுரை வெளியாகியிருந்தது. "ஆப்கானியர்கள் தங்களின் வம்ச பரம்பரை இஸ்ரவேல் கோத்திரத்தாரிடமிருந்து தோன்றியதென்று காட்டுகின்றார்கள்" என்று கட்டுரையாசிரியர் கூறுகிறார். அவர்களுடைய பெயர்கள் இஸ்ரவேல் கோத்திரத்துடைய பெயர்களாக இருப்பதை குறிப்பிட்டுவிட்டு பஸ்கா பண்டிகை கொண்டாடுவதை இன்னும் அவர்கள் கைக்கொண்டு வருகிறார்கள் என்பதையும் கூறிவிட்டு ஆசிரியர், "இவ்விதமாக ஆப்கானியர்கள் அநேகமாக இஸ்ரவேலர்களாகவே இருக்கக்கூடும். பின்னர் பழங்கால ராஜபுத்திர வகுப்பாருடன் கலந்து போயிருக்கலாம். ஆப்கானியர்களின் மூலம் எது என்ற பிரச்சனைக்கு இதுவே மிகப் பொருத்தமான விடையாகும் என்று எனக்குத் தோன்றுகிறது" எனக் கூறுகிறார். பின்னர் A.K. ஜான்ஸ்டன் கீழ்க்கண்ட பாரம்பரிய உண்மையை மேற்கோள் காட்டியிருப்பதாக அவர் கூறுகிறார். "நாதிர்ஷா பெஷாவருக்கு வந்து சேர்ந்த போது யூசுப் ஸை கோத்திரங்களின் தலைவர்கள் அவருக்கு எபிரேய மொழியில் எழுதிய ஒரு பைபிளையும், இன்னும் தங்களுடைய பழங்கால இறை வழிபாட்டில் உபயோகப்படுத்தப்பட்ட பலவிதமான பொருட்களையும் பரிசளித்தார்கள். இவை அம்மக்களால் நெடுங்காலமாகப் பாதுகாத்து வைக்கப்பட்டவையாகும். அவருடன் வந்திருந்த யூதர்கள் அந்தப் பொருட்களை உடனடியாக அடையாளம் கண்டுகொண்டனர்."





5) H.W. பெல்லூஸ் எழுதுகிறார்:

"இம்மக்களின் (ஆப்கானியர்) பாரம்பரிய நூல்களிலிருந்து புக்தநாசரால் (நெபுகாட்நசரால்) சிறைப்பிடித்துக் கொண்டு போகப்பட்ட காலத்தில் அவர்கள் வாழ்ந்து வந்த நாடு சிரியா என்றும் அவர்கள் பெர்ஷியா, மேதியா ஆகியவற்றின் பல்வேறு பாகங்களில் குடியேற்ற மக்களாக அமர்த்தப்பட்டார்கள் என்றும் தெரிகிறது. இவ்விடங்களிலிருந்து பிற்காலத்தில் ஏதோ ஒரு சமயத்தில் அவர்கள் கிழக்குப் பகுதியிலுள்ள மலைநாடாகிய கோருக்கு குடிபெயர்ந்து சென்றார்கள். அங்குள்ள மக்களால் அவர்கள் 'பனி ஆப்கன்' என்றும் 'பனி இஸ்ரேல்' என்றும் (அதாவது ஆப்கனின் குழந்தைகள் என்றும், இஸ்ரவேலின் குழந்தைகள் என்றும்) அழைக்கப்பட்டார்கள். சிறைப்பிடிக்கப்பட்ட இஸ்ரவேலின் பத்து கோத்திரத்தார்களும் பின்னர் தப்பிச் சென்று ஆர்சரேத் தேசத்தில் அடைக்கலம் புகுந்தார்கள் என்று எஸ்ரா தீர்க்கதரிசி உறுதி கூறியிருப்பது நம் கருத்தை ஆதரிப்பதாக இருக்கிறது. ஆர்சரேத் தேசமே, தற்காலத்திலுள்ள ஹாஸராஹ் தேசமென்று அடையாளம் காட்டப்படுகிறது. இந்த ஹாஸராஹ் தேசத்திலேயே கோர் ஒரு பகுதியாக அமைந்திருக்கிறது. 'தபகாத்தி நாஸிரி'யில் ஷான்சாபி வம்சத்தாரின் காலத்தில் அந்நாட்டில் பனி இஸ்ரேல் என்றழைக்கப்பட்ட ஒரு மக்கள் கூட்டம் வாழ்ந்திருந்ததாகவும், அவர்களில் சிலர் சுற்றியுள்ள நாடுகளோடு பரவலாக வர்த்தகத்தில் ஈடுபட்டிருந்ததாகவும் குறிப்பிடப் பட்டுள்ளது."[10]

6) டாக்டர் ஆல்பிரெட் ஈடெர்ஷீம் இவ்வாறு எழுதுகிறார்:

"தற்கால ஆராய்ச்சியின் விளைவாக, நஸ்டோரியர் களையும் பின்னர் ஏறத்தாழ முழு அளவில் திருப்திப்படுத்தும் ஆதாரங்களை (எவ்வளவு ஆதாரங்களால் முடியுமோ அவ்வளவையும்) கொண்டு ஆப்கானியர்களையும் தற்கால ஆராய்ச்சிகள் காணமாற்போன கோத்திரத்தாரின் வாரிசுகள் என்று சுட்டிக்காட்டியுள்ளன."[11]

7) கலோனல் ஸர் தோமஸ் H. ஹோல்டிக் பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் பதினோராவது பதிப்பில் ஆப்கானிஸ்தானைப் பற்றி எழுதும்போது இப்படி எழுதுகிறார்: "யூதர் குலத்தின் அழகான அங்க அமைப்பை இப்பெண்கள் பெற்றிருக்கிறார்கள். (கடைசியாக கூறப்பட்ட குணம் ஆண்களைப் பொருத்த வரையில்கூட உண்மையாகவே இருக்கிறது)."[12]

8) காஷ்மீர்வாசிகள் : வெனிஸ் நகரவாசியான M. மனோச்சி என்பார் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக சக்கரவர்த்தி ஔரங்கசேபின் பிரதான மருத்துவராக இருந்தார். மொகலாய சாம்ராஜ்யத்தின் ஆவணங்களை நெருங்கிப் பார்த்திருந்ததாலும், தாம் தேர்ந்தெடுக்கக் கூடிய எதனையும் போர்த்துக்கீசிய மொழியில் பெயர்த்து எழுதுவதற்கு அனுமதிக்கப்பட்டிருந்ததாலும், அவர் அறிவிக்கும் விஷயத்தின் அதிகாரப்பூர்வமான தன்மையை யாரும் மறுத்துரைக்க இயலாது. தாம் எழுதிய 'தி ஹிஸ்டரி ஆஃப் கிறிஸ்டியானிட்டி இன் இண்டியா' (இலண்டன் 1839) என்ற நூலில் காஷ்மீர் வாசிகளைப் பற்றிய விளக்கத்தை அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளிலிருந்து மேற்கோள் காட்டி எழுதுகிறார்:

"இந்த (நான்காம்) அத்தியாயம் எந்தப் புத்தகத்திலிருந்து பிரதானமாகத் தொகுக்கப்பட்டிருக்கிறதோ அந்த நூலின் அதன் ஆசிரியர், சில காஷ்மீரிகள் அக்பருடைய அரசவைக்கு வருகை தந்ததைப் பற்றியும், அதற்கான சூழ்நிலைகளைப் பற்றியும் விவரிக்கிறார். அந்த நிகழ்ச்சி, நெடுநாட்களாகக் காணாமற்போன இஸ்ரவேலின் பத்து கோத்திரத்தாரைக் கண்டுபிடிப்பதில் தங்களுக்குள்ள ஆவலை பற்பல நேரங்களில் வெளியிட்டிருப்பவர் களுக்கு விசேஷமான விறுவிறுப்பை உண்டாக்கும். அக்பரின் அரசவைக்கு வந்த ஒரு யூதனைப்பற்றி அவர் குறிப்பிடுகிறார் என்பதை நாம் கண்டோம். அவர் மேலும் கூறுவதாவது: சல்மானாசாரால் சிறையெடுத்துக்கொண்டு செல்லப்பட்ட யூதர்கள் காஷ்மீரில் குடியேறினார்கள் என்றும் கூறக்கூடிய ஒரு பழைய பாரம்பரிய வழக்கு இருக்கிறது. காஷ்மீரில் யூத மதத்தின்





அடையாளம் எதையும் நாம் காணவில்லை என்றால்கூட, அங்கிருப்பவர் எல்லாரும் புற சமயத்தாராகவோ முகம்மதியராகவோ இருப்பினும், இஸ்ரவேல் பரம்பரையிருந்து தோன்றிய ஒரு குலத்தவர் அங்கு இருந்திருப்பதற்கு பற்பல ஆதிகால அத்தாட்சிகள் உள்ளன. இப்போதுள்ள காஷ்மீர் வாசிகளின் முகச்சாயலும், அவர்களது தோற்றமும் யூதர்களுக்கே உரிய அடையாளங்களாய் இருக்கின்றன. இவையே மற்றெல்லா மனிதர் களிடமிருந்தும் யூதர்களைப் பிரித்துக் காட்டுகின்றன. அங்கு மோசே என்ற பெயர் சர்வ சாதாரணமாக வழங்குகின்றது. இன்றும் நாம் காணக் கூடிய சில பழங்கால ஞாபச் சின்னங்களும் அவர்கள் இஸ்ரவேலி லிருந்து வந்த மக்கள் என்பதை வலியுறுத்துகின்றன."[13]

291 ஆம் பக்கத்திலுள்ள அடிக்குறிப்பில் சங்கைக்குரிய ஹூ அவர்கள், காஷ்மீரிகளின் பொதுப்படையான தோற்றம், உடை, பழக்கவழக்கங்கள் ஆகியவை மிஸ்டர் பார்ஸ்டெரைப் பெரிதும் அதிர்ச்சி கொள்ள செய்து விட்டது. இவ்விஷயத்தைப் பற்றி அவர் முன்னதாகவே ஏதும் அறியாதிருந்தும் யூதர்களின் கூட்டத்திற்குள் திடீரென்று வந்து நிற்பதாகவே அவர் எண்ணும்படி நேர்ந்தது என்று கூறுகிறார். விவரங்களுக்கு, 'பார்ஸ்டெர்ஸ் டிராவல்ஸ்' என்னும் நூலைப் பாருங்கள்.

9) டாக்டர் A. கெய்த் ஜான்ஸ்டன் தாம் எழுதிய 'டிக்ஷனரி ஆஃப் ஜியோகிராஃபி' என்னும் நூலில் "காஷ்மீர்வாசிகளில் ஆடவர் நன்கு வளர்ந்த, வலிமைமிக்க உடலமைப்பைக் கொண்டவர்களாகவும் பெண்டிர் முழு வளர்ச்சி பெற்ற யூதர்களை ஒத்த வளைந்த மூக்கோடும், உடலமைப்போடும் மிக்க அழகாகவும் தோற்றமளிக்கிறார்கள்."[14] என்று எழுதியுள்ளார்.

10) (ஆர்ச்சிபால்டு கான்ஸ்டபிள் மொழிபெயர்த்த) 'டிராவல்ஸ் இன் மொகல் எம்பயர்' என்ற நூலில் அதன் மூல ஆசிரியர் டாக்டர் பிரான்காய்ஸ் பெர்னியர் இவ்வாறு எழுதியுள்ளார்:

"பைரி - பின்ஜோலே மலைகளைக் கடந்து சென்று காஷ்மீர் ராஜ்யத்தில் நுழைந்து, அதன் எல்லையோரக் கிராமவாசிகளைக்

கண்டதும், அவர்கள் யூதர்களைப் போலவேயிருப்பதாக என் மனதில் பட்டது. அவர்களுடைய முகச்சாயல், நடைமுறைகள் மட்டுமல்லாது, ஒவ்வொரு நாட்டு மக்களையும் ஒரு பயணிக்கு தனித்தனியே இனம் பிரித்துக் காட்டக்கூடிய - வர்ணனைக்கு அப்பாற்பட்ட - சில குறிப்பிட்ட இயல்புகள், இவையாவும் அந்தப் பழங்குடி மக்களுக்கே (யூதர்களுக்கே) உரியனவாகத் தோன்றின. நான் காஷ்மீர் வருவதற்கு நெடுங்காலம் முன்னரே, இந்தக் கிராமவாசிகள் யூதர்களை ஒத்த தோற்றத்தை பெற்றிருப்பதைப் பற்றி இயேசு சபை திருத்தந்தை மார்களும் மற்றும் பல ஐரோப்பியர்களும் குறிப்பிட்டிருக்கிற காரணத்தால், நான் சொல்லக்கூடிய விஷயத்தை வெறுங்கற்பனை என்று நீங்கள் கூற இயலாது."

தம்முடைய கருத்துக்கு இசைவாக ஒருசில ஆதாரங்களைக் கூறிய பின்னர், அவர் மேலும் இவ்வாறு சொல்லுகிறார்: "யூதர்கள் காஷ்மீரில் தங்களுடைய குடியிருப்பை அமைத்துக் கொண்டிருக்கலாம் என்பதை நான் மறுப்பதற்கில்லை என்பதை நீங்கள் அறிவீர்கள். பந்நெடுங்காலம் கழிந்த பின்னர், அவர்களுடைய மதத்தின் தூய்மை பங்கப்பட்டு உருவ வழிபாடு நடக்குமளவுக்கு மதம் சீர்குலைந்து விடவே மற்ற புற சமயத்தாரைப்போல் இவர்களும் முஹம்மது கொண்டு வந்த சமயக் கோட்பாடுகளைப் பின்பற்றுமாறு தூண்டப்பட்டனர். ஏராளமான யூதர்கள் பெர்ஷியாவிலும், இந்துஸ்தானி, கோவா, கொச்சி ஆகிய பகுதிகளிலும் குடியேறிவிட்டார்கள் என்பது நிச்சயம்."[15]

அடிக்குறிப்பில், மொழி பெயர்ப்பாளர் இவ்விதம் கூறுகிறார்: "காஷ்மீர் மக்கள் அநேகரிடத்தில் யூத மக்களுக்குரிய அங்க லட்சணங்கள் இருப்பதைத் தற்காலப் பயணிகளில் பலர் கவனித்திருக்கிறார்கள். அல்பெரூனி என வழங்கப்பெறும் முஸ்லிம் வரலாற்றாசிரியர், (கி.பி.973ல் பிறந்தவர்) காஷ்மீரைப் பற்றி வர்ணிக்கையில் அதன் குடிமக்களைப் பற்றி இவ்விதம் கூறுகிறார்: 'அவர்கள் தங்கள் நாட்டினுடைய இயற்கையரணைப் பற்றிப் பெரிதும் ஆவலுடையவர் களாக இருக்கிறார்கள். ஆகவே நுழை வாயில்களிலும், அவற்றை நோக்கி வரும் வீதிகளிலும் தக்க





பாதுகாப்பைச் செய்து வைப்பதில் எப்பொழுதும் அதிகக் கவனம் செலுத்துகிறார்கள். அதன் விளைவாக, அவர்களோடு எவ்வித வர்த்தகத் தொடர்பும் வைத்துக் கொள்ளுவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. முற்காலத்தில், வெளிநாட்டுக்காரர்களில் ஒருவர் அல்லது இருவரைத்தான் தங்கள் நாட்டிற்குள் நுழைவதற்கு அனுமதித்தார்கள். அதுவும் குறிப்பாக யூதர்களைத்தான் அனுமதித்தார்கள். ஆனால் தற்காலத்தில் தங்களுக்கு நேரிடையாகத் தெரியாத எந்த ஓர் இந்துவையும் அவர்கள் தங்கள் நாட்டிற்குள் நுழைய விடுவதில்லை. மற்றவர்கள் நுழைவது இதைவிடச் சங்கடமே." (டாக்டர் எட்வர்டு ஸி. ஸாசாவு, இலண்டன் 1888, ஆங்கிலப் பதிப்பு - வால்யூம் I - பக்கம் 206.)

11) சித்ரலில் 1893-94ல் அரசியல் முகவராகவும் 1902-04ல் திபெத்தில் பிரிட்டீஷ் கமிஷனராகவும், 1906-09ல் காஷ்மீர் ரெஸிடெண்ட்டாகவும் இருந்த ஸர் ஃபிரான்சிஸ் யங்ஹஸ்பண்ட் என்பார் எழுதுவதாவது:

"சாதாரண அழகு ரசணையுள்ள ஒரு பார்வையாளர் ஆறு, வீதி அல்லது தெருவழியாகப் போகும்போது எத்தனையோ அழகிய பெண்களைப் பார்க்கிறார். அவர்களில் நல்ல அமைப்புள்ள புருவங்களோடும், பொதுவாக யூதத் தோற்றத்தோடும் உள்ளத்தைத் தொடக்கூடிய அழகோடும் கூடிய பெண்களை அவர் அடிக்கொருதரம் பார்ப்பது உறுதி." (பக்கம் 125)

"மலையடிவாரத்தில் அமைந்திருக்கும் அழகிய குக்கிராமங்களின் தலைவர்களுக்கிடையில் காஷ்மீர் முஹம்மதியர் களைக் காணலாம். பழங்கால இஸ்ரேலியப் பெருந்தலைவர்களை நாம் எவ்வாறு நமக்குள் கற்பனை செய்து பார்ப்போமோ அதே வகையில் அழகிய வயது முதிர்ந்த கோத்திரத் தலைவர் போன்ற ஆட்களை அங்கு கண்டு கொள்ளலாம். இந்தக் காஷ்மீரிகள் இஸ்ரவேலின் காணாமற்போன கோத்திரத்தாலிருந்து தோன்றியவர்கள் என்று உண்மையிலேயே சிலர் கூறுகிறார்கள். இதற்குச் சரியான ஆதாரமில்லாவிடினும், இதனை நான் ஏற்றுக் கொள்ள வேண்டும்."

அஹ்மதிய்யா இயக்க நிறுவனரின் அறிவிப்பை அதாவது, இயேசு சிலுவையில் மரிக்கவில்லை. ஆனால் அவர் உயிருடன் கீழேயிறக்கப்பட்டு அங்கிருந்து மறைந்து சென்று, காஷ்மீரை அடைந்து அங்கேயே உயிர் துறந்து ஸ்ரீநகரில் அடக்கப்பட்டார் என்ற கோட்பாட்டைக் கூறிய பின்னர் ஸர் பிரான்சிஸ் மேலும் கூறுவதாவது:

“இத்தகைய திட்டவட்டமான யூதத்தோற்றத்தோடு மக்கள் (காஷ்மீரிகள்) இருக்கும்போது, இப்படிப்பட்ட தத்துவம் ஒன்று இருந்துவருவது மிகவும் ஆச்சரியமானதே. நான் கூறியதைப் போலவே, காஷ்மீரில் எல்லா இடங்களிலும் - அதிலும் குறிப்பாக மேட்டுப்பாங்கான கிராமங்களில் - பைபிளில் சொல்லப்பட்டதைப் போன்ற தோற்றமுடைய மனிதர்களைக் காணலாம். இவ்விடங்களில் இஸ்ரவேல் மேய்ப்பன் அவனுடைய மந்தைகளை மேய்த்து கொண்டிருப்பதை எந்த நாளிலும் காணமுடியும்.”[16]

இந்த அபிப்பிராயங்கள் - இவற்றில் சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் வெளியிடப்பட்டவை - காணாமற்போன பத்துக் கோத்திரத் தாரைச் சேர்ந்தவர்கள் காஷ்மீரில் குடியேறவே செய்தார்கள் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன. கடைசி இரண்டு அபிப்பிராயங்களும் இரண்டு கிறிஸ்தவர்கள் வெளியிட்டவை யாகும். தற்செயலாக இவ்விருவருடைய பெயர்களும் ஒன்றுபோலவே இருக்கின்றன. ஒருவர் பிரான்காய்ஸ் என்ற பெயருடையவர்; இவர் பிரெஞ்சு தேசப் பயணி. மற்றவர் பிரான்ஸிஸ்; இவர் இந்தியாவில் குறிப்பிட்ட இந்தப் பகுதிகளில் உள்நாட்டு அரசாங்க நிர்வாகத்திலும், பட்டாளத்திலும் பணியாற்றிய ஆங்கில உயர் அதிகாரியாவார்.

ஃபிரான்காய்ஸுடைய அபிப்பிராயம், ஸ்ரீநகரில் இயேசுவின் கல்லறை கண்டுபிடிக்கப்படும் முன்னரும், பிரான்சிஸுடைய அபிப்பிராயம் கல்லறை கண்டுபிடிக்கப்பட்ட பின்னரும் வெளியிடப் பட்டவையாகும். ஆயினும் இருவரும் காஷ்மீரிகள் இஸ்ரவேல் சந்ததியினரைப் போன்று மிகப்





பொருத்தமாகத் தோன்றுகிறார்கள் என்றே ஒன்றுபட்டுக் கூறுகிறார்கள். உண்மையில், ஸர் பிரான்சிஸும், எம். மனோச்சியும் குறிப்பிட்டுள்ளதைப் போல, அவர்கள் இஸ்ரவேலர்களின் காணாமற்போன பத்துக் கோத்திரத்தாரைச் சேர்ந்தவர்களே.

ஆப்கானியர்களும் காஷ்மீரிகளும் முகச்சாயலில், உடலமைப்பில், உடை உடுத்துவதில் மற்றும் சில பழக்கவழக்கங்களில் யூதர்களுடன் ஒன்றுபட்டிருப்பதோடு அவர்கள் இஸ்ரவேல் சந்ததியினரே என்பதை விளக்கும் மற்றொரு பலமிக்க, மனநிறைவு தரக்கூடிய அத்தாட்சியும் இருக்கிறது. தம்முடைய நாட்டைத் துறந்து மற்றொரு நாட்டில் குடியேறுபவர்கள் தங்களின் புதிய இல்லங்கள், நகரங்கள், பகுதிகள் ஆகியவற்றிற்குத் தங்கள் தாய்நாட்டிலுள்ள பழைய நகரங்களின் பெயரையும், கோத்திரத் தலைவர்களின் பெயர்களையும் சூட்டுவார்கள் என்பது யாவரும் அறிந்த உண்மை. ஐரோப்பிய குடியேற்ற நாடுகளாகிய கனடாவும், ஆஸ்திரேலியாவும் மற்ற நாடுகளும் இந்த உண்மையை உறுதிப்படுத்துகின்றன. இது ஒவ்வொரு நாட்டிற்குமுரிய பொதுவான பழக்கமாகும். காஷ்மீரிலும், ஆப்கானிஸ்தானிலும் குடியமர்ந்த காணாமற்போன பத்துக் கோத்திரத்தைச் சேர்ந்த மக்களாலும் இதே விதமான தாய்நாட்டுப் பற்று வெளிப்படுத்தப் பட்டிருப்பதை நாம் காண்கிறோம். அவர்கள் தங்களுடைய பெயர் மாத்திரம் அல்லாமல் தங்களுடைய கோத்திரங்களுக்கும், மலைகளுக்கும், ஆறுகளுக்கும் தங்களுடைய கோத்திரத் தலைவர்களின் பெயரைச் சூட்டினார்கள். உதாரணமாக மூஸாகேல் (மூஸாவின் கோத்திரங்கள்), சுலைமான் சாய் (சுலைமான் கோத்திரம்), தாவூத் சாய் (தாவூத் கோத்திரம்), யூசுப் சாய் (யூசுப் கோத்திரம்), கோஹி சுலைமான் (சுலைமான் மலை), தக்தி சுலைமான் (சுலைமான் அரியணை), காபூல் ஆறு போன்ற பெயர்களைக் கூறலாம். மேலும் எடுத்துக்காட்டாக, அவர்களுடைய நகரங்களின் சில பெயர்களைக் கீழே தந்திருக்கிறேன். இப்பெயர்கள் சிரியா நாட்டு நகரங்களின் பெயர்களுடன் ஒத்திருப்பதைக் காணுங்கள்.

| ஆப்கானிஸ்தான், காஷ்மீரில் வழங்கும் பெயர்கள் | சிரியாவில் வழங்கும் பெயர்கள் | ஆதாரம் |
|---|---|---|
| காபூல் (ஆப்கானிஸ்தானின் தலைநகர்) | காபூல் | I ராஜாக்கள் 9 : 13 |
| சீதா (எல்லையில் அமைந்த நகரம்) | சீதோன் அல்லது சீதான் | நியாயாதிபதிகள் 18 : 28 |
| ஹிம்ஸ் (லடாக்குக்கு அருகில்) | ஆமாத் | எண்ணாகமம் 13 : 21 |
| ஹாஸராஹ் | ஆஸரோத் | எண்ணாகமம் 11 : 35 |
| கில்கித் | கொல்கொதா | மத்தேயு 27 : 33 |
| திபெத் | திப்பாத் (திப்காத்) | I நாளாகமம் 18 : 8 |
| லடாக் | லாதா | I நாளாகமம் 4 : 21 |
| லேஹ் | லேகி (ஒரு மாவட்டம்) | நியாயாதிபதிகள் 15 : 9 |

இந்தப் பெயர்களும், பைபிளில் காணப்படும் மற்றப் பெயர்களும் இன்னும் வழங்கி வருவதிலிருந்து, இந்தியாவின் இந்தப் பகுதிகளில் இஸ்ரவேலர்கள் வாழ்ந்தேயிருந்தார்கள் என்பது தெரிய வருகிறது.

(ஆயிரத்துக்கும் மேற்பட்ட வருடங்களுக்கு முன்னால் தொகுக்கப்பட்ட ஷீயா வகுப்பினருடைய பாரம்பரிய நூலாகிய) யூஸுல் கா∴பியில் (பக்கம் 334) - காஷ்மீரில் ஒரு மன்னர் வாழ்ந்திருந்ததாகவும் அவரது அரசவையிலிருந்த நாற்பது பிரதானிகளும் தௌராத்தை அதாவது மோசேயின் நியாயப் பிரமாணத்தைப் பற்றிய ஞானத்தில் தேர்ந்திருந்ததாகவும், அவர்கள் சுவிசேஷம், சங்கீதம் மற்றும் ஆபிரகாமுடைய வேதநூற்களையும் வாசிப்பது வழக்கமென்றும் சொல்லக்கூடிய ஒரு பழங்கதை இருக்கிறது. முஹம்மது நபி (ஸல்) தோன்றியதைக் கேள்வியுற்று அவர்கள் ஓர் ஒற்றனையோ அல்லது தூதுவனையோ அனுப்பினர். பின்னர் அதன் பயனாக இவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

12) மும்பையிலுள்ள இஸ்ரவேல் சந்ததியினர்: மும்பை மாநிலத்திலுள்ள பனி இஸ்ரவேலர்களும், இஸ்ரவேலர்களின்





சந்ததியினரே. அவர்கள் இயேசுவுக்கு நெடுங்காலம் முன்னரே இந்தியாவைத் தங்களுடைய இல்லமாகக் கொண்டுவிட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. இந்த சமுதாயத்தினரைப் பற்றி திரட்டப்பட்ட விளக்கங்கள் ‘தி ஹிஸ்டரி ஆ∴ப் பனீ இஸ்ரேல்’ என்ற பயன்மிக்க நூலொன்றில் தரப்பட்டுள்ளது. இப்புத்தகம் ஹகிம் சாமுவேல் கெஹிம்கார் (1830-1899) என்பவரால் எழுதப்பட்டு 1937ல் பாலஸ்தீனத்தில் தெல்அவிவ் நகரில் பிரசுரிக்கப்பட்டது. அநேக வெளிநாட்டு எழுத்தாளர்கள் இந்தச் சமுதாயத்தாரைப் பற்றிக் கூறும் பல்வேறு விளக்கங்களை இந்நூலின் ஆசிரியர் முதலில் தருகிறார்: அவர் எழுதுவதாவது:

**i)** “1838ல் ராயல் ஏசியாடிக் சொசைட்டியின் பம்பாய் பிரிவினரால் நடத்தப்பட்ட அதன் வருடாந்திர விழாவில் காலஞ்சென்ற டாக்டர் வில்சன் ஒரு சிறு உரையாற்றினார். அவ்வுரையானது ‘லேண்ட்ஸ் ஆ∴ப் தி பைபிள்’ என்ற புத்தகத்தில் பதிப்பிக்கப்பட்டது. பல்லாண்டு காலத்திற்கு முன்னரே, இந்நாட்டில் பனி இஸ்ரவேலர்கள் குடியேறி விட்டார்கள் என்பதை அதில் எடுத்துக்காட்டி, அவர்கள் இஸ்ரவேலின் காணமாற்போன பத்து கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் என்ற கருத்தை அவர் தெரிவித்திருக்கிறார். ஆனால் 1866ல் பதிப்பிக்கப்பட்ட அவருடைய ‘அப்பீல் ∴பார் தி கிறிஸ்டியன் எஜுகேஷன் ஆ∴ப் தி பனி இஸ்ரேல்’ என்ற நூலில், அவர் தம்முடைய பழைய கருத்தை கைவிட்டுவிட்டார். மிகவும் சமீபகாலத்தில் வெளிவந்துள்ள அவருடைய புத்தகத்தில் கிறிஸ்தவ சகாப்தம் ஆறாம் நூற்றாண்டில் பனிஇஸ்ரவேலர் களின் முன்னோர்கள் ஏமனிலிருந்து அல்லது அரேபிய பெலிக்சிலிருந்து வந்தார்கள் என்று குறிப்பிட்டிருக்கிறார்.”

**ii)** “இரண்டாவது இஸ்ரேல் ஜோஸப் பெஞ்சமின் என்பவர் 1859ல் ஹனோவரில் பிரசுரிக்கப்பட்ட ‘எய்ட் இயர்ஸ் இன் ஏசியா அண்ட் ஆ∴ப்ரிக்கா’ (1846-1855) என்ற தமது நூலில் பனி இஸ்ரவேலர்களைப் பற்றியும் எழுதியிருக்கிறார். இவர் ஏறக்குறைய முழு அளவில் டாக்டர் வில்சன் அவர்களையே

பின்பற்றி கருத்துத் தெரிவித்திருக்கிறார். இவர், பனி இஸ்ரவேலர்கள் அசல் யூதர்களே என்று வலியுறுத்துவதோடு இஸ்ரவேல் நாட்டின் கடைசி மன்னனாகிய ஹோசியாவின் காலத்தில், அசீரியர்களால் சிறைபிடித்துச் செல்லப்பட்ட பத்து கோத்திரத்தாரின் நேரான வம்சாவழியினர் என்றும் கூறுகின்றார்."

இதற்குப் பிறகு ஆசிரியர், பனி இஸ்ரவேலர்களின் ஆரம்பகால வரலாற்றிலிருந்து ஆரம்பித்து இஸ்ரவேல் அரசாட்சியும் யூதாவின் அரசாட்சியும் வீழ்ச்சியுற்றதற்குப் பின்னர், மீதியிருந்த மக்கள் மாத்திரம் பாலஸ்தீனத்தில் தங்கியிருந்தார்கள் என்று கூறுகிறார். டாக்டர் ஐசக் எம். வொய்ஸ் அவர்களின் கூற்றுப்படி, "நாட்டைவிட்டு வெளியேறிச் சென்ற எபிரெயர்களில் ஒரு சிலர் எதியோப்பியா, அரேபியா, இந்தியா, சைனா ஆகிய நாடுகளுக்கும் சென்றார்கள்.... முந்திய இஸ்ரவேல் அரசாட்சியிலும், யூதா அரசாட்சியிலும் வாழ்ந்திருந்த எபிரெய மக்களில் ஒரு பெருங்கூட்டம் மேதிய பெர்ஷிய சாம்ராஜ்யத்தில் இப்போது வாழ்ந்து வரலாயினர்"... "இந்த நேரத்தில் இந்தியாவுக்குக் குடிபெயர்ந்து வந்த எபிரெயர் கூட்டத்தில், தற்போது மலபார் கடற்கரையோரத்தில் வாழ்ந்துவரக்கூடிய யூத சமுதாயத்தின் முன்னோர்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். 'வெள்ளை யூதர்கள்' அங்கு வந்து சேர்ந்த பின்னர் மலபார் கடற்கரையில் வசித்த யூத சமுதாயத்தினர் கறுப்பு யூதர் என்று வழங்கப்படலாயினர்."

மும்பை மாநிலத்திலுள்ள பனி இஸ்ரவேலர்கள் கையாண்டு வரும் யூதப் பழக்கவழக்கங்கள், விருந்துகள் மற்றும் பல விஷயங்களைக் குறித்துக் கூறிய பின்னர் ஆசிரியர், "கிறிஸ்தவ சகாப்தத்திற்கு ஏறத்தாழ 175 ஆண்டுகளுக்கு முன்னால்... பனி இஸ்ரவேலர்களின் முன்னோர்கள் பாலஸ்தீனத்திலிருந்து நேரடியாக வந்தார்கள் என்ற நமது திட்டவட்டமான முடிவை நாம் மேலே கூறியுள்ளோம்" என்கிறார்.





"முன்னால் குறிப்பிட்டிருந்தபடி பனி இஸ்ரவேலர்களின் முன்னோர்கள் ஏமனிலிருந்தோ அல்லது வேறு எங்கிருந்தோ ஏறக்குறைய 1200 ஆண்டுகளுக்கு முன்னால் வந்திருந்தால், இரண்டாவது தேவாலயம் அழிக்கப்பட்டதிலிருந்து, மற்ற நாடுகளிலுள்ள யூதர்கள் எவ்வாறு நரபலியளிப்பதை நிறுத்தி விட்டார்களோ அதே போன்று இவர்களும் நரபலியளிக்கும் வழக்கத்தை முன்னதாகவே கைவிட்டிருப்பார்கள். மேலும் முதல் தேவாலயம் அழிக்கப்பட்ட காலத்தில் சிறையெடுத்துச் செல்லப்பட்ட எழுபது ஆண்டுகள் முடிந்ததும் திரும்பி வராத யூதர்கள் அந்த வழக்கத்தை ஏற்கனவே உதறிவிட்டார்கள். ஆனால், ஞாபகத்திற்கு அப்பாற்பட்ட காலத்தி லிருந்து இந்தியாவிலுள்ள பனி இஸ்ரவேலர்களிடம் இவ்வழக்கம் நடைமுறையிலிருந்து வந்திருக்கிறது என்ற விஷயம் இரண்டாவது தேவாலயம் அழிக்கப்படாமல் நல்ல நிலையில் இருந்த காலத்தில் பனி இஸ்ரவேலர்களின் முன்னோர்கள் திட்டவட்டமாக பாலஸ்தீனத்தில் இருந்தார்கள் என்பதையும், அவ்வாலயம் அழிக்கப் படுவதற்கு முன்னர் ஏதோ ஒரு நேரத்தில் அவர்கள் பாலஸ்தீனத்தை விட்டு வெளியேறிவிட்டார்கள் என்பதையும் நிரூபிக்கின்றது."[17]

இயேசு தோன்றுவதற்கு நெடுங்காலத்திற்கு முன்னரே, இஸ்ரவேலர்களின் காணாமற்போன கோத்திரத்தாரில் பெரும் பகுதியினர் வடக்கு, வடமேற்கு, தெற்கு, தென்மேற்கு இந்தியப் பகுதிகளில் வாழ்ந்து கொண்டிருந்தார்கள் என்பதை இதன் மூலம் நாம் அறிந்து கொள்ளுகிறோம்.

## இயேசு வருகையின் நோக்கம்

இயேசு, இஸ்ரவேலர்களின் மேசியாவாகவே இருந்தார். இவ்வுண்மையை அவர் தெளிவான வார்த்தைகளில் அறிவித்திருக்கிறார். "காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு அனுப்பப்பட்டேனேயன்றி, மற்றபடியல்ல..."[18] 'காணாமற்போன' என்ற பதத்திற்கு இரு வகைகளில் பொருள் கொள்ளலாம். (1) அதன் சொற்பொருள் (2) உவமானப் பொருள்.

ஆகவே இப்பதத்தை உவமானப் பொருளிலும், அதே போன்று சொற்பொருளிலும் அர்த்தப்படுத்தி காணாமற்போன கோத்திரத்தாருடன் இணைத்துப் பார்க்கலாம். நூற்றாண்டு காலமாக அவர்கள் தங்களின் புனித பூமியிலிருந்து வெகு தொலைவில் இருந்து வந்திருக்கிறார்கள். ஆகவே, "காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்குப் போங்கள்"[19] என்று இயேசு தமது சீடர்களுக்குப் பணித்ததில் ஆச்சர்யம் ஒன்றுமில்லை. இஸ்ரவேலர்களை விட்டுக் காணாமற்போனவர்களைத் தேடிக்கொண்டு தாம் போகப்போவதாகவும், அவர்களைக் கண்டுபிடிக்கப் போவதாகவும் இயேசு முன்னறிவிப்புக்கூட செய்திருக்கிறார். 'இந்தத் தொழுவத்திலுள்ளவைகளல்லாமல் வேறே ஆடுகளும் எனக்கு உண்டு; அவைகளையும் நான் கொண்டுவர வேண்டும். அவைகள் என் சத்தத்துக்குச் செவி கொடுக்கும்'[20] என்று அவர் கூறுகிறார். மேலே கூறப்பட்ட வசனத்தின்படி, அவர் இஸ்ரவேலர்களுக்கு மட்டுமே அனுப்பப்பட்டவராதலால் பாலஸ்தீன யூதர்களைச் சேராத இந்த ஆடுகள், மற்ற நாடுகளில் சிதறிக் கிடக்கும் காணாமற்போன பத்துக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்களே ஆவர். இயேசுவின் மற்றொரு வாக்கியமான "தீர்க்கதரிசி ஒருவன் தன் ஊரிலும் தன் வீட்டிலுமேயன்றி வேறெங்கும் கனவீனமடையான்..."[21] என்ற வாக்கியத்திலிருந்தும் இதே முடிவுக்கே நாம் வருகிறோம். ஆகவே இயேசு கௌரவமடையக் கூடிய எந்தவொரு நாட்டுக்கும் செல்லவில்லை என்று நம்புவது, அவர் கௌரவப்படுத்தப் படாமலேயே மரித்துவிட்டார் என்று நம்புவதற்குச் சமமாகும். அவரது எதிரிகள் அவரைக் கொன்றொழிப்பதற்குத் திட்டம் தீட்டியிருந்ததைக் குறித்து அவர் சொல்லுகையில், தன்னுடைய சம்பவம் யோனா தீர்க்கதரிசியின் சம்பவத்தைப் போன்றதாகும் என்று அவர் சொன்னது எதைக் காட்டுகிறதென்றால் மீன் வயிற்றில் இருந்ததற்குப் பிறகு எவ்வாறு யோனா தீர்க்கதரிசி கண்ணியப் படுத்தப்பட்டாரோ அதே விதம் பூமியின் இருதயத்தில் - அதாவது கன்மலையில் குடையப்பட்ட கல்லறையில் - இருந்ததற்குப் பிறகு





காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரால் அவர் கண்ணியப்படுத்தப் படுவார் என்பதையே காட்டுகின்றது. அவர் சொன்னது அப்படியே நடந்தேறியது. காணாமற்போன ஆடுகள் வாழ்ந்து வந்த மற்ற நாடுகளுக்குச் சென்று, அங்கு அவர்களால் கண்ணியப்படுத்தப்பட்டார். இயேசு பிறந்த நேரத்தில் கிழக்கிலிருந்து பாலஸ்தீனத்துக்கு வந்த சாஸ்திரிகளின் கதையில் கிழக்கு நாடுகளில் வாழ்ந்து வரக்கூடிய அந்த காணாமற்போன ஆடுகளால் இயேசு கண்ணியப்படுத்தப்படுவார் என்ற குறிப்பு அடங்கியிருக்கிறது. அந்த சாஸ்திரிகள் இஸ்ரவேலர்கள்தாம் என்பது தெளிவு. ஏனென்றால் அவர்களைத் தவிர வேறு எந்த ஒரு சமுதாயத்தாரும் மேசியா ஒருவர் தோன்ற வேண்டுமென்று எதிர்பார்த்திருக்க வில்லை. மேலும் அவர்கள், "யூதருக்கு ராஜாவாகப் பிறந்திருக்கிறவர் எங்கே?" என்று கேட்டதிலிருந்தும் இது விளங்குகின்றது.

இதே விஷயத்தைக் குறிப்பால் உணர்த்தக்கூடிய ஓர் உவமான வடிவக் கதையையும் இயேசு கூறியிருக்கிறார். "உங்களுக்கு எப்படித் தோன்றுகிறது? ஒரு மனுஷனுக்கு நூறு ஆடுகளிருக்க, அவைகளில் ஒன்று சிதறிப் போனால், அவன் மற்ற 99 ஆடுகளையும், மலைகளில் விட்டுப் போய்ச் சிதறிப்போனதைத் தேடாமலிருப்பானோ? அவன் கண்டுபிடித்தால், சிதறிப்போகாத 99 ஆடுகளைக் குறித்துச் சந்தோஷப் படுகிறதைப் பார்க்கிலும், அதைக் குறித்து அதிகமாக சந்தோஷப் படுவான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்"[22] என்று அவர் சொன்னார்.

இது உண்மையானால், இந்த உவமானக் கதையில் அடங்கி இருக்கும் விஷயம் என்ன? இயேசு ஒரு நல்ல மேய்ப்பன் என்பது உண்மையானால், நேர் பாதையிலிருந்து தவறியதற்காக இறைவனுடைய தண்டனையாக அன்னிய நாட்டவரின் படைபலத்தால் இஸ்ரவேலர் களின் பத்துக் கோத்திரத்தார்களும் காணாமற்போய் பிறநாடுகளில் சிதறிப் போய்விட்டது உண்மை யானால், அவருக்கு முன்னுள்ள முதல் கடமை என்னவென்றால் காணமாற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரைத் தேடிச்

சென்று அவர்களைக் கண்டுபிடித்துச் சந்தோஷப் படுவதேயாகும் என்பதில் சந்தேகமேயில்லை.

இயேசு ஓர் உண்மையான தீர்க்கதரிசியாகவும், இறைவனின் நேசராகவும் இருந்ததால், இறைவனால் தம் மீது சுமத்தப்பட்ட கடமையை அவரால் புறக்கணிக்க முடியவில்லை. பாலஸ்தீன யூதர்கள் தம்மை ஏற்றுக்கொள்ளப் போவதில்லை என்பதையும், அவர்கள் தம்மை அழித்தொழிப்பதற்கு எல்லா முயற்சிகளையும் செய்திருக்கிறார்கள் என்பதையும் அவர் கண்டு கொண்டதும், அவர் தம் நாட்டை விட்டு வெளியேறி பாலஸ்தீன யூதர்கள் அல்லாத காணாமற்போன ஆடுகளாகிய இதர யூதர்களைத் தேடிக் கொண்டு புறப்பட்டு விட்டார்.

## *இந்தியாவில் தூய தோமா*

பாலஸ்தீனத்தை விட்டு இயேசு வெளியேறிய பின்னர் அவர் சென்ற இடங்களையெல்லாம் நாம் தேடிப் போகும் முன்னர், தூய தோமாவுடைய செயற்கரிய செயல்களைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற ஆசைப்படுகிறேன். தோமா இயேசுவின் பன்னிரு சீடர்களில் ஒருவர். தமது தலைவராகிய இயேசு மேற்கொண்ட நீண்ட பயணத்தில் அவருடன் கூடவே அவரைத் தொடர்ந்தோ, அல்லது பின்னர் அவரைப் பின்பற்றியோ தூரக்கிழக்கிலும், இந்தியாவிலும் வாழ்ந்து கொண்டிருந்த காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாருக்குப் போதனை செய்ய வேண்டிய கடமையை நிறைவேற்றுவதற்காக வந்தார். இயேசுவின் கைகளில் ஆணி அறையப்பட்ட காயங்களையும் அவரது விலாப்புறக் காயத்தையும் கண்டு, தாம் கண்ட மனிதர் ஆவிரூபமானவரல்லர்; காயமடைந்த உடலோடு கூடிய இயேசுவேதான் என்ற மறுக்க முடியாத ஆதாரத்தை நமக்குத் தந்தவர் இந்த தோமாவே என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். எனவே இயேசு சபிக்கப்பட்ட மரணமடையவில்லை என்ற உண்மைக்கு அவர் காலமெல்லாம் சாட்சி பகரக்கூடியவரானார். தூய தோமா இந்தியாவுக்குப் புறப்பட்டுச் சென்று அங்கேயே மரணமடைந்தார் என்பது உறுதியான உண்மையாகும்.





1) கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் ‘டிவினிடி’யாகப் பணிபுரியும் டாக்டர் ஃபிரான்சிஸ் சி பர்கித் இவ்வாறு சொல்லுகிறார்:

“தோமாசுடைய எலும்புகளில் சில பாதுகாத்து வைக்கப்பட்டுள்ள எடிஸ்ஸா என்னுமிடம் சிலவேளைகளில் “பார்த்தியர்களின் எடிஸ்ஸா” என்றழைக்கப்படுவதால், ஒருவேளை தோமஸ் பார்த்தியாவைச் சேர்ந்த சுவிசேஷகனாக இருந்தார் என்று கூறப்பட்டிருக்கலாம். இந்தியாவில் இருந்து எடிஸ்ஸாவுக்குக் கொண்டு வரப்பட்ட பெருமை இந்த எலும்புகளுக்கு உண்டு. தோமசின் ‘நடபடிகள்’ என வழங்கும் ஒரு நூல், அவருடைய பிரச்சார ஊழியத்தையும், இந்தியாவில் அவர் உயிர்த் தியாகம் செய்ததையும் பற்றிக் கூறுகிறது... யூப்ரடீசுக்குக் கிழக்கே அமைந்த நாடுகளிலுள்ள ஆதிகாலக் கிறிஸ்தவர்களுக்கு தோமசின் நடபடிகள் ஒரு முதல்தர ஆதார நூலாகும்... ஒரு விந்தையான விஷயம் என்னவென்றால் (அந்நூலில்) இந்த அப்போஸ்தலரின் பெயர் யூதா தோமஸ் என்று எழுதப்பட்டு, அவர் இயேசு கிறிஸ்துவின் இரட்டைச் சகோதரர் என்று அழுத்தமாகவும் கூறப்பட்டுள்ளது என ஈசீபியஸ் சொல்லுகிறார்.”[a]

இந்த ‘நடபடிகள்’ சரித்திர பூர்வமானவை என்றும், இந்த நடபடிகள் நடந்தேறிய இடம் தென் இந்தியா என்றும் கூறப்படுகிறது. துரதிருஷ்ட வசமாக ‘நடபடிகளில்’ கண்டுள்ள விஷயங்களுக்கும் இந்தியாவுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. ஆனால் இந்தியாவுக்கு வடமேற்கிலுள்ள பகுதியோடும்.[b] இந்தியாவுக்கும்

a. *இயேசுவின் இரட்டை சகோதரர் என தோமசை அழைப்பதானது பொதுவாக, இயேசுவின் சீஷர்களிலே இயேசுவைப் பின்தொடர்ந்து இந்தியாவுக்கு வந்தவர் தோமஸ் என்பதையும், இயேசுவின் போதனைகளையே தன்னுடைய போதனைகளாகக்கருதி அவர் போதித்து வந்தார் என்பதையுமே காட்டுகின்றது. அவ்வாறில்லையென்றால் அவர் இயேசுவின் இரட்டை சகோதரர் என்று அழைக்கப்படுவதில் எவ்விதப் பொருத்தமும் இல்லை.*

b. *இது நம்முடைய கொள்கைக்கு இசைவாக இருக்கிறது. காணாமற்போன பத்துக் கோத்திரத்தைச் சேர்ந்த மக்கள் கூட்டம் குடியமர்ந்த இடம் இந்தியாவின் வடமேற்குப் பகுதியேயாகும். இயேசுவும் அவரது சீஷரான தூய தோமஸூம் முதன் முதலில் வடமேற்குப் பகுதிக்கு வந்தார்கள். பின்னர் இயேசுவால் அனுப்பப்பட்டோ தமது சொந்த விருப்பத்தாலோ, தோமஸ் இந்தியாவின் மேற்குப் பகுதிக்கு வந்து சேர்ந்தார். அப்பகுதியிலும் இஸ்ரவேலர்கள் வாழ்ந்து வந்தனர்.*

மெசபடோமியா வுக்கும் இடைப்பட்ட நாட்டோடுமே இந்த நடபடிகள் சம்பந்தப்பட்டவை ஆகும். தூய தோமஸின் கிறிஸ்தவர்கள் என்ற பெயர் பழங்காலத் தென்னிந்தியக் கிறிஸ்தவர்களுக்கு இடப்பட்ட பெயராகும். இந்தக் கருத்து தோமஸின் நடபடிகளுடன் நெருங்கிய சம்பந்தப்பட்டிருக்கிறது. அதனைப்பற்றி இங்கு சிறிது பார்ப்போம்.

மலபாரில் (தென்மேற்குக் கடற்கரைப் பகுதியில்) தூய தோமஸ் கிறிஸ்தவக் கொள்கைகளை நிறுவினார் என்பது மரபு வழக்கு. பின்னர், இப்போது சென்னையிலிருக்கும் மைலாப்பூருக்குச் சென்றார். அங்குதான் அவரது உயிர்த்தியாகத்தைக் குறிக்கும் கோவில் - போர்த்துக்கீசியர்களால் 1547ல் மறுமுறை கட்டப்பட்டது - இன்னும் தூய தோமஸ் மலையில் (பறங்கி மலையில்) நிற்கிறது. அங்கு ஏழாம் நூற்றாண்டளவு புரதானமான ஒரு சிலுவை 'பஹ்லவி' எழுத்துக்களுடன் காணப்படு கின்றது. 'காஸ்மாஸ் இன்டிகோப் லென்ஸ்டெஸ்' ஸிலிருந்து பெர்ஷியாவைச் (கிழக்கு சிரியாவைச்) சேர்ந்தவர்களும், சந்தேகமில்லாமல் நெஸ்டோரிய வகுப்பைச் சேர்ந்தவர்களுமாகிய கிறிஸ்தவர்கள், இலங்கையிலும், மலபாரிலும், காலியானாவிலும் (வடக்கு பம்பாய்) கி.பி.55க்கு முன்னாலேயே இருந்து வந்தார்கள் என்று தெரிகிறது.[23]

2) சங்கைக்குரிய ஈட்ஸ் பிரௌன் அவர்கள் திருவாங்கூருக்கு வருகை தந்து திரும்பிய பின்னர் எழுதியுள்ளதாவது:

"திருவாங்கூரில் மட்டுமல்லாமல், உலகத்திலேயே மிகவும் பழைய கிறிஸ்தவ சமூகம் சைரோ - மலங்கரன் சமூகம்தான். இந்த ஆசார வழியைச் சேர்ந்தவர்கள், தோமஸ் கி.பி.59ல் இந்தக் கடற்கரைப் பகுதியில் வந்திறங்கியபோது தங்களின் முன்னோரை தோமஸே ஞானஸ்ஞானம் செய்து வைத்தார் என்று உரிமை கொண்டாடுகிறார்கள். அவர், அவர்களை நசரேயர் என அழைத்தாராம். ஏனெனில், கிறிஸ்தவர்கள் என்ற பதம் அப்போது உபயோகத்திற்கு வரவில்லை. (அப்போஸ்தலர் நடபடிகள் 11:26 பார்க்கவும்)"[24]

3) பேராயர் லேங்கு பிரபு முன்னாள் கேண்டர்பரியின் பேராயர் - ஒரு வானொலிச் சொற்பொழிவில் கூறியதாவது:





"தோமஸ் இந்தியாவுக்குச் சென்றார் என்ற மரபு வழக்கு ஒருபோதும் தள்ளுபடி செய்யப்படவில்லை. அதுமட்டுமல்ல. கிறிஸ்தவமதம் இந்தியாவில் ஆரம்ப காலத்திலேயே வேரூன்றிவிட்டது என்பதிலும் சந்தேகமில்லை."[25]

**H.G.** ராலின்சன் சி.ஐ.ஈ. தாமெழுதிய 'இண்டியா, எ ஷார்ட் கல்சுரல் ஹிஸ்டரி' என்ற நூலில் (பக்கம் 92-93) இவ்வாறு எழுதுகிறார்:

"இந்தோ - பார்த்திய இளவரசர்களில் ஒருவரையோ டாக்சில்லாவைச் சேர்ந்த சகா இளவரசர்களில் ஒருவரையோ, கிரேக்கர்கள் கொண்டோபர்னேஸ் என்ற பெயரில் தெரிந்து வைத்திருந்தார்கள். இவ்விஷயம் நம்முடைய கவனத்தைப் பெரிதும் கவருகின்றது. ஏனென்றால், தள்ளுபடியாகமத்தைச் சேர்ந்த 'தோமஸின் நடபடிகள்' என்ற புத்தகத்தில், 'தோமஸ் அப்போஸ்தலர்' அவருடைய ராஜசபைக்கு 'கிறிஸ்தவமத்தைப் போதிப்பதற்காக வந்தார்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு முன்னால், தூய தோமஸ் எப்போதாகிலும் இந்தியாவுக்கு வந்ததுண்டா என்பது பற்றி பெரிய சந்தேகம் நிலவி வந்தது. ஆனால் இந்தக்கதை வரலாற்று உண்மைகளால் கட்டப்பட்டதுதான் என்பதை சமீபகாலத்திய ஆராய்ச்சிகள் நிரூபிக்க முன்வந்து பார்தலோமியோவும் தோமஸும், கிழக்கு நாடுகளில் சுவிசேஷத்தைப் பிரசங்கிக்க அனுப்பப்பட்டார்கள் என்று கூறுகின்றன. தோமஸ் அநேகமாக பிரசித்தி பெற்ற கடல் மார்க்கமாக - அலெக்சாண்டிரியாவிலிருந்து சிந்து நதியின் முகத்துவாரம் வரைக்கும் - வந்து அங்கிருந்து டாக்சில்லா போய்ச் சேர்ந்தார். கொண்டோபர்னேசின் சபையில் அவர் மனமகிழ்ச்சியோடு வரவேற்கப்பட்டார். ஏனெனில் டாக்சில்லா அனைத்து நாடுகளின் கலாச்சாரமும் புழங்கக்கூடிய பொது மையமாகவும் வெளிநாடுகளில் இருந்து புதிதாக வரக்கூடிய மத போதகர்களின் போதனைக்கு எவ்வித மறுப்புமின்றி செவிசாய்ப்பதற்கும் பழக்கப்பட்ட இடமாகவும் இருந்தது. எப்படியிருப்பினும் குஷாணர்களின் படையெடுப்பால் அவரது மதப்பிரச்சார வேலை தடைபட்டது.

தோமஸ் அங்கிருந்து ஓடிச் செல்ல வேண்டியதாகவும் இருந்தது. ஆகவே, வந்த பாதையின் வழியாகத் திரும்பிச் சென்று சிந்து நதியின் முகத்துவாரத்தை அடைந்து அங்கிருந்து படகு மூலம் பிரயாணம் செய்து வழியில் சோகோத்ராவை தொட்டுக் கொண்டு சென்று முசிரி(ஸ்) போய்ச் சேர்ந்தார். இது மலபார் கடற்கரையிலுள்ள ஒரு ரோமானியக் குடியிருப்பு நகரம். இவ்விடத்துக்கு அவர் கி.பி.52ல் வந்து சேர்ந்து, மலபாரில் கிறிஸ்தவ திருச்சபையை ஏற்படுத்தினார். இருபது வருடங்களுக்குப் பிறகு, தமது ஊழியத்தைக் கிழக்குக் கடற்கரைப் பிராந்தியத்திற்கு மாற்றிக் கொண்டார். அங்கே பிராமணர்களால் உயிர்ப்பலியாக்கப் பட்டார். சென்னைக்கு அருகிலுள்ள மயிலாப்பூரில் அவர் பெயரால் கட்டப்பட்டுள்ள கதீட்ரலில் அவரது ஞாபகச் சின்னங்கள் பாதுகாக்கப்பட்டுள்ளன. ‘வெற்றி கொணர்ந்தவர்’ எனப் பொருள்படும் ‘விந்த்பர்னா’ என்னும் பெர்ஷிய வார்த்தையின் மறுவிய வடிவமே கொண்டோபர்னேஸ் என்பதாகும். ஆர்மீனிய மொழியில் சொல்லப்படும்போது இவ்வார்த்தை ’கதாஸ்பார்’ என்று மாறுகிறது. அதிலிருந்து ‘காஸ்பார்’ என்ற வார்த்தை தோன்றி இருக்கிறது. இயேசு குழந்தையாகத் தொட்டிலில் இருந்த போது அங்கு வருகை தந்த மூன்று சாஸ்திரிகளில் இரண்டாவது நபருக்கு ‘காஸ்பார்’ என்ற இப்பெயரே சூட்டப்பட்டிருந்தது. (பக்கம் 92, 93)

உகாண்டா பேராயர் **L.W.** பிரௌன் இவ்வாறு எழுதுகிறார்: “இந்த நடபடிகளில் வரும் இந்தியா என்ற பதம் நம்முடைய இந்தியாவையோ அதைவிடச் சிறப்பாகத் தற்போது பாகிஸ்தானில் அடங்கியிருக்கும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தையோ குறிக்கிறது. குண்டபொல்ஸ் ராஜாவும் அவரது சகோதரர் காடும் **(Gad)** தற்போது சரித்திர புருஷர்களாகவும் அவர்கள் ஏறத்தாழ கி.பி.19-45ல் சிந்து சமவெளியின் மேற்கிலும், கிழக்கிலுமுள்ள சைதோ-இந்தியன் ராஜ்யத்தை ஆண்டு வந்ததாகவும் அறியப்படுகிறது. முதல் நூற்றாண்டில் வடமேற்கு இந்தியாவில் குறிப்பிடத்தக்க அளவில் யூதர்களின் குடியேற்றப் பகுதி இருந்தது.





இது ஆரம்பகாலக் கிறிஸ்தவப் பிரச்சார ஊழியர்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கக்கூடும். தூய தோமஸ் வட இந்தியாவுக்குச் செல்ல வேண்டிய அத்தியாவசியத்தை சுட்டிக் காட்டக்கூடிய வேறு சில ஆதாரங்களும் உள்ளன. பார்திசான் அவருடைய ‘ஃபேட்’ புத்தகத்தில் (கி.பி.196) புறசமயத்தார்களிடையே பார்த்திபக் கிறிஸ்தவர்கள் வாழ்ந்து வந்ததையும், இது ஏறக்குறைய கி.பி.50ல் குஷாணர்களின் படையெடுப்பால் இந்திய-பார்த்திய சாம்ராஜ்யம் அழிந்து போனதின் காரணமாக இருக்கக்கூடுமென்றும் சொல்லுகிறார். வட இந்தியாவில் கிறிஸ்தவக் கோத்திரத்தார் இன்னும் வாழ்ந்து வருவதாகவும் ஆனால் அவர்கள் தங்களுடைய விசுவாசத்தை மற்றவர்கள் அறியாமல் இரகசியமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும் கூடக் கூறப்படுகிறது. உதாரணமாக சிந்து சமவெளியில் ஒரு பக்கீர் சமுதாயம் இருக்கிறது. இவர்கள் தம்மை ஏறக்குறைய பார்தலோமை என்பது போன்ற ஒரு அரமெய்க் மொழிப் பெயரால் அழைத்துக் கொள்வதுடன், தாங்கள் தூய தோமஸ் கையினால் மதம் மாற்றப்பட்டோரின் வாரிசுகள் என்றும், அதனை நிரூபிப்பதற்குப் புத்தகங்களும் அடையாளங்களும் வைத்திருப்பதாகவும் வாதம் செய்கிறார்கள். ஆனால், துரதிருஷ்டவசமாக அவர்கள் வைத்திருப்பதாகக் கூறும் ஆதாரங்களைப் பார்ப்பதற்கு எந்த வெளியாட்களையும் எந்நேரத்திலும் அவர்கள் அனுமதித்ததில்லை.”

4) செமிட்டிக் எழுத்துக்களைக் கொண்டு சமஸ்கிருத மொழியில் அதாவது காரோஸ்டிக் வடிவில் நாணயங்களில் எழுதப்பட்டிருப்பதும், டாக்சில்லாவில் காணப்படும் அசோக சக்கர வர்த்தியின் போதனைகளைக் கொண்ட சாதனங்களில் ஒன்று அரமெய்க் எழுத்து வடிவங்களில் எழுதப்பட்டிருப்பதும் இந்த உண்மையையே உறுதிப்படுத்துகின்றன. ஜர்னல் ஆஃப் ஆசியாடிக் ஸ்டடீஸ் - 1915 - பக்கம் 340-7 ஹெர்ஸ் பெல்டு எபிகிராபியா இண்டியான - பக்கம் 251-3 என்.ஏ. பாரிஸ் எழுதிய ‘தி அரப் ஹெரிடேஜ்’ என்ற நூலையும் பார்க்கவும்.

5) கேம்பிரிட்ஜ் - ‘ஹிஸ்டரி ஆஃப் இந்தியா’ பக்கம் 580-5

6) **R.A.** டிராட்டரின் ‘தி ஹிஸ்டரி ஆஃப் கிறிஸ்டியானிட்டி இன் ஸின்த்’ மாநாடு பிப்ரவரி 1947.

**P.** தோமஸ் ஜார்ஜ் தாம் எழுதிய (ஆலன் அன்வின் லிமிடெட், இலண்டன்-1954) ‘கிறிஸ்டியன்ஸ் அண்டு கிறிஸ்டியானிட்டி இன் இண்டியா அண்டு பாகிஸ்தான் என்னும்’ நூலில் கூறுகிறார்:

“அப்போஸ்தலர் (தோமஸ்) தரை மார்க்கமாகவே குண்டபோரஸின் நாட்டுக்குப் பயணம் செய்தார் என்பதும் தென்னிந்தியா அவரைக் கவருவதற்கு முன்னர் அவர் குண்டபோரஸின் ராஜ்யத்தில் சுவிசேஷத்தைப் போதித்தார் என்பதும் முற்றிலும் நடக்கக் கூடிய காரியம்தான். பார்த்தியாவும், இந்த அப்போஸ்தலரின் நடவடிக்கைகளில் சம்பந்தப்பட்டிருந்தது என்பதையும் இவ்விடத்தில் குறிப்பிட வேண்டும். அக்காலத்தில் பார்த்தியர்களின் கீழ் சிறை பிடிக்கப்பட்டுச் சிதறி ஓடிய யூதர்களில் குறிப்பிடத்தக்க எண்ணிக்கை யுடையவர்கள் பெர்ஷியாவிலும், ஆப்கானிஸ்தானிலும் இருந்து வந்தார்கள். ஆகவே தம்முடைய நாட்டு மக்களுக்கு மேசியா தோன்றி விட்டார் என்ற மகிழ்ச்சிக்குரிய செய்தியை அறிவிக்க வேண்டும் என்ற அப்போஸ்தலரின் பெருவிருப்பம் அவரை முதலில் அந்தப் பகுதிகளுக்கு வழி நடத்திச் சென்றிருக்க வேண்டும். இன்று வரையிலும், இந்தோ - ஆப்கானிய எல்லையிலுள்ள அநேக கோத்திரத்தார்கள் தாங்கள் இஸ்ரவேலர்களின் சந்ததியார் என்று உரிமையுடன் கூறுகிறார்கள்.

குண்டபோரஸின் ராஜ்யத்தில் சுவிசேஷத்தைப் போதித்த பின்னர் மற்ற நாடுகளும் அவரது கவனத்தைக் கவர்ந்தன. அவரது தலைவருடைய போதனைகளையும், வாழ்க்கையையும் அறியாத ஒரேயொரு பிரதேசம் இருக்கும் வரையிலும் தோமஸைப் போன்ற உற்சாகமுடைய ஒரு மனிதரால் மனச்சமாதானம் அடைய முடியாது. இந்துஸ்தான் நாட்டில் அப்போது நிலவியிருந்த அராஜகமான நிலையும், மேற்குக் கடற்கரை பிரதேசங்களில் எண்ணற்ற யூத சமுதாயத்தினர் வாழ்ந்து வரும் செய்தியும் அந்த





அப்போஸ்தலரை குண்டபோரஸின் ராஜ்யத்திலிருந்து மலபார் கடற்கரைப் பிரதேசத்துக்குப் போகுமாறு முடிவு செய்யும்படித் தூண்டியிருக்க வேண்டும்.

இவ்விதமாக, தூய தோமஸ் காணாமற்போன பத்துக் கோத்திரத்தார் வாழ்ந்து வந்த பகுதிகளுக்குப் பிரயாணம் செய்ததன் மூலம் “காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்குப் போங்கள்” என்று இயேசு சீடர்களைப் பார்த்து ஏவிய கடமையை நிறைவேற்றி வைத்தார்.

தூய யாக்கோபு பன்னிரு கோத்திரத்தாருக்கும் - அவர்கள் எங்கு வாழ்ந்திருந்தாலும் சரியே - ஒரு நீண்ட கடிதம் எழுதி அதன் மூலம் இக்கட்டளைக்கு அடிபணிந்தார். அவர் தம்முடைய கடிதத்தை இந்த வார்த்தைகளோடு தொடங்குகிறார். “தேவனுக்கும் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கும் ஊழியக்காரராகிய யாக்கோபு, சிதறியிருக்கிற பன்னிரண்டு கோத்திரங்களுக்கும் வாழ்த்துதல் சொல்லி எழுதுகிறதாவது:”

## *இயேசு மற்ற ஆடுகளையும் தேடுதல்*

இயேசு கடைசி முறையாகத் தமது சீடர்களை திபேரியாக் கடற்கரையில் சந்தித்து அவர்களோடு உணவருந்தி, “என்னுடைய ஆடுகளை மேய்ப்பாயாக” என்று பேதுருவுக்குக் கூறிவிட்டு அவர்களிடம் கடைசி முறையாகப் பிரியாவிடை பெற்று அவர்களை விட்டுப் பிரிந்து சென்றார் என்று நான்காம் சுவிசேஷம் எடுத்துக் காட்டுகின்றது. அவர் எங்கு சென்றார்? சுவிசேஷத்தில் இதற்கும் விடையில்லை. எவ்வாறாயினும் அப்போஸ்தலர் நடபடிகளிலும் பவுலின் கடிதங்களிலும் ஒரு தரிசனத்தில் பவுல் அவரை டமஸ்கஸுக்கு அருகில் கண்டதாக நாம் படிக்கிறோம். ஆனால் **I** கொரிந்தியர் 15:8ல் கூறப்பட்டுள்ள விஷயம், பவுல் மதம் மாறி கிறிஸ்தவ மதத்திற்கு வந்த காலத்தில் - அதாவது சிலுவை நிகழ்ச்சி நடந்தேறி ஆறு மாதத்திலிருந்து பன்னிரண்டு மாதங்களுக்குள் - இயேசு சிரியா பிராந்தியத்திற்குள்ளேயே இருந்தார் என்று சில ஆராய்ச்சியாளர்களை முடிவு செய்ய வைத்திருக்கிறது. சிட்னி

மாவட்ட நீதிமன்ற நீதிபதியாகிய டாக்கர் சவுல் மதம் மாறிய கதைக்குக் கீழ்க்கண்டவாறு விளக்கம் தருகிறார்:

"கலிலேயாவில் இனிமேல் பாதுகாப்பாக இருக்க இயலாது என்பதைக் கண்டு கொண்டதும் இயேசு கிழக்கு நாடுகளிலுள்ள காணாமற்போன இஸ்ரவேல் கோத்திரத்தாரைப் பார்ப்பதற்காகப் பிரயாணத்தைத் தொடங்கினார். அவர் தமஸ்கு வழியாகச் சென்றார். தமஸ்குவில் ஒரு குறிப்பிடத்தக்க காலம் அனனியாவையும் மற்றோரையும், சீடர்களாக்குவதற்கு வேண்டிய அளவு காலம் தங்கியிருந்தார். அவர்களைத் துன்புறுத்துவதற்காக யூத அதிகார வர்க்கத்தார் ஒரு குழுவை அங்கு அனுப்பி வைத்ததற்கும் இதுவே காரணமாக இருந்திருக்கலாம். பழங்கால எலியாவைப் போன்று, தன்னுடைய எதிரி என்னை நெருங்கி வருகிறான் என்பதை அறிந்ததும் இயேசு தனது எதிரியாகிய சவுலைச் சந்திக்கச் சென்றார். அதன் விளைவு, துன்பமிழைக்கக் காத்திருந்தவன் இயேசுவின் ஆச்சரியமிக்க சக்தியினால் ஒரு சீஷனாக மாறிவிட்டான். அவ்விருவருக்கும் இடையே நடைபெற்ற பேச்சு வார்த்தைகள் அனனியாவின் வீட்டிலோ அல்லது இயேசு தங்கியிருந்த இடத்திலோ சில தினங்கள் வரைக்கும் தொடர்ந்து நடந்திருக்கும். எவ்வாறாயினும், குழுவினர் தமஸ்குவுக்கு வந்ததிலிருந்து, தாம் இனியும் தமஸ்குவில் தங்கியிருப்பது தமக்குப் பாதுகாப்பானதல்ல என்று இயேசு கண்டுகொண்டார். எனவே அவர் தமது கிழக்கு நாடுகளுக்கான பிரயாணத்தில் முதலில் பாபிலோனை நோக்கிப் புறப்பட்டார்."

ஜோஹான்னஸ் வொய்ஸ் அவர்களும் இந்த விளக்கத்தை ஆதரிக்கிறார். 'பவுல் அண்ட் ஜீஸஸ்' (பக்கம் 81) "இயேசுவுடைய வசீகரிக்கும் மனித சக்தி மிக ஆழ்ந்த முறையில் சவுலைக் கவர்ந்து மனமாற்றத்தை உண்டாக்கிவிட்டது என்று கருதாமல், பவுல் கண்ட காட்சியும் அவரது மதமாற்றமும் எம்முறையாலும் உணர்ந்து கொள்ள இயலாததாக இருக்கிறது."[26]





## ★ *நிசபஸ் பட்டணத்தில் இயேசு*

வாக்களிக்கப்பட்ட மஸீஹ் தமது மஸீஹ் 'இந்துஸ்தான் மே' என்ற நூலில் மிகப் புகழ்பெற்ற வரலாற்று நூலாகிய ரவுஸாதுஸ்ஸபா என்ற நூலிலிருந்து (பக்கம் 130-5) எடுக்கப்பட்ட ஒரு விஷயத்தைக் கீழ்க்கண்டவாறு தருகிறார்கள்.

"இயேசு (ஈசா) ஒரு பெரும் பயணக்காரராக இருந்ததால் மேசியா (மஸீஹ்) என்ற பெயரில் அழைக்கப்பட்டார். அவர் தம் தலையில் ஒரு உல்லன் கைக்குட்டையும், உடலைச் சுற்றி ஒரு உல்லன் மேலங்கியும் அணிந்திருந்தார். கையில் ஒரு கைத்தடி பற்றியவராக கிராமம் கிராமமாக, பட்டணம் பட்டணமாக அலைந்து திரிந்தார். இரவு வந்ததும் அவர் எங்கு இருக்க நேரிடுகின்றதோ அங்கேயே தங்கிக் கொண்டார். காடுகளில் கிடந்த காய்கனிகளை உண்டு, காட்டு நதி நீரை அருந்தி தமது பயணத்தைக் கால்நடையிலேயே நிறைவேற்றினார். தம்முடைய நாட்டிலிருந்து புறப்பட்டு, தம் இல்லத்திலிருந்து நூற்றுக்கணக்கான மைல்கள் தூரத்திலுள்ள நாஸிபின் பட்டணத்தை அடைந்தார். அவரோடு கூடவந்த அவரது சீஷர்களில் சிலரைப் பட்டணத்திற்குள் போதனை செய்வதற்காக அனுப்பி வைத்தார். அந்தப் பட்டணத்திற்குள் அப்போதே இயேசுவை (ஈசா -அலை) பற்றியும் அவரது தாயாரைப் பற்றியும் தவறான ஆதாரமில்லா வதந்திகள் நிலவி வந்தன. ஆகவே அப்பட்டணத்தின் கவர்னர் சீஷர்களைச் சிறைப்பிடித்து இயேசுவுக்கு அழைப்பு விடுத்தார். இயேசு அற்புதமான முறையில் சில நபர்களைக் குணப்படுத்தினார். இன்னும் மற்ற அற்புதங்களையும் நிகழ்த்தினார். ஆகவே நாஸிபின் பகுதிக்கு அரசனாக இருந்தவன் தன்னுடைய படையினர் எல்லாரோடும் தன்னுடைய மக்களோடும் அவர் மீது விசுவாசம் கொண்டான்."

★ *நிசிபஸ் தற்காலத்தில் நெசீப் அல்லது நாசிபன் என்றழைக்கப்படுகிறது. மெசபெடோமியாவுக்கு வடக்கில் அமைந்துள்ள ஒரு பழம் பட்டணம் ஆகும். இங்கு 4,000 மக்கள் வாழ்கின்றார்கள்; அவர்களில் பெரும்பாலோர் யூதர்களே. (பிரிட்டனியம் கலைக்களஞ்சியம் - 2 ஆம் பதிப்பு)*

வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் கூறுகின்றார்கள்: "ரவுஸாத்துஸ் ஸபாவில் கூறப்பட்டுள்ள இந்தச் சிறிய விளக்கத்திலிருந்து இயேசு தமது பிரயாணத்தின் நடுவே நாஸிபின் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தார் என்று நாம் முடிவு செய்கிறோம். நாஸிபின், மோசூலுக்கும் சிரியாவுக்கும் நடுவில் உள்ளது. ஒருவன் சிரியாவிலிருந்து பெர்ஷியாவை நோக்கிப் பிரயாணம் செய்தால், நாஸிபின் பட்டணத்தின் வழியாகவே அவன் கடந்து செல்வான். நாஸிபின் எருசலேமிலிருந்து 450 மைல் தூரத்திலும், பெர்ஷியா எல்லையிலிருந்து 150 மைல் தூரத்திலும் அமைந்திருக்கிறது. பெர்ஷியாவின் கிழக்கு எல்லை ஆப்கானிஸ்தானிலுள்ள 'ஹீரத்' நகரத்தைத் தொட்டுக் கொண்டு செல்லுகின்றது. வேறு விதமாகச் சொன்னால், ஹீரத் ஆப்கானிஸ்தானின் மேற்கு எல்லைக் கோட்டில் அமைந்திருக்கிறது. ஹீரத்திலிருந்து கைபர் கணவாய் வரைக்கும் உள்ள தூரம் ஏறத்தாழ 500 மைல்கள்."

பாலஸ்தீனத்திலுள்ள இஸ்ரவேலர்களால் துன்புறுத்தப்பட்டு, வெறுத்து ஒதுக்கப்பட்ட பின்னர், இயேசு பாலஸ்தீனத்திலிருந்து வெளியேறி நாஸிபின் பட்டணத்தை அடைந்தார் என்று ரவுஸாதுஸ் ஸபாவில் சொல்லப்பட்டுள்ள மேலே கண்ட விஷயம் முற்றிலும் சரியானதாகும். அது இயேசுவுடைய சமயப்பணியோடு இசைந்த காரியம்தான். அக்காலத்திய மிகவும் பிரசித்தி பெற்ற வரலாற்று ஆசிரியரான ஜோஸபஸ், காணாமற்போன பத்துக் கோத்திரத்தைச் சேர்ந்த யூதர்கள் அந்நாளில் நாஸிபின் பட்டணத்தில் வாழ்ந்து வந்தார்கள் என்று கூறுகிறார். அவர் சொல்லுவதாவது:

"மெசெபெடேமியாவிலிருந்த யூதர்கள் மீதும் - குறிப்பாக பாபிலோனியாவில் வாழ்ந்து வந்தவர்கள் மீதும் இச்சமயத்தில் ஒரு பயங்கரமான பெருந்துன்பம் வந்திறங்கியது... இதே நிலையில் மற்றொரு பட்டணமும் இருந்தது. அதுவே நிஸ்பஸ்" (பக்கம் 314)

இவ்வேளையில் யூதர்களுடைய சமுதாயம் முழுவதும் பாபிலோனியர்களுக்கும்,செலூசியர்களுக்கும் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தார்கள். ஏனென்றால், அந்தப் பகுதிகளில் வசித்து





வந்த சிரியர்கள் யாவரும் யூதர்களுக்கு எதிராகப் போரிடவேண்டும் என்ற செலூசியர்களின் கருத்தை ஏற்றுக் கொண்டிருந்தார்கள். ஆகவே அவர்களில் பெரும்பாலார் ஒன்று திரண்டு நார்தாவுக்கும் நிஸிபஸுக்கும் சென்றார்கள். அங்கு அப்பட்டணங்களின் பலமான அமைப்பாலும் எண்ணிக்கையில் நிறைந்தவர்களும், வீரமிக்கவர்களுமான அப்பட்டணவாசிகளாலும் அவர்கள் பாதுகாப்பாக இருந்தார்கள்."[27]

நாஸிபின்னிலிருந்து இயேசு பெர்ஷியா வழியாக ஆப்கானிஸ்தானுக்குச் சென்று, அங்கிருந்து பஞ்சாப் வழியாக காஷ்மீருக்குள் நுழைந்தார். புழங்கிவரும் கதைகளிலிருந்து இயேசு திபெத்திற்கும் அதேபோன்று இந்தியாவின் மற்றப் பகுதிகளுக்கும் வந்தார் என்று தெரிகிறது. ஆயினும் அவர் காஷ்மீரிலே வாழ்ந்திருந்து அங்கேயே மரித்தார் என்பதே நிச்சயமானதென்று தோன்றுகின்றது.

மஸீஹ் (மேசியா) என்று இயேசு அழைக்கப்படுவதற்கான அநேகக் காரணங்களில் ஒன்று அவர் பெரும் பயணக்காரராக இருந்தார் என்பதுதான் என்று வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) எழுதுகின்றார்கள்: அபுபக்ர் முஹம்மத் அத்தார்தூஷி என்ற ஒரு முஸ்லிம் ஞானி 'ஸிராஜுல் மாலூக்' நூலில் இயேசுவைப் 'பயணிகளின் தலைவர்' என்றழைக்கிறார். (பக்கம் 6, எகிப்து 1306)

இதே போன்று, அலைந்து திரிந்து கொண்டிருந்ததாலும் ஓர் இடத்தில் தங்கியிருக்காததாலும், இயேசு மஸீஹ் என்ற பெயரால் அழைக்கப்பட்டார் என்று, லிஃஸானுல் அரப் என்னும் ஆதாரப் பூர்வமான அரபிப் பொருளகராதியில் எழுதப்பட்டிருக்கிறது.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுடைய மணி மொழிகளும், நாயகத் தோழர்களுடைய சொற்களும் பெருமளவில் தொகுக்கப் பட்டுள்ள கன்சுல்உம்மால் என்னும் நூலில், "ஓ ஈசாவே, (இயேசுவே) ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நகர்ந்து சென்று கொண்டிரும். இல்லையேல், உம்மை அடையாளம் கண்டு தண்டனைக்கு உள்ளாக்குவார்கள்" என்று இறைவன் இயேசுவுக்கு அருளியதாக அபூஹுரைரா (ரலி) சொன்னார்கள் என எழுதப்பட்டுள்ளது.

அதே நூலில் ஜாபிர் (ரலி) இயேசுவைப் பற்றி அறிவித்ததையும் நாம் படிக்கலாம். அதாவது, இயேசு இடைவிடாமல் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டிற்குச் சென்றார். இரவு நேரத்தில் அவர் எங்கிருந்தாலும் சரியே. காட்டு விளை பொருட்களை உண்டு, தெளிந்த நீரை அருந்துவார்கள் என்று அந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேலும் அதே நூலில், அப்துல்லா இப்னு உமர் (ரலி) அறிவித்த ஒரு குறிப்பு உள்ளது. அது கீழ்க்கண்டவாறு:

“அல்லாஹ்வின் பார்வையில் மிகவும் விரும்பத்தக்கவர்கள் ‘காரிப்’ என்பவர்களே என்று திருநபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள். காரிப் என்பதற்கு என்ன பொருள் என்று வினவியபொழுது அவர்கள் இயேசுவைப் போன்று தங்களுடைய விசுவாசத்தைக் காப்பதற்காகத் தங்களுடைய நாட்டைத் துறந்து ஓடிச் செல்லுபவர்கள் என்று பதிலுரைத்தார்கள்.” (புத்தகம் 2, பக்கம் 34, 71 - புத்தகம் 6, பக்கம் 51).

இயேசுவைப் பற்றிய இந்த அறிவிப்புகள் மிகப் பழங்காலத்தவை என்பது மட்டுமல்ல. அவை நம்பத்தகுந்த நூற்களிலும், முஸ்லிம் பாரம்பரிய ஹதீதுகளிலும், காணப்படுகின்றன. இயேசு, தம்முடைய வாழ்நாள் முழுவதும் பாலஸ்தீனத்திலேயே தங்கியிருந்தால் அவரை ‘பயணிகளின் தலைவர்’ என்று அழைப்பதில் எவ்வித நியாயமுமில்லை. ஆகவே எச்சார்புமற்ற பல்வேறு மூலாதாரங்களிலிருந்து நமக்குக் கிடைத்துள்ள இந்த அறிக்கைகளைக் கருத்தில் கொண்டு பார்த்தால், இயேசு பாலஸ்தீனத்திலிருந்து நிச்சயமாக வெளியேறிச் சென்று, ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாடாக அலைந்து திரிந்து கடைசியில் இந்தியா வந்தடைந்தார். இவ்வகையில் ‘பயணிகளின் தலைவர்’ என்ற பட்டத்துக்கு அவர் தகுதியானவரே!

## *குறிப்புகள்*

*1. டாக்டர் சுவிட்சர் ‘தி கொஸ்ட் ஆஃப் தி ஹிஸ்டாரிக்கல் ஜீஸஸ்’ - பக்கம் 55*
*2. டோக்கர் எழுதிய இஃப் ஜீஸஸ் டிட் நாட் டை அப் ஆன் தி கிராஸ்? - பக்கம் 70, 78.*
*3. II கொரிந்தியர் 12 : 2*





*4. யூதக் கலைக்களஞ்சியம் - தலைப்பு ‘மோசே’*
*5. ஷஹீஹுல் புஹாரி, வால்யூம் 2-191 (எகிப்து 1932)*
*6. **A complete concordance of the Holy Scripture** - அலெக்சாண்டர் குருடன் எழுதியது டிரைப் என்ற தலைப்பைக் காணவும்.*
*7. ஆல்பிரெட் ஈடெர்ஷீம் எழுதிய **The Life and Times of Jesus. The Messiah** - பக்கம் 13, 16 - இலண்டன் 1906.*
*8. யூதக் கலைக்களஞ்சியம் - தலைப்பு ‘கோத்திரங்கள்’*
*9. **Chamber's Ency.** - தலைப்பு ‘யூதர்கள்’*
*10. பெல்லூஸ் எழுதிய ‘ரேசஸ் ஆஃப் ஆப்கானிஸ்தான்’ - பக்கம் 15 கல்கத்தா 1880*
*11. டாக்டர் ஏ. ஈடெர்ஷீம் எழுதிய ‘தி லைஃப் அண்ட் டைம்ஸ் ஆஃப் ஜீஸஸ் தி மெசாயா’ - பக்கம் 15*
*12. பிரிட்டானியாயக் கலைக்களஞ்சியம் - இரண்டாம் பதிப்பு; ஆப்கானிஸ்தான்*
*13. ஜேம்ஸ் ஹூக் எழுதிய ‘ஹிஸ்டரி ஆஃப் கிறிஸ்டியானிட்டி இன் இண்டியா’ - பக்கம் 281, 288; எம். மனோச்சியின் ‘ஞாபகக் குறிப்பேடுகள்’ என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்ட ‘மொகலாய சாம்ராஜ்ஜியத்தின் பொது வரலாறு’ பக்கம் 195-196*
*14. ஜான்ஸ்டன் எழுதிய ‘டிக்ஷனரி ஆஃப் ஜியோகிராபி’ - தலைப்பு ‘காஷ்மீர்’ - இலண்டன்.*
*15. பெர்னியர் எழுதிய ‘டிராவல்ஸ் இன் மொகல் எம்பயர்’ ஏ. கான்ஸ்டபிள் மொழி பெயர்த்தது. (1891). பக்கம் 430 - 431. ஆக்ஸ்போர்டு யுனிவர்சிடி பிரஸ், 1914.*
*16. காஷ்மீர் - ஸர்.ப். யங்ஹஸ்பண்ட் K.C.I.E. எழுதியது - பக்கம் 125, 129, 130 - இலண்டன், ஆதம் & சார்லஸ் பிளாக்; 1911*
*17. ‘ஹிஸ்டரி ஆஃப் பனி இஸ்ரேல் ஆஃப் இண்டியா’ - பக்கம் 5, 6, 23 - டெல் அவிவ் 1937*
*18. மத்தேயு 15 : 24*
*19. மத்தேயு 10 : 6*
*20. யோவான் 10 : 16*
*21. மத்தேயு 13 : 57*
*22. மத்தேயு 18 : 12-13*
*23. பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் - 14வது பதிப்பு - தலைப்பு தூய தோமஸ்*
*24. ‘தி ஸ்பெக்டேட்டர்’ எண்.5634 - ஜூன் 19, 1936 பக்கம் 1124 இலண்டன்.*
*25. ‘கிரேட் பிரிட்டன் அண்ட் தி ஈஸ்ட்’ - டிசம்பர் 3, 1936 - இலண்டன்.*
*26. டாக்கர் எழுதிய ‘இஃப் ஜீஸஸ் டிட் நாட் டை அப்பான் தி கிராஸ்’ - பக்கம் 75-76*
*27. ‘தி ஒர்க்ஸ் ஆஃப் பிளேவியஸ் ஜோசபஸ்’ - வொயிட்சன் மொழி பெயர்த்தது. ஸர் C.W. வில்சனின் குறிப்புக்களைக் கொண்டது - 3 ஆம் புத்தகம், பக்கம் 324, இலண்டன் - 1889.*

# அத்தியாயம் - 12

## மக்களறியாத இயேசுவின் வாழ்க்கை

### புத்த மதத்தவர்களும் இயேசுவும்

இயேசு இந்தியாவுக்குப் போகவே செய்தார் என்பதற்கு மற்றொரு ஆதாரம் பழங்காலப் புத்தமத எழுத்துச் சான்றுகளாகும். இவற்றில் இயேசு இந்தியாவுக்குப் புறப்பட்டுச் சென்றார் என்றும், அங்கு பலவிடங்களில் இறைவனின் வார்த்தையைப் போதித்தார் என்றும் மிகத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. 1811ல் பதிப்பிக்கப்பட்ட 'புக் ஆஃப் டிராவல்' என்ற தமது நூலில் ஜான் பிங்கர்ஸன் "பழங்கால லாமாக்களின் புத்தகங்களிலிருந்து, கிறிஸ்தவ மார்க்கம் அங்கு போதிக்கப்பட்டதற்கான சில துப்புகள் இருப்பதாக அநேக பிரச்சாரகர்கள் ஊகித்திருக்கிறார்கள். அப்போஸ்தலர்களின் காலத்தில் அம்மதம் போதிக்கப்பட்டதாக அவர்கள் கருதுகிறார்கள்" என்று கூறுகிறார்.[1]

துருக்கி - ரஷ்யப்போர் (1877-1878) முடிவடைந்த பின்னர், நிகொலாஸ் நோடோவிச் என்ற பெயருடைய ஒரு ரஷ்யப் பயணி பல நாடுகளுக்குச் சென்றுவிட்டு இறுதியாக (1887ல்) இந்தியா வந்தடைந்தார். புத்த மடாலயம் ஒன்றுக்கு அவர் வருகை தந்து பார்வையிட்டுக் கொண்டிருக்கையில், இயேசுவின் வாழ்க்கையையும், மேற்கத்திய சமுதாயத்தாரைப் பற்றியும் கூறக்கூடிய குறிப்புகள் லாசாவிலுள்ள பத்திரக் களரியில் இருந்து வருகின்றன என்று தலைமை லாமாவிடமிருந்து அறிந்து கொண்டார். அவர் ஐரோப்பாவுக்குத் திரும்பி வந்ததும், (தாம் கொண்டு வந்திருந்த) இயேசுவின் வாழ்க்கை பற்றிய குறிப்புகளை ஒழுங்குபடுத்தினார். அவற்றைப் பிரசுரிக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு 'கீவி'ன் **(Kiev)** புகழ்மிக்க பேராயர் மொன்செய்னியூர் பிளேட்டன் அவர்களிடம் மறு பரிசீலனைக்காக அவற்றைச் சமர்ப்பித்தார். அவர் கண்டுபிடித்திருந்த விஷயத்தின் முக்கியத்துவத்தை பேராயர் உணர்ந்துகொண்ட போதிலும், அவ்வாறு செய்வது அவருடைய (நோடோவிச்சுயை) தனிப்பட்ட





நன்மைக்கே எதிரானது என்று கூறி அக்குறிப்புரைகளைப் பொதுமக்களுக்கு விளம்பரப்படுத்துவதைத் தடுக்க முயன்றார். ஏன்? அதற்குரிய விளக்கம் தருவதற்கு, அவர் மறுத்து விட்டார். ஒரு வருடம் கழித்து நோடேவிச்சுக்கு ரோம் நகரிலிருக்கக்கூடிய ஒரு வாய்ப்புக் கிடைத்தது. அதோடு மறைத் தந்தையின் பார்வையில் உயர்ந்த நிலையிலிருக்கக் கூடிய ஒரு கர்தினால் வசம் தமது கையெழுத்துக் குறிப்புகளை சமர்ப்பிப்பதற்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. அந்த கர்தினாலோ, இதனை ஏன் அச்சிட வேண்டும்? ஒருவரும் இதற்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க மாட்டார்கள். மேலும் இதன் மூலம் உனக்கெதிராக எண்ணற்ற விரோதிகளை நீ உண்டாக்கிக் கொள்ளுவாய். ஆகவே உனக்குப் பணம் தேவையானால், இந்தக் குறிப்புகளுக்கு ஈடாக நான் ஏதேனும் தொகை தந்து விடுகிறேன் என்று கூறினார். இவ்விதம் பணம் தர முன்வந்ததை நோடோவிச் ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டது இயற்கையே. பின்னர் அவர் தாம் கான்ஸ்டான்டிநோபிளில் சந்தித்த கர்தினால் ரோட்டெலியின் முன்னால் தம் திட்டத்தை விவரித்தார். அவரும் அக்குறிப்புகளைப் பிரசுரிப்பதற்கு இன்னும் காலம் கனியவில்லை என்ற பாவனையில் அதனைப் பிரசுரிப்பதை எதிர்த்தார். அவர் மேலும் கூறுகையில் "தற்போது நிலவி வரும் நாத்திகக் கொள்கைகளால் கிறிஸ்தவ திருச்சபை மிகவும் ஆழ்ந்த சங்கடத்திற்குள்ளாகியிருக்கிறது. கிறிஸ்தவ மதக் கொள்கையை இழித்தும் பழித்தும் கூறிக்கொண்டிருப்பவர்களுக்கு நீ இன்னும் புதிய உணவு படைத்தவனாவாய்" என்று சொன்னார். ஒருவாறாகக் கடைசியில், நோடோவிச் தமது புத்தகத்தை, 'தி அந்நோன் லைஃப் ஆஃப் ஜீசஸ்' என்ற பெயரில் வெளியிட்டார். "என்னுடைய புத்தகத்தை குற்றம் குறை சொல்லுவதற்கு முன்னால் விஞ்ஞானக் கழகங்கள் அதிகப் பொருட்செலவில்லாமல் ஓர் ஆராய்ச்சிக் குழுவை ஏற்படுத்த வேண்டும். (மேற்சொன்ன) கையெழுத்துப் பிரதிகள் காணப்படும் பிரதேசத்திற்குச் சென்று அவற்றை ஆராய்ந்து அவற்றின் வரலாற்று மதிப்பைத் தேர்ந்து அறிதலே அக்குழுவின் பணியாகும்."[2]

அந்தப் புத்தகத்தில் ஆசிரியர் நோட்டோவிச் இவ்விதம் எழுதுகிறார் :

"உங்களுடைய நோப்பாக்களில் ஒன்றுக்கு நான் வந்திருந்த போது ஒரு லாமா, ஒரு தீர்க்கதரிசியைப் பற்றி - அல்லது நீங்கள் அழைப்பது போன்று ஒரு புத்தா வைப்பற்றி - அவருடைய பெயர் ஈசா - என்னிடம் பேசினார். நான் அவரிடம் 'நீங்கள் அவரைப் பற்றிச் சொல்ல இயலுமா?' என்று கேட்டேன். 'பிரதம லாமாக்களைத் தவிர மற்றவர்களுக்கு அவரைப் பற்றி ஏதும் தெரியாவிட்டாலும், புத்த மதத்தவர்களுக்கு மத்தியில் ஈசாவின் பெயர் பெரிதும் கண்ணியப் படுத்தப்படுகிறது. பிரதம லாமாக்கள் மாத்திரமே, அவருடைய வாழ்க்கை சம்பந்தப்பட்ட தோல் ஏடுகளைப் படித்திருக்கிறார்கள்" என்று பதில் கூறினார். (பக்கம் 90)

"நல்ல நிலையிலுள்ள நோப்பாக்களில் ஒன்றாகிய நமது நோப்பாவில், ஏற்கனவே ஏராளமான கையெழுத்துப் பிரதிகள் உள்ளன. என்னுடைய ஓய்வு வேளைகளில் நான் அவற்றைப் படித்துப் பார்த்தேன். இவற்றுள், இந்தியாவிலும் இஸ்ரவேல் மக்களுக்குப் போதித்த ஈசா (இயேசு)வுடைய வாழ்க்கை, செயல் முறை ஆகியவை பற்றிய விளக்கங்களைக் கண்டேன்." (பக்கம் 91)

"ஈசாவின் வாழ்க்கை சம்பந்தப்பட்ட பிரதான ஏட்டுச் சுருள்கள் எந்த மொழியில் எழுதப்பட்டிருக்கின்றன?" என்று நான் கேட்டேன்.

"ஈசாவின் வாழ்க்கையைப் பற்றிக் கூறுவதும், இந்தியாவிலிருந்து நேப்பாளத்திற்குக் கொண்டு வரப்பட்டு நேப்பாளத்திலிருந்து திபெத்திற்குக் கொண்டு செல்லப்பட்டதுமான ஏட்டுச் சுருள்கள் பாலி மொழியில் எழுதப்பட்டவை. அவை இப்போது லாசாவில் இருக்கின்றன. ஆயினும் எங்களுடைய மொழியில் - அதாவது திபெத்திய மொழியிலேயே - எழுதப்பட்ட ஒரு பிரதி எங்களிடம் இருக்கிறது." (பக்கம் 93)

இறுதியாக, எனது உண்மையான வேண்டுதலுக்கு இடம் கொடுத்து அவர் இரண்டு பெரிய புத்தகங்களைக் கொண்டு வந்தார்.





"அவை கனத்த அட்டைகளோடும், காலத்தால் முற்பட்டவை யாதலால் மஞ்சள்பூத்த தாள்களோடும், இருந்தன. ஈசாவின் வாழ்க்கை வரலாற்றை அவர் வாசிக்க, அவருடைய மொழிபெயர்ப்பிலிருந்து நான் மிகுந்த கவனத்தோடு குறிப்பெடுத்துக் கொண்டேன். விந்தைமிக்க இந்த ஆதாரநூல் தனித்தனிப் பாடல்களின் வடிவத்தில் எழுதப் பட்டிருக்கிறது. ஒரு பாடலுக்கும் மற்றொரு பாடலுக்கும் அநேகமாகத் தொடர்பு இல்லை." (பக்கம் 96)

இந்தப் பழங்கால எழுத்துப் பிரதிகளில் கூறப்பட்டுள்ளபடி, ஈசா (இயேசு) வுக்குப் பதின்மூன்று வயதான போது - அதாவது ஓர் இஸ்ரவேலன் தனக்கொரு மனைவியைத் தேர்ந்தெடுக்க வேண்டிய வயதில் - அவர் தம்முடைய தந்தை வீட்டை விட்டுப்பிரிந்து, எருசலேமை விட்டு வெளியேறினார். சில வியாபாரிகளோடு சேர்ந்து கொண்டு, இறையருளில் தம்மை முழுமையாக்கிக் கொள்ளவும், மகாபுத்தருடைய மார்க்கச் சட்டத்தை கற்றுக் கொள்ளவும் அவர் சிந்துவை நோக்கிப் பயணம் செய்தார். (பக்கம் 107)

அவருக்கு பதினான்கு வயதாகிக் கொண்டிருக்கையில் (இறைவனால் ஆசீர்வதிக்கப்பட்டவராகிய) இளம் ஈசா, சிந்துவையும் கடந்து பயணம் செய்து ஆரியர்களுக்கு மத்தியில் குடியமர்ந்தார்... வடக்குப்புற சிந்துப் பிரதேசம் நெடுகிலும் அவருடைய பேரும் புகழும் பரவின. ஐந்து நதி பாயும் நாட்டின் வழியேயும், ராஜபுதனத்தோடேயும் அவர் கடந்து செல்லுகையில், ஜைனக் கடவுளின் பக்தர்கள் தங்களுடன் அவர் தங்கியிருக்க வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக் கொண்டார்கள். (பக்கம் 107)

பின்னர் அவர் ஓர்சிஸ் மாநிலத்திலுள்ள ஜக்கர் நாத்துக்குச் சென்றார். பிரம்மாவைத் துதிக்கும் வெள்ளைப் பூசாரிகள், அவருக்கு வேதங்களை வாசித்து விளங்கிக் கொள்ளுவதற்கும், பிரார்த்தனை மூலம் நோயைக் குணப்படுத்துவதற்கும், புனித வேதத்தைக் கற்றுக் கொடுத்து விளக்கம் கூறுவதற்கும், மனிதனிடமிருந்து கெட்ட ஆவிகளை ஓட்டி அவனை

மனிதனாக்குவதற்கும் கற்றுக் கொடுத்தார்கள். ஜக்கர்நாத், ராஜகிரிஹா, பெனாரஸ் மற்றுமுள்ள புனிதத் தலங்களில் ஆறு ஆண்டுகளைக் கழித்தார். வைசியர்களுக்கும் சூத்திரர்களுக்கும் புனித வேதங்களைக் கற்றுக் கொடுத்து அவர்களோடு ஈசா சமாதானமாக வாழ்ந்து வந்ததால் அவரை எல்லாரும் நேசித்தார்கள். ஆனால் பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் அவரை எதித்தனர். (பக்கம் 108)

இயேசு இந்திய மக்களுக்குப் போதித்ததாக, இந்தப் பழங்கால ஏடுகளில் அடங்கியுள்ள சில போதனைகளை நான் கீழே குறிப்பிடுகிறேன்.

1) “பிதாவாகிய இறைவன், தனது பிள்ளைகளுக்கிடையில் எவ்விதமான வித்தியாசமும் கற்பிக்கவில்லை. அவர்கள் எல்லாரும் அவரிடத்தில் ஒரே சமமான அன்பைப் பெறுகிறார்கள்”. (பக்கம் 109)

2) உன்னுடைய இறைவனுக்கே பயந்து, அவனுக்கு முன்பாக மட்டுமே முழங்காலிட்டுப் பணியுங்கள். அவனுக்கு மட்டுமே உங்களுடைய காணிக்கைகள் செலுத்தப்பட வேண்டும்.

3) “இயேசு, ‘திரிமூர்த்தி’ கொள்கையையும், விஷ்ணு சிவன் மற்றும் பல கடவுளராகப் பரப்பிரம்மம் பிறவி எடுப்பதையும் மறுத்தார். ‘என்றுமழியாத நியாயாதிபதியும், என்றுமழியாத பரிசுத்த ஆவியுமாகிய இறைவன் ஒன்றே ஒன்றாகவும், பிரபஞ்சம் முழுமைக்குமாக பிரிக்கமுடியாத ஆன்மாகவும் இருக்கிறான். அவனே யாவற்றையும் படைத்து அழித்து, மீண்டும் உயிர்ப்பிப்பவனாகவும் இருக்கிறான்’ என்று அவர் கூறுகிறார். அவனே நாடினான். அவனே படைத்தான். அவனே ஆதிகாலத்திலிருந்து இருந்து வருகிறான். அவனே முடிவில்லாமலும் இருந்து வருவான். இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் அவனுக்கு இணையேயில்லை. படைப்போனாகிய இறைவன், உங்களுக்குக் கற்பிக்கப்பட்டிருப்பதைப் போல, தன்னுடைய வல்லமையை வேறு எவரோடுமோ அதற்குக் குறைந்த உயிரற்ற பொருட்களோடுமோ,





பங்கிட்டுக் கொள்ளுவதில்லை. ஏனென்றால் அவன் ஒருவனே மிகைத்த வல்லமையுடையோனாய் இருக்கிறான்.” (பக்கம் 110)

“அவன் நாடினான். உடனே உலகம் தோன்றி விட்டது... நீர், விலங்கினங்கள் மற்றும் அவன் படைத்த எல்லாவற்றையும், இன்னும் ஒவ்வொன்றுக்கும் ஒரு காலவரம்பை நிச்சயித்து, மாற்றம் செய்ய முடியாத ஒழுங்கில் அவன் கிரமமாகக் கையாண்டு வருவனவற்றையும் மனிதனுக்குக் கீழ்நிலையில் வைத்தான். இறையோனின் கோபம் விரைவில் மனிதனின்மேல் வந்திறங்கும். ஏனெனில், அவன் தன்னைப் படைத்தவனை மறந்துவிட்டு, இறைவனுடைய ஆலயங்களை அருவெறுக்கத்தக்கவைகளால் நிரப்பிக் கொண்டான்.” (பக்கம் 111)

“சூத்திரர்களுக்கு ஈசா போதித்தவற்றை அறிந்த வெள்ளைப் பூசாரிகளும் க்ஷத்திரியர்களும் அந்த இளம் தீர்க்கதரிசியை கொல்லத் தீர்மானித்து அவரைக் தேடிக் காரியத்தை முடிப்பதற்காக, அவர்களுடைய ஊழியர்களை அனுப்பி வைத்தார்கள்.” (பக்கம் 112)

“ஆனால் வரவிருந்த அபாயத்தைப் பற்றி சூத்திரர்களால் எச்சரிக்கை செய்யப்பட்ட ஈசா, ஜக்கர்நாத்திலிருந்து மகாபுத்தரின் பிறந்த இடத்திற்கு இரவோடிரவாக ஓடிச் சென்றார். ஆறு வருடங்கள் கழித்து, நேபாளத்தையும் இமாலயங்களையும் விட்டுப் பிரிந்து ராஜபுதனப் பள்ளத்தாக்கில் இறங்கி, மிக மேலான மனிதப்படைப்பைப் பற்றிப் பலதரப்பட்ட மக்களுக்கும் போதித்தவாறே மேற்கு முகமாய்ச் சென்றார்.” (பக்கம் 113)

“ஈசா நிகழ்த்திய சொற்பொழிவின் புகழ் பக்கத்திலிருந்த நாடுகளுக்கும் பரவியது. அவர் பாரசீகம் போய்ச்சேர்ந்த போது அங்குள்ள குருமார்கள் பயங்கொண்டு அவர் கூறுவதைக் கவனிக்க வேண்டாமென்று சொல்லி மக்களைத் தடுத்தார்கள்.” (பக்கம் 119)

“பாலஸ்தீனத்துக்கு ஈசா வந்தடைந்தபோது, இறைவனின் வார்த்தையால் இஸ்ரவேலர்களுக்குத் தைரிய மூட்டியவராய் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குச் சென்று கொண்டிருந்தார். பன்னெடுங்காலமாக மனச்சோர்வடைந்திருந்த இஸ்ரவேலர்கள்

அவருக்குக் கீழ்படிய ஆயத்தமாக இருந்தார்கள். அவரது போதனையைக் கேட்க ஆயிரக்கணக்கில் அவரைப் பின் தொடர்ந்து வந்தார்கள்.” (பக்கம் 126)

“ஆனால் அந்தப் பட்டணங்களை நிர்வகித்து வந்தவர்கள் அவருக்குப் பயந்து, அவருக்கு எதிரான குற்றசாட்டுகளை எருசலேமின் கவர்னரான பிலாத்து வசம் அனுப்பினார்கள். போதகர் ஈசாவைக் கைது செய்து, நீதிபதிகள் முன்னிலையில் கொண்டுவரும்படி பிலாத்து கட்டளையிட்டார். ஆலயத்தில் வைத்து அவருக்கு நீதி வழங்கும்படி வேதபாரகர்களுக்கும், எபிரேய இனத்தைச் சேர்ந்த கற்றறிந்த மூப்பர்களுக்கும் பிலாத்து உத்தரவிட்டார்.” (பக்கம் 127)

“மேலே கூறப்பட்டவர்கள், ஈசாவை விசாரணை செய்து, ‘எங்களுடைய மக்களைப் புரட்சிக்குத் தூண்டி விடுபவர் என்று நீங்கள் குற்றம் சாட்டிய மனிதரை நாங்கள் விசாரித்தோம். நாங்கள் அவரது போதனையைக் கேட்டதில், அவர் எங்களுடைய மக்களைச் சேர்ந்தவர் என்பதையும் அறிகிறோம்’ என்று கவர்னருக்கு அறிவித்தார்கள்.” (பக்கம் 131)

“கவர்னர் வேவுகாரர்களை அனுப்பினார். இறுதியில் ஈசா சிறைப்பிடிக்கப்பட்டார். ஈசாவின்மீது தீர்ப்புக் கூறுவதற்காக பிரதான நிர்வாகிகளையும், வேத பாரகர்களையும், மூப்பர்களையும் சட்ட வல்லுநர்களையும் பிலாத்து ஒன்று திரட்டியிருந்தார். சிறையிலிருந்து வெளியே கொண்டு வரப்பட்ட ஈசா, அவருடன் விசாரிக்கப்பட இருந்த இரண்டு திருடர்களுக்கு மத்தியில் கவர்னருடைய முன்னிலையில் அமர்த்தப்பட்டார்.” (பக்கம் 140)

“ஆனால் அவர்கள் பிலாத்துவிடம் ‘ஒன்றுமறியாத ஒருவரைக் குற்றவாளியாக்கி, திருடர்கள் இருவரையும் விடுதலை செய்யும் பெரும் பாவத்தை எங்கள் தலைமீது ஏற்றுக் கொள்ளமாட்டோம். அது எங்களுடைய சட்டத்திற்கு முரணானது. ஆகவே நீங்கள் விரும்பியபடி செய்து கொள்ளுங்கள் என்று சொல்லி விட்டார். இப்படிச் சொல்லி விட்டு வேதபாரகர்களும், ஞானவான்களும் வெளியேறிச் சென்று, ஒரு நீதிமானுடைய





மரணத்தைக் குறித்து நாங்கள் ஒரு குற்றமும் அறியாதவர்களா யிருக்கிறோம்’ என்று சொல்லிப் புனிதப் பாத்திரத்தில் கைகளைக் கழுவிக் கொண்டார்கள்.” (பக்கம் 143)

“பின்னர் கவர்னரின் ஆணைப்படி இயேசு சிலுவையில் அறையப்பட்டார். திருடர்கள் இருவரும் அறையப்பட்டார்கள். அன்று முழுவதும் அவர் சிலுவையில் தொங்கியிருந்து மாலையில் மரித்து விட்டார். மூன்று தினங்களுக்குப் பின்னர், பொதுமக்கள் கிளர்ந்தெழுவார்கள் என்ற பயத்தினால் ஈசாவின் உடம்பைக் கீழேயிறக்கி வேறொரு இடத்தில் புதைத்துவிடுவதற்காக கவர்னர் தன்னுடைய போர் வீரர்களை அனுப்பி வைத்தார். மறுநாள் கல்லறை திறந்து கிடந்ததையும், அங்கே அவரைக் காணாதிருந்ததையும் மக்கள் கூட்டம் கண்டு கொண்டது. ஆகவே மேன்மைமிக்க நீதிபதியாகிய இறைவன் தேவதூதர்களை அனுப்பி, அம்மகானுடைய பூத உடலைத் தூக்கிச் சென்றான் என்ற வதந்தி உடனடியாகப் பரவலாயிற்று.” (பக்கம் 145)

எப்.ஏ. பிளாட்னெர் தமது ‘கிறிஸ்டியன் இன்டியா’ என்ற நூலில் இவ்வாறு எழுதுகிறார்:

“இந்தப் பகுதிகளுக்கு இயேசு வந்தார் என்ற கதையை, நாங்கள் ‘லே’ என்னுமிடத்தில் மறுமுறையாக எதிர்கொள்ள வேண்டியதிருந்தது. ‘லே’யின் போஸ்ட்மாஸ்டராகிய ஓர் இந்துவும், மற்றும் லடாக்கைச் சேர்ந்த அநேக புத்த மதத்தவர்களும், ‘லே’யில் கடைவீதிக்கருகில் இப்போதும் ஒரு குளம் இருப்பதாகவும், அதன் அருகில் காலத்தால் முதிர்ந்த ஒரு மரம் நின்றதாகவும் எங்களிடம் சொன்னார்கள். பாலஸ்தீனத்திற்குப் புறப்படும் முன்னர், இம்மரத்தின் அடியில் அமர்ந்து இயேசு மக்களுக்குப் போதித்தாராம். இயேசு சிறுவராக இருந்தபோதே, எவ்வாறு ஒரு வர்த்தகக் கூட்டத்தாரோடு இந்தியாவுக்கு வந்தார்; அவர் எவ்வாறு இமாலயத்தில் உயர்ந்த ஞானக் கல்வியைத் தொடர்ந்து கற்றார் என்பதைக் கூறும் மற்றொரு கதையையும் நாங்கள் கேள்விப்பட்டோம். லடாக், சிங்கியாங், மங்கோலியா

ஆகியவற்றில் நிறைந்து பரவியிருக்கும் இதே கதை பல்வேறு வடிவத்தில் பேசப்படுவதையும் நாங்கள் கேட்டோம். ஆனால் அவையாவும் ஒரு விஷயத்தில் ஒன்றுபட்டிருந்தன. அதாவது இயேசு பாலஸ்தீனத்தில் இல்லாதிருந்த காலத்தில் அவர் இந்தியாவிலும் ஆசியாவிலும் இருந்தார் என்பதே அது. எப்படி, எங்கிருந்து இந்தக் கதை உருவாயிற்று என்பது பிரச்சினையல்ல. ஒருவேளை இது நெஸ்டோரிய அடிப்படையைச் சார்ந்ததாக இருக்கலாம். இந்தக் கதை முழுக்க முழுக்க நேர்மை உள்ளத்தோடு கூறப்படுகிறது என்பது மிகுந்த மதிப்புடன் கவனிக்கத் தக்கதாகும்.” (பக்கம் 29)

இந்தத் தோல் சுருள்களில் கண்டுள்ளபடி, ஈசா இஸ்ரவேல் நாட்டிற்கு வந்து சேர்ந்த போது அவருக்கு வயது 29. மேற்கண்ட விவரங்களிலிருந்து பாலஸ்தீனத்து யூதர்கள் இயேசுவை எதிர்க்காமல் வரவேற்றார்கள் என்றும், அவர் சொல்லுவதைக் கேட்டு அவரோடு சேர்ந்து கொண்டார்கள் என்றும் ரோமானிய கவர்னராகிய பிலாத்துதான் அவர்களுடைய விருப்பத்திற்கு மாறாக, அநியாயமான முறையில் அவரைச் சிலுவையிலறைந்தார் என்றும் தெளிவாகத் தெரிகிறது. இந்த விவரங்கள் யாவும், சுவிசேஷ எழுத்தாளர்கள் நால்வருடைய விவரங்களுக்கும் நேர்முரணாக இருக்கின்றன என்பது மிகவும் தெளிவு.

சரித்திர நிகழ்ச்சிகளில் இத்தகைய ஒரு நிகழ்ச்சியைக் கண்டால் நாம் எவ்வாறு சோதித்து உண்மையை அறிவோமோ, அதேபோன்று இந்த நிகழ்ச்சியையும் சோதித்தால், உண்மையைக் கண்டு கெள்ளுவதில் நமக்கு எவ்விதக் கஷ்டமும் நேராது. சிலுவை தண்டனை சம்பந்தப்பட்ட இந்த விளக்கங்கள் கண்ணால் கண்ட ஒருவருடைய சாட்சியமோ இயேசுவின் சீஷர்களின் ஒருவருடைய சாட்சியமோ அல்ல என்பது மிகவும் தெளிவான விஷயம். இது வெறும் வதந்திதான். ஆரம்பகால எழுத்தாளர்களால் உண்மை குழம்பிப் போயிருக்கலாம். அல்லது கதையைக் கூறியவர், தாம் கேட்டிருந்த வதந்தியை ஆதாரமாகக் கொண்டு தவறான தகவல்களைக் கொடுத்திருக்கலாம். இவை நடக்கக் கூடியதே.





இதைப்பற்றி அப்புத்தகத்தின் ஆசிரியரே (நோடாவிச்) இவ்வாறு கூறுகிறார்:

“இந்த விஷயத்தை இங்கு குறிப்பிட வேண்டியது அவசிய மாகும் - நம்முடைய காலத்தில் நடப்பது போலவே, பழமையான அந்தக் காலத்தில் மக்கள் வாழ்க்கையின் முக்கியமான அம்சமாக கடைவீதிகள் விளங்கின. அன்றாட நிகழ்ச்சிகளும், வெளிநாட்டு விஷயங்களும் வர்த்தகக் கூட்டத்தாரால் அங்கு மற்றவர்களுக்கு எடுத்துரைக்கப்பட்டன. வர்த்தகங்களைத் தொடர்ந்து வந்த தர்வேஷ் (துறவி)கள், பிரயாணத்தின்போது தாம் கேள்விப்பட்டதும், பார்த்ததுமான எல்லாவற்றையும் உற்சாகத்தோடு தெரிவித்துவிட்டு அதற்கு ஈடான உணவு பெற்றுக் கொண்டார்கள். உண்மையில் அவர்களுடைய பிழைப்புக்கு இது ஒன்றே வழியாகவும் இருந்தது.” (பக்கம் 150)

“ஹிமிஸ் மடாலயத்திலுள்ள லாமாவால் எனக்கு வாசித்துக் காட்டப்பட்ட இரண்டு கையெழுத்துப் பிரதிகளும், திபெத்திய மொழியில் எழுதப்பட்ட வெவ்வேறு பிரதிகளிலிருந்து தொகுக்கப்பட்டவையாகும். அவை, லாசா நூலகத்திற்குச் சொந்தமானதும், இந்தியா, நேபாளம், மகதா ஆகிய நாடுகளிலிருந்து இயேசுவுக்குப் பின்னர் இருநூறு ஆண்டுகள் கழித்து கொண்டு வரப்பட்டவையுமான தோல் சுருள்களி லிருந்து மொழிபெயர்க்கப்பட்டவையாகும்... அதிலடங்கியுள்ள இயேசுவைப் பற்றிய தகவல்கள், அக்காலத்தில் நடந்தேறிய மற்ற நிகழ்ச்சிகளோடு எவ்விதத் தொடர்பும், சம்பந்தமும் இல்லாமல் விந்தையான முறையில் கலந்து எழுதப்பட்டுள்ளன.” (பக்கம் 151)

புத்த குருமார்கள் தகவல் சேகரிக்கும் முறையைக் கவனத்தில் கொண்டு பார்த்தால், அவர்கள் எழுதியுள்ளவற்றை அவ்வளவு ஆதாரமானவைகளாக நம்மால் ஏற்றுக்கொள்ள இயலாது. சிலுவைத் தண்டனை நிகழ்ச்சியைப் பொருத்தவரையில் அக்கதையைச் சொன்னவரைப் பற்றி நமக்கு எதுவும் தெரியாது. சொன்னவர் யாரென்றுகூட அறியோம். அவர் நம்பத் தகுந்தவரா? நம்பத் தகுதியற்றவரா? - நமக்குத் தெரியாது. இன்னொரு

வகையாகப் பார்த்தால், யூதர்களின் எதிர்காலத்தைப்பற்றி இயேசு கூறிய தீர்க்கதரிசனம் ஒன்றை சுவிசேஷயங்களில் நாம் காண்கிறோம். தம்மை அவர்கள் மறுத்ததன் காரணமாக, பரலோக ராஜ்யம் அவர்களுக்கு இல்லாமல் போய்விடும் என்று அவர் கூறியிருக்கிறார். அதாவது எதிர்காலத்தில் அவர்களிலிருந்து யாதொரு தீர்க்கதரிசியும் தோன்றமாட்டார் என்பதேயாகும். இத்தீர்க்கதரிசனம் அதன் சொற்பொருளின்படி நிறைவேறி விட்டது. எனவே, சுவிசேஷங்களில் கூறப்பட்ட நிகழ்ச்சிகளைக் கருத்தில் கொண்டு பார்த்தால், புத்தமத எழுத்துச் சுருள்களை ஆதாரபூர்வமானதாகவும், உண்மையானவை யாகவும் கொள்ள முடியாது என்று நான் தயங்காமல் கூறுவேன். இந்தப் பழங்கால எழுத்துச் சான்றுகளிலிருந்து நாம் என்ன முடிவுக்கு வருகிறோமென்றால், இயேசு நிச்சயமாக இந்தியாவுக்குச் சென்று, நெடுங்காலம் வாழ்ந்திருந்தார். அந்தக் காலத்தில் அவர் இந்திய மக்களுக்கு இறைவனின் வார்த்தைகளைப் போதித்தார் என்பதுதான். இயேசு போதித்தவையாகக் கூறப்படுவனவற்றில் மேலே நான் குறிப்பிட்டுள்ள சில வசனங்கள் உயர்ந்த தன்மையிலிருப்பதோடு, ஒரு தீர்க்கதரிசியால் சொல்லத் தக்கவையாகவும் இருக்கின்றன.

இயேசு இந்தியாவுக்குச் சென்றிராவிட்டால், புத்தமத சரித்திர ஆசிரியர்கள் அவர் இந்தியாவில் போதனை செய்ததைப் பற்றிக் குறிப்பிட வேண்டிய அவசியம் இருந்திராது. ஒரு புறத்தில், அங்கு அவர் போதனை செய்ததை அவர்களால் மறுக்க முடியவில்லை. மறுபுறத்தில் புத்த குருமார்கள், பிராமணர்கள் ஆகியோரின் போதனைகளைவிட இயேசுவின் போதனைகள் மிக உயர்ந்ததாக இருக்கக் கண்டார்கள். ஆகவே, கௌதம புத்தரே பெரியவர் என்று காட்டுவதற்காக அவர்கள் வேண்டுமென்றே நிகழ்ச்சிகளைக் குழப்பி விட்டார்கள். இயேசு ஒரு தீர்க்கதரிசியாக இருந்த காலத்தில் இந்தியாவுக்கு வந்தார் என்ற உண்மையை எடுத்துக்காட்டாமலும், இந்தப் போதனைகள் உண்மையில் இயேசுவுடையவை என்று கூறாமலும், அதற்குப் பதிலாக திருமணம் செய்து கொள்ளாமல் தப்பிப்பதற்காகவும், மகாபுத்தருடைய





மார்க்கச் சட்டத்தைப் படிப்பதற்காகவும் இயேசு தமது இளம்பிராயத்தில் இந்தியாவுக்கு வந்தார் என்று சொல்லி அப்போதனைகளை புத்தருடைய போதனைகளாக மாற்றிக் காட்டினார்கள். இயேசுவுடைய காலத்திலே பாலஸ்தீனத்தில் புத்தமதத்தை ஒருவரும் அறிந்திருக்கவில்லை என்பதுதான் உண்மை. "தான் பிறந்த வீட்டினுடைய அன்பு, மனிதனுடைய நெஞ்சில் எவ்வளவு ஆழமாக வேரூன்றியிருக்கிற தென்றால், எந்த ஒரு மனிதனும் சுற்றத்தாருடைய எல்லாவிதப் பிணைப்பிலிருந்தும் அறுத்துக்கொண்டு போய் விடுவதை நினைத்துக்கூடப் பார்க்க மாட்டான் - அப்படிச் செய்வதற்குரிய மிகமிக அத்தியாவசியமான ஒரு தேவை அவனைக் கட்டாயப்படுத்தாவிட்டால்." பேரிழப்பான சிலுவை மரணத்திலிருந்து தப்பிப் பிழைத்த பின்னர், அவருடைய உயிருக்குப் பாலஸ்தீனத்தில் எப்போதும் தொடர்ந்து அபாயமிருந்ததைத் தவிர - இயேசுவுடைய வாழ்க்கையில் இப்படிப்பட்ட அத்தியாவசியம் ஒருபோதும் ஏற்பட்டதில்லை.

மற்றொரு விஷயத்தையும் இங்கு எடுத்தாராய்வது விவேகமானதென்று எண்ணுகிறேன். புத்தருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்கும், போதனைகளுக்கும் இயேசுவுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்கும், போதனைகளுக்கும் எவ்வளவு நெருங்கிய ஆச்சரியமான ஒற்றுமை இருக்கிறதென்றால், அநேக சிந்தனையாளர்கள் புத்தமதத்தினுடைய காப்பி தான் கிறிஸ்தவ மதம் என்று அறிவித்திருக்கிறார்கள்.

டாக்டர் கே.எஸ். மாக் டொனால்டு இவ்வாறு எழுதுகிறார்:

திருவாளர் ஆர்.சி. தத் அவர்கள் தமது 'ஏன்சியன்ட் இந்தியா' என்ற நூலில் 'புத்த மதமும் கிறிஸ்தவ மதமும்' என்ற அத்தியாயத்தை இந்த வார்த்தைகளோடு தொடங்கியிருக்கிறார். "புத்த மதத்திற்கும், கிறிஸ்தவ மதத்திற்கும் ஏதோ ஒரு வகையில் தொடர்பு இருக்கிறதென்று நெடுநாட்களாகச் சந்தேகம் கொள்ளுமளவிற்கு புத்தமதத்தின் போதனையும் நீதி மொழிகளும், கிறிஸ்தவ மதத்தின் போதனைகளும் நீதிமொழிகளும் ஒன்றுடன் ஒன்று ஒத்திருக்கின்றன."[3]

டாக்டர் ஏனெஸ்ட் ஜே. எய்டெல் இவ்விதம் எழுதுகிறார்:

“புத்தரின் வாழ்க்கை பற்றிய இந்த மேற்போக்கான குறிப்பில் அநேக விவரங்கள் சுவிசேஷங்களில் கூறப்பட்டுள்ள நமது கர்த்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடு விசேடமாகப் பொருந்தியிருப்பதை, கவனமாகப் படிக்கும் வாசகர்கள் கண்டு கொண்டிருப்பார்கள்.”

“சாக்கிய முனி புத்தர் பரலோகத்திலிருந்து வந்து தேவதூதர்கள் வரவேற்க ஒரு கன்னியிடம் பிறந்தார். தீர்க்கதரிசனக் காட்சிகளைக் காணும் சக்தி வாய்ந்த ஒரு வயதான முனிவரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அவர் ஒரு கோவிலுக்கு அர்ப்பணிக்கப் பட்டார். முதலில் தண்ணீரால் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டுப் பின்னர் தீயால் ஞானஸ்நானம் செய்யப்பட்டார். அவருடைய புரிந்துகொள்ளும திறனாலும், சொல்லக்கூடிய பதிலாலும் கற்றறிந்த சான்றோரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தினார். அவர் ஒரு பிசாசினால் வனாந்திரத்திற்கு கொண்டு செல்லப்பட்டு, பாவிகளுடையவும், ஆயக்காரனுடையவும் நண்பனாகிய பிசாசினால் தூண்டப்பட்டார். ஒரு மலையுச்சியில் உருவம் மாற்றப் பட்டார். நரகத்தில் இறங்குகிறார். சுவர்க்கத்தில் ஏறுகிறார் - என்றெல்லாம் அவரைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. சுருங்கக்கூறின் இயேசுவுடைய சிலுவை தண்டனை நிகழ்ச்சியைத் தவிர, ஏறக்குறைய கிறிஸ்துவின் வாழ்க்கையிலுள்ள ஒவ்வொரு குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியும், சாக்கியமுனி கௌதம புத்தரின் வாழ்க்கை பற்றிய புத்தமதப் பாரம்பரிய நூற்களில் விளக்கப் பட்டிருப்பதை கண்டு கொள்ளலாம்.”[4]

அப்படியானால், இயேசுவின் வாழ்க்கை நிகழ்ச்சிகளும் போதனைகளும் உண்மையிலேயே புத்தமதத்திலிருந்து கடன் வாங்கப்பட்டவைதானா? அல்லது டாக்டர் எய்டெல் சொல்லுவது போல அதுஒரு தற்செயலான பொருத்தமா? அவர் தம்முடைய இளம் வயதில் இந்தியாவுக்குச் சென்றாரா? அல்லது ஒரு குறிப்பிட்ட இயேசு சபை பாதிரி கூறுவது போன்று, இது ஒரு பிசாசின் வேலையா? இந்தக் குழப்படியான கேள்விக்கு இதோ





இருக்கிறது உண்மையான பதில், இக்காலத்தின் தீர்க்கதரிசியான அஹ்மது (அலை) அவர்கள் இதைப் பற்றித் தம்முடைய ‘ஜீசஸ் இன் இன்டியா’ என்ற நூலில் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்கள்.

“புத்தருக்கும் இயேசுவுக்குமிடையே இவ்வளவு தூரம் ஏன் ஒற்றுமைகள் உண்டாகியிருந்தன? என்ற கேள்வியைப் பற்றி இப்போது சிந்திப்பது பொருத்தமாக இருக்கும். இந்தியாவில் இயேசு பிரயாணம் செய்கையில் அவர் புத்த மார்க்கத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டார் என்றும் புத்தர் வாழ்க்கை நிகழ்ச்சிகளிலுள்ள உண்மையை நன்றாக அறிந்துகொண்டு, தம் நாட்டிற்குத் திரும்பி வந்ததும், தாம் அறிந்தவற்றிலிருந்து சுவிசேஷத்தை உண்டாக்கினார் என்றும் ஆரியர்கள் இது பற்றிக் கூறுகிறார்கள். எவ்வாறாயினும் இது ஆரியர்கள் செய்த கண்ணியக்குறைவான தவறு. சிலுவை நிகழ்ச்சிக்கு முன்னால் இயேசு இந்தியாவுக்கு வந்தார் என்பது முற்றிலும் பொய்யே. அந்த நேரத்தில் அப்படிப்பட்ட ஒரு பிரயாணத்தை அவர் ஏற்றுக் கொள்ளுவதற்கு எந்த விதமான தேவையுமில்லை. ஆனால் சிரியாவிலுள்ள யூதர்கள் அவரைப் புறக்கணித்து, அவரைச் சிலுவையில் அறைந்து கொன்றுவிட்டதாக நம்பியபோதுதான் அப்படிப்பட்ட பயணத்தை ஏற்றுக்கொள்ளும் அவசியம் இருந்தது. யூதர்களுக்குப் போதிப்பதில் தாம் எடுத்துக்கொண்ட முயற்சியும், அவர்களிடம் தாம் கொண்டிருந்த இரக்க உணர்வும் வீணாகிப் போய்விடவே, மேலும் யூதர்கள் தங்களுடைய தீய இயல்புகளின் காரணமாக, உண்மையை ஏற்றுக் கொள்ளுவதற்கு முடியாதபடி கடின உள்ளம் கொண்டவர்களாகி விடவே, ‘யூதர்களின் பத்துக் கோத்திரத்தார்கள் இந்தியாவை நோக்கி குடிபெயர்ந்து சென்று விட்டார்கள்’ என்று இறைவனால் அறிவிக்கப்பட்டு இயேசு அந்த இடத்திற்குப் புறப்பட்டுச் சென்றார். அந்த யூதர்களில் ஒரு பகுதியினர் புத்த மதத்தை ஏற்றுக் கொண்டிருந்ததால் அவருடைய கவனத்தைப் புத்த மதத்தைப் பின்பற்றிய அந்த யூதர்கள் மீது திருப்புவதைத் தவிர வேறு வழி அந்த உண்மையான தீர்க்கதரிசிக்கு இல்லை. புத்த மதத்தவர்கள் ஒரு ‘மேசியா புத்தரை’ எதிர்நோக்கிய

வண்ணமிருந்தார்கள். எனவே இயேசுவுடைய பட்டமும் (உன் எதிரிகளையும் நேசிப்பாயாக; தீமையையும் எதிர்க்காதே, போன்ற) அவருடைய சில நீதி போதனைகளும் ஒரு வெள்ளை நிறமுடைய மெசிய்யா அதாவது மேசியாவைப்பற்றிக் கௌதம புத்தர் தீர்க்கதரிசனம் உரைந்திருந்ததும் - இந்த எல்லா அடையாளங்களையும் சேர்த்துப் பார்த்து மதகுரு அவரைப் 'புத்தர்' என்று முடிவு செய்தார். இயேசுவுடைய சில பட்டங்கள், நீதி போதனைகள் வாழ்க்கை நிகழ்ச்சிகள் ஆகிய யாவும் அறிந்தோ அறியாமலோ அந்தக் காலத்தில் புத்தர் மீது சுமத்தப்பட்டிருந்தன - என்பதும் சாத்தியமான காரியமே. ஏனென்றால், வரலாற்று நிகழ்ச்சிகளைப் பதிவு செய்து வைப்பதில் தங்களுக்கு மிகுந்த அனுபவம் உண்டு என்பதை நிரூபிக்க ஹிந்துக்கள் ஆதாரங்கள் காட்டியதேயில்லை. இயேசுவுடைய காலம் வரையிலும் புத்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் பதிவு செய்து வைக்கப்படவில்லை."

"ஆகவே, புத்த குருமார்கள், ஏதாவதொன்றைப் புத்தர் மீது சாட்டிக்கூற, வேண்டுமென விரும்பினால், அவ்வாறு செய்வதற்கு அவர்களுக்குச் சிறந்த வாய்ப்புக் கிட்டியது."

புத்தருடைய நீதி போதனைகளில் சில உதாரணங்கள் எடுத்துக் காட்டிவிட்டு வாக்களிக்கப்பட்ட மஸீஹ் - அதாவது அஹ்மது (அலை) அவர்கள் தொடர்ந்து இவ்வாறு எழுதுகின்றார்கள்:

"இந்த நீதிபோதனைகள், இந்த முறையில் போதிப்பது - அதாவது உவமான ரூபக் கதைகள் மூலம் போதிப்பது - (இதுவே இயேசு கையாண்ட முறையாகும்) - ஆகியவற்றை மற்ற நிகழ்ச்சிகளோடு இணைத்துப் பார்க்கும்போது, இது இயேசுவின் போதனைகளுடைய மறுபிரதிதான் என்பது உடனடியாகத் தெரியவரும். இயேசு இந்தியாவில் தங்கியிருந்து போதனை செய்கையில் புத்த மதத்தவர்கள் அவரைச் சந்தித்தார்கள். அவர் ஒரு புனித நபராகவும் ஆசீர்வதிக்கப்பட்ட மனிதராகவும் இருப்பதைக் கண்டு, இந்த நிகழ்ச்சி களைத் தங்களுடைய நூற்களில் பதிவு செய்து கொண்டார்கள். இல்லை, அவர்கள் அவரை புத்தர் 'என்றே'





அறிவித்தார்கள். ஏனென்றால், எந்த இடத்தில் ஒரு நல்ல விஷயம் காணப்பட்டாலும் சரி, அதற்கு முயன்று ஏற்றுக் கொள்ளுவது மனித இயல்பாகும். தங்களுக்கு முன்னேயுள்ள எந்த நபரும் கூறக்கூடிய எந்த ஒரு சிறந்த அம்சத்தையும் கவனித்து ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவே மக்கள் முயல்கிறார்கள்.

"எனவே புத்தமதத்தவர்கள், சுவிசேஷங்களிலுள்ள விவரங்கள் முழுவதையும் தங்களுடைய நூற்களில் அப்படியே எடுத்தெழுதி இருப்பார்கள் என்பது முற்றிலும் நடக்கக்கூடியதே. ஒத்திருக்கக்கூடிய எல்லா விஷயங்களும் இந்தியாவுக்கு வருகை தந்த நிகழ்ச்சியிலிருந்து எழுந்ததுதான். இயேசு இந்தியாவுக்கு வருகை தந்து, ஒரு கணிசமான காலம் அவர்களுக்கு மத்தியில் தங்கியிருந்தது புத்த மதத்தவர்களுக்கு நல்ல அதிர்ஷ்டமேயாகும்."

இயேசுவுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளும், அவரது போதனைகளும் புத்தமத இலக்கியத்தில் புகுந்துகொண்டு அவை கௌதம புத்தர் மீது சாட்டப்பட்டது எவ்வாறு? - என்ற கேள்விக்கு என்னுடைய கருத்துப்படி, இதுவே அறிவுக்குப் பொருத்தமான, மனநிறைவு தரக்கூடிய விளக்கமாகும்.

## *குறிப்புகள்*


1. **Pinkerion - A General colelction of the Best and Most Interesting Voyages and Travels in all parts of the World Vol.7.p.554 - London, 1811.**
2. **Loranger Translation : The Unknown Life of Jesus, pages 8, 9, 12, New York, 1895**
3. **Macdonald : The story of Barlaam and Joseph - Introduction, page XIV.I Calcatta 1895.**
4. **Eitel : Lectures on Buddhism - Third Edition, London - 1884.**

# அத்தியாயம் - 13

## யூஸ் ஆசாபும், இயேசுவும்

இயேசு இந்தியாவுக்கு வந்தது சம்பந்தமான ஆதாரங்களில் இதுவே கடைசியாகும் என்றாலும் இது தரத்தில் கடைசியல்ல. முந்தைய பக்கங்களில், இயேசு சிலுவையில் மரிக்கவில்லை; ஆனால் அவர் பூத உடலோடு கல்லறையை விட்டு வெளியே வந்து, பாலஸ்தீனத்தில் தாம் தங்கியிருந்தபோது தம்முடைய சீடர்களை இரகசியமாகச் சந்தித்தார்; அதன் பின்னர், காணாமற்போன இஸ்ரவேலின் பத்துக் கோத்திரத்தாருக்குப் போதிப்பதற்காக நாசிபின்னுக்குச் சென்று அங்கிருந்து பாரசீகம், ஆப்கானிஸ்தான் வந்து, பஞ்சாப் வழியாக காஷ்மீரை அடைந்தார் என்ற விஷயத்தைப் பற்றி நான் ஏற்கனவே விவரித்திருக்கிறேன்.

மரியமின் மகன் ஈஸா மரணமடைந்து விட்டார் என்று வாக்களிக்கப்பட்ட மஸீஹுஃக்கு இறைவன் அருளினான். ஸ்ரீநகரிலுள்ள கான்யார் வீதியில் நபி சாஹிபின் (அதாவது ஒரு தீர்க்கதரிசியின்) கல்லறை எனப்போற்றப்படும் கல்லறை ஒன்று இருப்பதாக வாக்களிக்கப்பட்ட மஸீஹ் அவர்கள் காஷ்மீர் வாசிகளிடமிருந்து கேள்விப்பட்டார்கள். எபிரெய மொழியிலும், அரபி மொழியிலும் மாத்திரமே உபயோகத்திலிருக்கும் 'நபி' என்ற வார்த்தை, அவர்களுடைய ஆர்வத்தைத் தூண்டிவிட்டது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் கல்லறை மதீனாவில் இருப்பதாலும், நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்களுக்குப் பிறகு முஸ்லிம்களிலிருந்து வேறு ஒரு நபி தோன்றவில்லையாதலாலும், அடக்கம் செய்யப்பட்டிருப்பவர் ஓர் எபிரெய இனத் தீர்க்கதரிசியே என்றும், அதிலும் முக்கியமாக எபிரேய தீர்க்கதரிசியே என்றும் முடிவு செய்தார்கள். மேலும் விசாரித்ததில் யூஸ்ஆசாப் என்பது அவருடைய பெயர் என்றும் அந்த தீர்க்கதரிசி ஒரு வெளிநாட்டவர் என்றும் ஏறக்குறைய 1900 வருடங்களுக்கு முன்பு காஷ்மீருக்கு வந்தார் என்றும் தெரிய வந்ததால் அன்னாருடைய கருத்து உறுதிப்பட்டது. இந்த விஷயங்களும், இன்னும் மற்ற





ஆதாரங்களும், ஸ்ரீநகரில் அடக்கப்பட்டிருக்கும் தீர்க்கதரிசி நசரேயனாகிய இயேசுவைத் தவிர வேறு எவருமல்லர் என்று அன்னாரை நம்ப வைத்தன. நசரேயனாகிய இயேசுவே இந்தியாவின் வட பகுதிகளில் வாழ்ந்து கொண்டிருந்த இஸ்ரவேல் கோத்திரத்தாரைத் தேடி இந்தியாவுக்குச் சென்றார்.

இந்தக் கருத்தை ஆதரிக்கக்கூடிய சில ஆதாரங்களைக் கீழே விவரிக்கிறேன்:

1) நாம் குறிப்பிடும் கல்லறையில் அடக்கப்பட்டிருப்பவர், ஏறக்குறைய 1900 ஆண்டுகளுக்கு முன்பு காஷ்மீருக்கு வந்த யூஸ்ஆசாப் என்ற தீர்க்கதரிசி என்றும், இவர் 'அதிபதி' என அழைக்கப்பட்டார் என்றும், ஸ்ரீநகரின் பிரசித்தி பெற்ற மனிதர்கள் வாய்மொழியாகவும் எழுத்து மூலமாகவும் ஆதாரம் பகருகின்றார்கள். 1902-ல் காதியானில் பிரசுரிக்கப்பட்ட அல்ஹுஃதா என்ற வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் எழுதிய அரபி நூலின் கடைசி அத்தியாயத்தில் இவ்விஷயத்திற்குச் சாட்சி சொல்லக் கூடியவர்களைப் பற்றிய பெரிய அட்டவணையைக் கண்டு கொள்ளலாம்.

2) அந்நாட்டின் சரித்திர சம்பவங்கள்கூட, அக்கல்லறை யூஸ் ஆசாப் தீர்க்கதரிசியினுடையது என்று உறுதியளிக்கின்றன. (இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்ட சரித்திர நூலாகிய) தாரீகி ஆஜமி என்ற காஷ்மீரத்து நூலின் ஆசிரியர், இந்தக் கல்லறையைப் பற்றி 82 ஆம் பக்கத்தில் இவ்வாறு கூறுகிறார்:

"செய்யத் நாசிருத்தீன் அவர்களுடைய கல்லறைக்கு அடுத்த கல்லறை காஷ்மீர்வாசிகளுக்காக அனுப்பப்பட்ட ஒரு தீர்க்கதரிசியி -னுடைய கல்லறை என்றும், அந்த இடம் ஒரு தீர்க்கதரிசியின் புனிதத்தலம் என்றழைக்கப்பட்டது என்றும் பொதுவாக மக்கள் அறிந்திருக்கின்றார்கள். அவர் வெளிநாட்டிலிருந்து காஷ்மீருக்கு வந்த ஓர் 'அதிபதி'. அவர் பக்தி, நேர்மை, தெய்வ வணக்கம் ஆகியவற்றில் சிறிதும் தவறாதிருந்தார். அவர் இறைவனால் தீர்க்கதரிசியாக்கப்பட்டுக் காஷ்மீரிகளுக்குப் போதிக்கும் பணியில் அமர்த்தப்பட்டார். அவரது பெயர் யூஸ் ஆசாப் என்பதாகும்.

* *இக்கல்லறையின் தோற்றத்தை இந்நூலின் முன்பக்க அட்டையில் காண்க.*

3) கிறிஸ்தவப் பிரச்சாரகரும் வாக்களிக்கப்பட்ட மஸீஹை எதிர்த்தவருமாகிய வெய்ட் பிர்க்ட்டு பல ஆண்டுகாலம் பஞ்சாபில் பணியாற்றியிருக்கிறார். இவர் 1903ல் இக்கல்லறையைப் பார்வையிட்ட பின்னர் 'எபிஃபேனி' என்ற கிறிஸ்தவப் பத்திரிகையில் ஒரு கடிதம் எழுதியுள்ளார். அக்கடிதத்தில் அவர் கூறுவதாவது:

"இதற்கு உள்ளே இரண்டு கல்லறைகள் உள்ளன. அவர் (அதாவது இப்புனிதத்தலத்தின் பொறுப்பாளராக இருக்கும் கண்ணியம் மிக்க பெரியவர்) வடக்குக் கோடியிலுள்ள பெரிய கல்லறை யூஸ் ஆசாபுக்கு உரியது என்றும், சிறிய கல்லறை செய்யது நாசிருத்தீனுக்கு உரியது என்றும் சொன்னார்."

4) 'ரிவியூ ஆப் ரெலிஜன்ஸ்' இதழின் 1909 அக்டோபர் பிரதியில் அதன் ஆசிரியர் இவ்வாறு எழுதுகிறார்:

"இந்தக் கல்லறையைப் பற்றிய மிகவும் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால், இது ஒரு நபி சாஹிபின் கல்லறை என்று மட்டும் அழைக்கப்படாமல், ஈஸா சாஹிப் (இயேசு) உடைய கல்லறை என்றும் அழைக்கப்படுவதேயாகும். வாக்களிக்கப்பட்ட மஸீஹின் மகனாகிய ஹஸ்ரத் மிர்ஸா பஷீருத்தீன் மஹ்மூது அஹ்மது அவர்கள் கடந்த ஜுலையில் (1909) இக்கல்லறைக்கு வருகை தந்தார்கள். (நெடுங்காலமாக அக்கல்லறையை காத்துவரும் வம்சாவளியினரில் உயிருடன் இருக்கக்கூடிய கடைசி ஆளான) ஒரு கிழவியிடம் அவர்கள், அக்கல்றை யாருடையது என வினவியதுபோது அவள், இது ஈஸா சாஹிபின் கல்லறை என்று பதிலளித்தாள். ஈஸா சாஹிப் (இயேசு) வானத்தில் இருப்பதாக மவ்லவிமார்கள் நம்பும்போது, அதனை அவள் ஈஸா சாஹிபின் கல்லறை என்று கூறுவானேன் என்று கேட்டபொழுது, அதற்கு அவள், அவர்கள் தங்கள் விருப்பப்படி நம்பிக் கொள்ளட்டும். இந்தப் பெயர் (ஈஸா) எங்கள் முன்னோரிடமிருந்து நாங்கள் கேட்டு வரக்கூடிய ஒரு பெயராகும்" என்று பதிலளித்தாள்.





5) (ஆயிரம் வருட காலத்திற்கு முந்திய அரபி நூலாகிய) இக்மாலுத்தீன் என்னும் நூலில், பக்கம் 359ல் கீழ்க்கண்டவாறு எழுதப்பட்டிருக்கிறது:

"அவர் (யூஸ் ஆசாப்) காஷ்மீர் என்றழைக்கப்படும் நாட்டை அடையும் வரையிலும் அநேக நாடு நகரங்களில் அலைந்து திரிந்தார். ஆகவே, அந்த காஷ்மீர் நாட்டில் அவர் பிரயாணம் செய்து, வாழ்ந்திருந்து மரணம் அவரை வந்தடையும் வரையிலும் அங்கேயே தங்கியிருந்தார். அவரது உடலை துறந்துவிட்டு, ஒளியின் இடத்தில் ஏறிச் சென்றார். அவர் மரணமடையுமுன்னால், தமக்கு ஊழியம் செய்து தம்முடனேயே தங்கியிருந்தவரும், எல்லா விஷயங்களிலும் கடமை தவறாதிருந்தவருமான 'யாபித்' என்னும் பெயருடைய ஒரு சீஷரை அழைத்து, இவ்வுலகிலிருந்து நான் பிரிந்து செல்லும் நேரம் நெருங்கி விட்டது. ஆகவே, நீ உன்னுடைய கடமையை ஆற்ற வேண்டும். உண்மையிலிருந்து பிறழவே கூடாது. மார்க்க நடைமுறைகள் எல்லாவற்றையும் கடைப்பிடிக்க வேண்டும் என்று கூறினார். பின்னர், தமக்கு ஒரு கல்லறை எழுப்புமாறு சீடருக்குக் கட்டளையிட்டு,தம் கால்களை நீட்டி மேற்குப்புறமாகத் தலையைத் திருப்பி முகம் கிழக்கு நோக்கியிருக்கும்படி வைத்துக்கொண்டு, ஆவியை விட்டு விட்டார்."

மேலும் இந்தப் புத்தகத்திலிருந்து யூஸ் ஆசாப் தம்முடைய போதனைகளுக்குப் புஷ்ரா (சுவிசேஷம் என்பதைக் குறிக்கும் அரபி, எபிரெய மொழிப் பதம்) எனப்பெயரிட்டார் என்று தெரிந்து கொள்ளுகிறோம். "தாம் மக்களுக்குப் போதித்து வந்த புஷ்ராவை (சுவிசேஷத்தை) அவர் ஒரு மரத்துக்கு ஒப்பிட்டார். தாம் பெற்றிருந்த அறிவையும் ஞானத்தையும் ஒரு நீரூற்றுக்கு ஒப்பிட்டார். அவரைச்சுற்றி மொய்த்துக்கொண்டு அவரது மார்க்கத்தை ஏற்றுக்கொண்ட மக்களை அவர் பறவைகளுக்கு ஒப்பிட்டுப் பேசினார்."

6) காஷ்மீரில் பிரிட்டானிய அரசாங்கத்தின் ரெசிடெண்ட்டாக இருந்த சர் பிரான்சிஸ் யங்ஹஸ் பண்ட் (1909-11) இவ்விதம் எழுதுகிறார்:

"1900 வருடங்களுக்கு முன்பு காஷ்மீரில் யூஸ் ஆசாப் என்ற பெயரில் ஒரு ஞானவான் வாழ்ந்து வந்தார். அவர் உவமை வடிவக் கதைகளின் மூலம் போதித்தார். கிறிஸ்து உபயோகித்த அதே கதைகளில் பலவற்றை அவரும் உபயோகித்தார். உதாரணத்திற்கு 'விதைக்கிறவனுடைய' கதையைக் கூறலாம். அவருடைய கல்லறை ஸ்ரீநகரில் இருக்கிறது. யூஸ் ஆசாபும், இயேசுவும் ஒருவர்தான் என்பது காதியானி பிரிவை நிறுவியவருடைய தத்துவமாகும்."[1]

7) 'காஷ்மீரில் யூதர்கள் வாழ்ந்து வந்தார்கள்' என்பதைக் காட்டுவதற்கு டாக்டர் பிரான்காய் பெர்னியர் தமது 'டிராவல்ஸ்' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ள ஆதாரங்களில் ஒன்று "மோசே காஷ்மீர்ப் பட்டணத்தில் மரித்தார். அவருடைய கல்லறை அங்கிருந்து ஒரு லீக்கிற்கு உட்பட்ட தூரத்திலேயே இருக்கிறது' என்னும் நம்பிக்கையாகும். பெர்னியர் சொற்படி காஷ்மீர் மக்கள் முஸ்லிம்களாக இருக்கையில், மோசே காஷ்மீரில் மரித்து அங்கேயே அடக்கம் செய்யப்பட்டுள்ளார் என்று அவர்களால் சொல்ல இயலாது. ஏனென்றால் இஸ்லாத்தின் தூய நபியவர்கள் மோசேயின் கல்லறை பாலஸ்தீனத்தில் இருப்பதாகச் சுட்டிக் காட்டியுள்ளார்கள். ஒருவேளை பெர்னியர் தவறாகப் புரிந்துகொண்டு, ஈசாவுக்குப் பதிலாக மூஸாவைக் கூறியிருக்கிறார் என்று தோன்றுகிறது. எப்படியிருப்பினும் இந்த ஆதாரத்திலிருந்து பதினேழாம் நூற்றாண்டு காஷ்மீர் மக்கள் அக்கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டிருப்பவர் மோசேயைப் போன்ற ஒரு பெரிய எபிரெய தீர்க்கதரிசி என்று நம்பியிருந்தார்கள் என்பதை இந்த ஆதாரம் சந்தேகத்திற்கிடமில்லாமல் நிரூபிக்கின்றது.[2]

8) 1939ல் காஷ்மீருக்கு வருகை தந்தபின் அஹ்மது இஸ்லாம் என்பார் தி சன்ரைஸ் பத்திரிகையாசிரியருக்குத் தாம் எழுதிய ஒரு கடிதத்தில் கீழ்க்கண்டபடி எழுதியிருக்கிறார்.

"விரைவிலேயே நான் என்னுடைய அறையை விட்டு வெளியேறினேன். ஒரு டோங்காவாலாவிடம் 'கான் யார்' என்று





சொன்னேன். உற்சாகத்தோடு வந்தது பதில். 'சார், நபிசாஹிபுடைய ரௌலாவை நீங்கள் பார்க்க விரும்புகிறீர்களா?', நான் 'ஆமாம்' என்று பதிலளித்தேன். சீக்கிரத்தில் நாங்கள் புறப்பட்டுவிட்டோம்... விரைவிலேயே ரௌலாவுக்கு வந்து சேர்ந்தோம். கல்லறையைப் பார்ப்பதற்கு இந்தியாவிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் எல்லா விதமான பார்வையாளர்களும் வருகிறார்கள் என்று என்னிடம் சொன்னார்கள். 'வைஸ்ராய்கூட இங்கே வந்திருக்கிறார்'. இதனைக் கேட்டு நான் உற்சாகமடைந்து,நீ எந்த வைஸ்ராயைக் கூறுகிறாய்? என்றேன். பெயர் சரியாகத் தெரியவில்லை. ஆனால் ஒரு கையில்லாமல் இருந்தாரே அந்த ஆளைச் சொல்லுகிறேன்' என்றார்கள்."

"நிச்சயமாக அவர் ஹாலிபாக்ஸ் பிரபுவாகவே இருந்திருக்க வேண்டும். அவரே பிரிட்டானிய வெளிநாட்டுச் செயலாளராக இருந்து, பின்னர் இர்வின் பிரபு என்றழைக்கப்பட்டார். ஹாலிபாக்ஸ் பிரபுவின் வருகை பற்றிய செய்தி பத்திரிகைகளில் ஒருபோதும் வரவில்லை. குறைந்தபட்சம் அதைப்பற்றி எதையும் வாசித்ததாகக் கூட எனக்கு ஞாபகமில்லை. இருப்பினும், ஹாலிபாக்ஸ் பிரபு தம்முடைய பேரார்வத்தை அவ்வளவு அமைதியாக ஏன் திருப்திப்படுத்திக் கொண்டார் என்பதை ஒருவன் புரிந்து கொள்ள முடியும். ஒரு வைஸ்ராயின் வருகை - அதிலும் வெளிக்குத் தெரிவிக்காமல் வரும் வருகை - விஷயத்தை மிகவும் முக்கியமானதாகத் தோன்றச் செய்கிறது."

"இந்தக் கல்லறை எவ்வளவு பழமையானதென்று நீ நினைக்கிறாய்?"

"ரொம்பப் பழமையானது சார்."

"எவ்வளவு பழமையானது?"

அங்கேயிருந்த மூன்று டோங்காவாலாக்களும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்ள். இறுதியாக ஒருவன் '1900 வருடங்களுக்கு முன்னாலுள்ளது' என்று சொல்லிவிட்டு, அவர் எங்கோ ஒரு வெளி நாட்டிலிருந்து வந்த தீர்க்கதரிசி. நூற்றுக்கணக்கான

வருடங்களாக இந்தக் கல்லறை சங்கைக்குரியதாக இருக்கிறது. இவை எங்களுடைய முன்னோரிடமிருந்து நாங்கள் கேட்டறிந்தவை'[3] என்றும் சொன்னான்.

குறிப்பிட்ட கல்லறையைப் பற்றிய இந்தக் குறிப்புகளிலிருந்து அக்கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் மனிதர் :

1. ஓர் அதிபதியாக இருந்தார்.
2. காஷ்மீர் மக்களுக்கு அனுப்பப்பட்ட ஒரு நபியாக அதாவது இறைவனின் தீர்க்கதரிசியாக இருந்தார்.
3. அவர் உவமை வடிவக் கதைகள் மூலம் பேசினார்.
4. 1900 ஆண்டுகளுக்கு முன்னர் மேற்குத் திசையிலிருந்து வந்த ஒரு அன்னிய நாட்டுக்காரராக இருந்தார்.
5. அவருடைய பெயர் 'யூஸ் ஆசாப்' என்பது. அவர் ஈசா என்ற பெயரிலும் அழைக்கப்பட்டார்.

இந்த உண்மையான விஷயங்களை உறுதிப்படுத்திய பின்னர், கல்லறையில் அடக்கம் செய்யப்பட்டிருப்பவர் யாரென்று அடையாளம் கண்டு கொள்ளுவது கஷ்டமல்ல. தாவீதின் குமாரனாகிய அதிபதி இயேசுவைத்தவிர இத்தகைய தனிச்சிறப்பு வாய்ந்த அடையாளங்கள் பொருந்தி வரக்கூடிய வேறு எந்த ஓர் அதிபதியும் கடந்த காலத்தில் இருந்ததில்லை.

1. இயேசு தாவீதின் குமாரன்[4] என அழைக்கப்பட்டார். தேவன் அவரை அதிபதியாக[5] உயர்த்தினான். அவரே பூமியின் ராஜாக்களுக்கு அதிபதியானார்[6] என்று (வேதாகமத்தில்) கூறப்பட்டிருந்தால் அதிபதி என்பவர் இயேசுவே.
2. இயேசுவே, காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு அனுப்பப்பட்ட நபியாக, அதாவது இறையோனின் தீர்க்கதரிசியாக இருந்தார். அவர் இறைவனுடைய வார்த்தையை ஆப்கானிஸ்தானிலும் காஷ்மீரிலுமுள்ள இஸ்ரவேலர்களுக்குப் போதிப்பதற்காக பாலஸ்தீனிலிருந்து பயணத்தை மேற்கொண்டார்.





3. இயேசுவே உவமை வடிவக் கதைகள் மூலம் பேசினார். அவர் தம்முடைய போதனையை 'புஷ்ரா' (சுவிசேஷம்) என்று அழைத்தார். தம்முடைய சீஷர்களைப் பறவைகளுக்கு ஒப்பிட்டுச் சொன்னார். மத்தேயு 13:3ல் விதைக்கிறவனுடைய கதை கூறப்பட்டுள்ளது? "உவமைகளினாலேயன்றி, அவர்களோடே பேசவில்லை."[7]
4. 1900 ஆண்டுகளுக்கு முன்னால், இயேசு பாலஸ்தீனிலிருந்து காஷ்மீருக்குப் பயணம் செய்தார். ஆகவே, இங்கு பேசப்படும் யூஸ் ஆசாப், இயேசு ஆகிய இருவர்களின் காலமும் ஒன்றாகவே இருக்கிறது.
5. திருக்குர்ஆனில் இயேசுவின் பெயர் ஈஸா என்று கூறப்பட்டுள்ளது. இது ஈஷூ என்ற எபிரெய மொழி வார்த்தையின் சுருங்கிய வடிவமாகும்.

## யூஸ் ஆசாப்

அவர் யூஸ் ஆசாப் என்றழைக்கப்பட்டார். யூஸ் ஆசாப் என்பதுகூட ஒரு எபிரெய மொழிப் பெயர்தான். யூஸு என்பதன் மறுவடிவமே யூஸ் என்பது. யூஸு என்றால் பழைய பாரசீக மொழியில் இயேசு என்று பொருள். கிரேக்க மொழியிலிருந்து பெயர்த்தெழுதப்பட்ட பெர்சிய, அராபிய புதிய ஏற்பாட்டுப் புத்தகங்களில் யாஸு என்ற பதம், இயேசுவைக் குறிக்க உபயோகிக்கப்பட்டுள்ளது. ஆகவே, யூஸ் என்ற பதம் இயேசு என்ற பதத்தைக் குறிப்பதற்கு உபயோகமாகியுள்ளது எனலாம். ஆசாப் என்பது ஒன்று சேர்ப்பவர் அல்லது திரட்டுபவர் என்ற பொருளுடைய பைபிள் பெயராக இருக்கிறது. 1 நாளாகமம் 16:4-7ல் ஆசாப் ஒரு பக்திமிக்க லேவியனாக இருந்தான் என்றும் தாவீதின் சங்கீதங்களைப் பாதுகாத்து வைப்போருக்குத் தலைவனாக நியமிக்கப்பட்டான் என்றும் நாம் படிக்கிறோம்.

சிதறிப்போயிருந்த இஸ்ரவேல் கோத்திரத்தார் எல்லாரையும் ஒன்றுசேர்த்து திரட்டுவதே இயேசு வருகையின் நோக்கமாக இருந்தது. அவரே இவ்வாறு கூறுகிறார்:

"இந்தத் தொழுவத்திலுள்ளவைகளல்லாமல் வேறே ஆடுகளும் எனக்கு உண்டு; அவற்றையும் நான் கொண்டு வரவேண்டும். அவைகள் என் சத்தத்துக்குச் செவி கொடுக்கும். அப்பொழுது ஒரே மந்தையும் ஒரே மேய்ப்பனுமாகும்."[8]

இந்தக் காரணத்துக்காகவே இயேசு, ஆசாப் என்றழைக்கப் பட்டார். அவர் பாரசீகம், ஆப்கானிஸ்தான், காஷ்மீர் ஆகிய நாடுகளிலுள்ள காணாமற்போன பத்துக் கோத்திரத்தாருக்குப் போதிப்பதற்காக வந்தபோது அவர் 'யூஸ் ஆசாப்' என்று அதாவது 'இயேசு ஆசாப்' என அழைக்கப்பட்டது சரியே.

ஐரோப்பிய எழுத்தாளர்கள் அதிலும் குறிப்பாக கிறிஸ்தவப் பிரச்சாரகர்கள் வாக்களிக்கப்பட்ட மஸீஹின் கண்டுபிடிப்பை அறியாமலும், தங்களுடைய கருத்துக்களுக்கு பர்லாம் - ஜோசபாட் அல்லது ஜோசப் கதையை ஆதாரமாகக் கொண்டும், மற்ற தீர்க்கதரிசிகளைப் போன்று புதைத்துவிடாமல் இயேசுவைக் காப்பாற்றுவதற்காக வேண்டி, குறிப்பிட்ட கல்லறை புத்தருடையது என்று கூறியிருக்கிறார்கள். உதாரணமாக மறைதிரு. வெய்ட் பிரெக்ட் மேல் குறிப்பிட்ட கடிதத்தில் பர்லாம் ஜோசபாட் கதையில் விவரிக்கப் பட்டுள்ள யூஸ் ஆசாப் பற்றிய நிகழ்ச்சிகள் புத்தருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் போன்றே இருப்பதால், யூஸ் ஆசாப் என்ற பெயரின் விளக்கம் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகிறது. அதாவது யூஸ் ஆசாப் என்ற பெயர் போதி சத்வா என்ற பெயரின் மறுவடிவமாக இருக்க வேண்டும் என்று வாதிக்கிறார். இதே போன்று டாக்டர் மாக்டொனால்டு எழுதுவதாவது:

"நம்முடைய கதையின் வரும் ஜோசப் அல்லது ஜோசபாட் என்பவர் புத்தரேயன்றி வேறொருவரல்லர் என்ற கண்டுபிடிப்பானது பிரெஞ்சு, ஜெர்மன், ஆங்கில அறிஞர்களால் ஒரே நேரத்தில், ஆனால் ஒருவரறியாமல் மற்றொருவரால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இக்கதை இந்தியாவிலிருந்து வந்தது என்று அதனை எழுதியவரே கூறுகிறார். அந்தக் கதை புத்தரைப் பற்றியல்லாமல், மற்றவரைப்பற்றியதல்ல என்பதை எவரும் கண்டுகொள்ள இயலும்."[9]





மேலும், "உண்மையில் பர்லாம் என்பவர் புத்தரின் இன்னொரு வடிவமேயாவார். ஆகவே அவர் ஜோசபாட் ஜோடியில் ஒருவராவார்" என்றும் கூறப்பட்டிருக்கிறது.[10]

இயேசுவின் கல்லறை சம்பந்தமாக வாக்களிக்கப்பட்ட மஸீஹின் ஆதாரமூலம் பர்லாம்-ஜோசபாட்டின் கதையன்று என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். எவ்வாறாயினும், ஐரோப்பிய எழுத்தாளர்கள் ஜோசபாட்டை புத்தராகக் கருதுவதற்கு நியாயமிருக்கிறதென்றால் நாம் அவரை இயேசுவாகக் கருதுவதற்கு அதே அளவு நியாயமிருக்கிறது. ஸ்ரீநகரின் யூஸ் ஆசாப் இறைவன் புறமிருந்து வந்த ஒரு தீர்க்கதரிசியாவார் என்பதையும், அவர் ஒரு சாதாரண மகானோ அல்லது தீர்க்கதரிசியின் சீஷரோ அல்லர் என்பதையும் மறந்துவிடக் கூடாது. (ஒவ்வொரு தீர்க்கதரிசியும் ஒரு மகானாக இருக்கிறார். ஆனால் ஒவ்வொரு மகானும் ஒரு தீர்க்கதரிசியாக மாட்டார்). ஆகவே ஸ்ரீநகர் யூஸ் ஆசாப், புத்தராக இருக்கவேண்டும். இல்லையேல் இயேசு கிறிஸ்துவாக இருக்க வேண்டும். அவர் புத்தராக இருக்க இயலாது. ஏனென்றால் முதலாவதாக புத்தர் ஸ்ரீநகரில் மரிக்கவில்லை. மேலும் அவரது சடலம் புதைக்கப்படவுமில்லை. அவரது உடல் எரிக்கப்பட்டு விட்டது. தற்கால ஆராய்ச்சியாளர்கள் புத்தர் உயிர்நீத்த இடத்தைக் கண்டுபிடித்து விட்டார்கள். அவர் (ஊத்திலுள்ள) குசி நகராவில் தமது 80 வது வயதில் கி.மு.543ல் மரித்து எரியூட்டப்பட்டார். அவரது உடலில் எஞ்சியுள்ள பொருட்கள் சண்டையிட்டுக் கொண்ட அவருடைய சீடர்களுக்கு மத்தியில் விநியோகிக்கப்பட்டு, அவற்றைக் காப்பதற்காக ஞாபகார்த்த ஸ்தபஸ்களும் எழுதப்பட்டன.[11]

டாக்டர் டி. டபிள்யூ. டேவிட் இவ்வாறு எழுதுகிறார்:

"இவற்றுள் மிகவும் முதன்மை வாய்ந்தது திரு விவிலியம் பெப்பி கண்டுபிடித்த கற்குவியலைக் கொண்ட ஒரு ஸ்தூபி ஆகும். இது ஆங்கில - நேப்பாளப் பகுதிக்கு மத்தியிலுள்ள எல்லைக்

கோட்டை அடுத்திருக்கும் பிர்துபூர் எஸ்டேட்டில் அமைந்திருக்கிறது. இந்த ஸ்தூபி சாக்கிய பிரிவைச் சேர்ந்தவர்கள் புத்தருடைய சிதையிலிருந்து தங்களுக்குக் கிடைத்த சாம்பலின் மீது எழுப்பியதாகும்."[12]

டாக்டர் ஹெர்மன் ஓல்டென்பெர்க்கு இவ்விதம் எழுதுகிறார்:

"புத்தர் குசினாராவில் மரணமடைந்தார். சூரிய உதய நேரத்தில், நகரத்தின் வாசலுக்கு முன்னர், உலக மன்னர்களின் சிதைக்குக் காட்டப்படும் எல்லாவிதமான மரியாதைகளோடும், குசினாராவின் கண்ணியவான்கள் அவருடைய சடலத்திற்கு எரியூட்டினார்கள்."[13]

ஆகவே குசிநகராவில் அல்லது குசினாராவில் மரணமடைந்து எரியூட்டப்பட்ட புத்தர், நாம் குறிப்பிடும் கல்லறையில் அடக்கப்பட்டவராக இருக்கிவியலாது என்பது நிச்சயம். இரண்டாவதாக, கல்லறையில் இருப்பவர் ராஜாவாகவோ, இளவரசனாகவோ, மகானாகவோ இருந்திருந்தால், அந்தத் திருத்தலம் புத்த மதத்தவர் கையிலோ அல்லது இந்துக்களுடைய கையிலோ இருந்திருக்கும். அம்மதத்தவர்கள் அங்கு வந்து போவார்கள். இப்போதுள்ளது போல முஸ்லிம்களுடைய கையில் இருக்காது.

மூன்றாவதாக, நான் முன்னால் விளக்கியுள்ளதுபோல் 'யூஸ் ஆசாப்' என்ற பெயரே எபிரெய மொழிப் பெயராகும். 'போதிசத்துவா' என்ற பதத்தின் மறுவடிவமாக அதனைக் கருதுவது நகைப்புக்கு உரியதாகும். 'போதிசத்துவா' என்பதன் மறுவடிவம் என்று கொள்ளுவதை விட யூஸ் ஆசாப் என்பதன் மறுவடிவமே என்று சொல்லுவது மிகுந்த பொருத்தமாக இருக்காதா? காஷ்மீரத்து யூஸ் ஆசாப் கௌதமபுத்தரல்லர் என்பது உறுதியாகும்போது, அவர் நசரேயனும், தீர்க்கதரிசி அதிபதியுமாகிய இயேசு (ஈஸா - அலை) அவர்களைத் தவிர வேறு யாருமல்ல என நாம் முழு நம்பிக்கையோடு கூறுவது நியாயமானதே.





ஸ்ரீநகரில் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் யூஸ் ஆசாப், இயேசுவைத் தவிர வேறு யாருமில்லை என்ற வாக்களிக்கப்பட்ட மஸீஹுடைய கண்டுபிடிப்பின் உண்மை, கிடைக்கக்கூடிய அத்தனை ஆதாரங்களாலும் நிரூபிக்கப்பட்டு விட்டது. எத்தகைய ஆதாரங்களால் மிகப் பழங்காலத்தில் நடந்த இதைப்போன்ற சம்பவங்களெல்லாம் நிரூபிக்கப்பட்டிருக் கின்றனவோ, அத்தகைய ஆதாரங்களே இவை. வாக்களிக்கப்பட்ட மஸீஹைத் தம்முடைய வாழ்நாள் முழுவதும் எதிர்த்து வந்த எகிப்து - கெய்ரோவைச் சேர்ந்த செய்க் ரஷீது ரிஜா என்பார்கூட (வாக்களிக்கப்பட்ட மஸீஹின் அரபிக் கிரந்தமாகிய) 'அல்ஹுதா'விலிருந்து இக்கல்லறை சம்பந்தமான வாதத்தை அப்படியே எடுத்துத் தமது 'தப்ஸீருல் மனார்' என்னும் நூலின் ஆறாம் புத்தகத்தில் 'இயேசு இந்தியாவுக்கு ஓடிச் சென்றதும் காஷ்மீரில் அவரது மரணமும்' என்ற தலைப்பின்கீழ் இப்படி எழுதுகிறார்:

"ஆகவே, இயேசு இந்தியாவுக்கு ஓடிச் சென்றதும், ஸ்ரீநகரில் அவர் மரணமடைந்ததும், அறிவுக்குப் பொருந்தாததோ அல்லது வரலாற்று உண்மைக்குப் புறம்பானதோ அல்ல."

நீதிபதி டோக்கர் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார்:

"முன்பு நான் குறிப்பிட்டிருந்த பழைய கதையை இங்கு கவனிக்க வேண்டும். சில வருடங்களுக்கு முன்னர் 'தி ஈஸ்ட் அன்ட் த வெஸ்ட்' என்ற பத்திரிகையில், அக்கதையின் தற்காலப் பதிப்பு வெளியிடப்பட்டது. சுருங்கச் சொன்னால், இயேசு சிலுவையில் மரிக்கவில்லை என்பது பற்றியும், அவரது காயங்களில் தடவப்பட்ட ஆச்சரியம் மிக்க மருந்துச் சிகிச்சையினால் நாற்பது நாள் இடைவெளியில் காயங்கள் குணமடைந்து, அவர் பழைய நிலையடைந்தார் என்பது பற்றியும், காணாமற்போன இஸ்ரவேல் கோத்திரத்தாருக்கு போதிப்பதற்காக அவர் இந்தியாவுக்குப் புறப்பட்டுச் சென்று, கடைசியில் ஸ்ரீநகரில் மரணமடைந்தார் என்பது பற்றியும், அங்கேயுள்ள ஒரு கல்லறை இன்று வரையிலும் அவருடைய கல்லறையாகச் சுட்டிக் காட்டப்படுகிறது என்பது பற்றியும் அதில் கூறப்பட்டுள்ளது."

"இந்த விளக்கம் உண்மையானதுதான் என்பதை உறுதிப்படுத்தக் கூடிய எந்த ஆதாரத்தைப் பற்றியும் நான் அறியாவிட்டாலும், இவ்விளக்கம் எவ்விதத்திலும் அறிவுக்குப் பொருந்தாததும், நிகழ முடியாததும் என்று தள்ளிவிட இயலாது என்பதை சுட்டிக்காட்ட ஆசைப்படுகிறேன். ஆப்கானிஸ்தானிலும், பாக்டிரியாவிலும், சந்தேகமில்லாமல் எபிரெய கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் இன்று வரையிலும் இருந்து வருகிறார்கள் என்பதை நாம் மற்ற ஆதாரங்களில் இருந்து அறிகிறோம். புதிய ஏற்பாட்டுப் புத்தகங்களிலுள்ள அநேக வசனங்கள் இக்கதையை அப்படியே சரியென்று ஒப்புக்கொள்ளாவிட்டால்கூட, இக்கதையோடு பொருந்தியிருக்கின்றன என்பதையறிய ஆச்சரியமாக இருக்கிறது. அப்படியானால், யூதேயாவிலோ கலீலேயாவிலோ நாற்பது தினங்களுக்கு மேல் தங்கியிருப்பது ஆபத்தானது என்பதையறிந்து கொண்ட இயேசு, அந்த நாற்பது தினங்களுக்குள்ளேயே தமது சீடர்களுக்குத் தேவனுடைய ராஜ்யத்தைப் பற்றிய விஷயங்களைப் போதித்து விட்டவராக (அப்போஸ்தலருடைய நடபடிகள் 1:3) காணாமற்போன கோத்திரத்தாராகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்குத் தேவனுடைய ராஜ்யத்தின் செய்தியைக் கொண்டு செல்ல வேண்டுமென்ற அழைப்பை உணர்ந்து கொண்டார் என்று கூறுவது விவேகமற்ற காரியமாகுமா?"

மீண்டும் 77 ஆம் பக்கத்தில் அவர் கூறுவதாவது:

"நமக்குத் தெரியவில்லை என்பதை நான் மீண்டும் கூறியாக வேண்டும். அந்த தொலைதூரமான பகுதிகளில் – காணாமற்போன கோத்திரத்தாராகிய இஸ்ரவேல் வீட்டாருக்குப் போதனை செய்த பின்னர், இயேசு ஸ்ரீநகரில் மரணமடைந்து இப்போது அவருடைய பெயரைத் தாங்கி நிற்கும் கல்லறையில் அடக்கம் செய்யப் பட்டிருக்கலாம்."[14]

'தி ஹெவன்லி ஹை ஸ்னோ பீக்ஸ் ஆஃப் காஷ்மீர்' என்ற கட்டுரையில் ஜான் நோயஸ் என்பார் கீழ்க்கண்டவாறு எழுதுகிறார். இக்கட்டுரை அமெரிக்க ஐக்கிய நாட்டில் வெளியாகும் 'ஆசியா' என்ற பத்திரிகையில் 1930 அக்டோபர் மாதம் பிரசுரிக்கப்பட்டது.





இந்த அழகிய அகன்ற தோளுடைய காஷ்மீர்க் குடியானவர்கள் மிகுந்த திடசாலிகளாய் இருக்கின்றார்கள். அப்படியிருப்பினும், மிகுந்த இணக்கமுடையவர்களாகவும், சாதுவானவர்களாகவும் இருக்கின்றார்கள். அவர்களைப்பற்றிய ஒரு விஷயம் மிகுந்த வேகத்துடன் உங்கள் உள்ளத்தைத் தொடுகிறது. அதாவது, நீங்கள் நன்றாகப் பார்த்து அறிந்திருக்கும் யூதர்களின் சாயலைக் கொண்டவர்களாகவே அவர்கள் காணப்படுகிறார்கள். பைபிளில் சொல்லப்பட்ட யூதர்களின் உடை எவ்வாறிருக்குமென்று நீங்கள் எண்ணுகிறீர்களோ - அதாவது தொளதொளப்பான மேலங்கியை போன்ற – அந்த உடையை அணிகிறார்கள் என்பதால் அவர்கள் அப்படித் தோன்றவில்லை. ஆனால் யூதர்களுடைய முகச்சாயலையும் உடலமைப்பையும் பெற்றிருப்பதாலேயே அவர்கள் அப்படித் தோன்றுகிறார்கள்."

இதிலுள்ள பொருத்தம் என்னவெனில், யூதர்களுக்கும் காஷ்மீரிகளுக்கும் உள்ள தொடர்பைப் பற்றிய பலமிக்க பாரம்பரிய உண்மைகள் காஷ்மீரில் வழக்கிலிருந்து வருவதுதான். (இது தற்செயலான பொருத்தம் தானா? சரித்திர உண்மையன்றோ?) இயேசு உண்மையில் சிலுவையில் மரிக்கவில்லை. ஆனால் சிலுவையிலிருந்து கீழே இறக்கப்பட்டு, காணாமற்போன கோத்திரத்தாரைத் தேடுவதற்கு மறைந்து சென்றார் என்றும், காஷ்மீர் லடாக்,சின்ன திபெத் ஆகிய பகுதிகளுக்கு வந்து ஸ்ரீநகரில் மரணமடைந்து அங்கேயே புதைக்கப் பட்டார் என்றும், இந்நாட்டில் வதந்திகள் பல்லாண்டுகாலமாகவே உலவிக் கொண்டிருக்கின்றன. இங்கே ஒரு தீர்க்கதரிசி வாழ்ந்தார் எனவும், இயேசு போதித்ததைப் போன்று அவரும் உவமை வடிவக் கதைகள் மூலமாகவும், சிறுகதைகள் மூலமாகவும் போதித்தார் எனவும் காஷ்மீர்ப் புராணங்களில் கூறப்பட்டிருப்பதாக நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இக்கதைகள் காஷ்மீரில் இன்றுவரை சொல்லப்பட்டு வருகின்றன."

'கிளிம்ஸஸ் ஆஃப் ஒர்ல்டு ஹிஸ்டரி' என்ற தமது நூலில் பாரதத்தின் பிரதம மந்திரி பண்டித ஜவஹர்லால் நேரு இவ்வாறு எழுதுகிறார்:

"மத்திய ஆசியா முழுவதிலும் காஷ்மீர், லடாக், திபெத் மற்றும் அதற்கும் அப்பால் வடக்கிலுள்ள நாடுகளில்கூட இயேசு அல்லது ஈசா அவ்விடங்களில் பிரயாணம் செய்தார் என்ற பலத்த நம்பிக்கை இன்னும் இருந்து வருகிறது." (பக்கம் 84)

ஆகவே, இயேசு காயமடைந்த தம்முடைய உடலோடு கல்லறையை விட்டு வெளியே வந்து, வானத்துக்கு ஏறிச் செல்லாமல், இப்பூமியிலேயே வாழ்ந்தார் என்பதை மனதில் கொண்டு, அறிவும் சிந்திக்கும் ஆற்றலும் கொண்ட எவரும் உண்மையோடு சிந்தித்துப் பார்ப்பார்களானால், (காஷ்மீர் ஸ்ரீநகர்) கான்யார் வீதியில் அடக்கம் செய்யப்பட்டுள்ள மனிதர், மரியாளின் மகனான இயேசு (ஈசா - அலை) அவர்களே என்ற முடிவுக்கு வந்து சேருவார்கள் என்று நம்புகிறேன்.

இயேசு சிலுவையில் மரிக்காவிட்டால் அவர் எங்கு சென்றார்? எங்கு மரித்தார்? என்று எங்களிடம் கேட்போருக்கு இதுவே எங்கள் பதிலாகும்.

இயேசு கிறிஸ்துவின் அறியப்படாத வாழ்க்கையைப் பற்றி மிகச் சிக்கலான கேள்விக்கு இதில்தான் விடையிருக்கிறது. இதை விட ஒப்புக் கொள்ளக்கூடியதும், அறிவுக்குப் பொருத்தமானதுமான எந்தவொரு பதிலையும் எவரும் கொண்டுவர முடியுமானால், அவர் முன் வந்து அதனை சமர்ப்பிக்கட்டும். உலகம் நீதி தீர்க்கும்.

கடைசியாக, ஒரேயொரு விஷயத்தைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். அதாவது புதைபொருள் ஆராய்ச்சியாளர்கள், கல்லறையைத் திறந்து அதனை ஆராய்வார்களானால், மேலே கூறப்பட்ட கண்டுபிடிப்பை ஆதரிக்கக்கூடிய, கல் எழுத்துச் சான்று களையோ வேறுசில ஆதாரங்களையோ அவர்கள் கண்டு கொள்ளலாம். ஏக இறைவனை வணங்குவதற்கு மக்களை அழைப்பதற்காக அதே இறைவனால் அனுப்பப்பட்ட ஒரு மனிதனை வணங்கி வரக்கூடிய இலட்சக்கணக்கான மக்களை, அந்த ஆதாரங்கள் (பிழையிலிருந்து) விடுவிக்கும்.





## குறிப்புகள்


1. *ஸர் பிரான்சிஸ் யங்ஹஸ்பண்ட் : காஷ்மீர் - பக்கம் 129-130 இலண்டன், 1911*
2. *பெர்னியர் எழுதிய டிராவல்ஸ் இன்தி மொகல் எம்பயர் - பக்கம் 430 ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக அச்சகம்.*
3. *தி சன்ரைஸ் பத்திரிகை வால்யூம் 10 எண் 16, ஏப்ரல் 22, 1939, லாகூர்.*
4. *மத்தேயு 9 : 27, 20 : 30*
5. *அப். நடபடிகள் 5 : 31*
6. *வெளி 1 : 5*
7. *மத்தேயு 13 : 34*
8. *யோவான் 10 : 16*
9. *மாக்டொனால்டு எழுதிய பர்லாம் - ஜோஸப் கதை முகவுரை கல்கத்தா, 1895*
10. *ஜோஸப் ஜேகப் : பர்லாம் ஜோஸபாட் - முகவுரை - இலண்டன், 1895.*
11. *சேம்பர் கலைக்களஞ்சியம் - புதிய பதிப்பு - புத்த மதம் - இலண்டன், 1880*
12. *பிரிட்டானியக் கலைக்களஞ்சியம் தலைப்பு 'புத்தமதம்'.*
13. *ஓல்டன் பர்க் எழுதிய 'புத்தா' - பக்கம் 203*
14. *டாக்கர் - இஃப் ஜிஸஸ் டிட் நாட் டை அப்பான் தி கிராஸ்? - பக்கம் 71 - இலண்டன், 1920*

## அத்தியாயம் - 14

### அதி உன்னதத் தீர்க்கதரிசனம்

நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள், 'முஸ்லிம் களுக்கு மத்தியிலிருந்து டமாஸ்கஸ்சிற்கு கிழக்கேயுள்ள ஓர் இடத்தில், அதாவது இந்தியாவில், மஸீஹ் தோன்றுவார் என்றும், அவர் நிச்சயமாகச் சிலுவையை முறிப்பார். அதாவது தற்கால வைதீகக் கிறிஸ்தவ மதத்தின் முதுகெலும்பாகிய இயேசு கிறிஸ்துவின் சிலுவை மரணம் சம்பந்தமான கிறிஸ்தவக் கொள்கைகள் பொய்யானவை என்று நிரூபிப்பார்' என்றும் தீர்க்கதரிசனம் அருளியுள்ளார்கள். இத்தீர்க்கதரிசனத்தின் மேன்மையைக் கிறிஸ்தவ வாசகர்கள் உணர்ந்துகொள்ள தவறியிருக்கலாம். எனவே அதனை நான் அவர்களுக்கு விவரிக்க ஆசைப்படுகிறேன்.

நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள் தோன்றுவதற்கு முன்னர், யூதர்களும் கிறிஸ்தவர்களும் இயேசு சிலுவையில் மரித்தார் என நம்பி வந்தார்கள். யூதர்கள் அவரைக் 'கள்ளத் தீர்க்கதரிசி, இறைவனால் சபிக்கப்பட்டவர்' என்று நிரூபிப்பதற்காகவும், கிறிஸ்தவர்கள், உலகத்தின் பாவத்திற்காக அவர் இறைவனால் பலியாக்கப்பட்டார்' என்று நிரூபிப்பதற்காகவும் அவ்வாறு நம்பிக்கை கொண்டிருந்தனர். மூன்றாம் நாளில் மரித்தோரிலிருந்து உயிர்த்தெழுந்து நாற்பது தினங்கள் இப்பூமியில் வாழ்ந்திருந்து பின்னர் வானத்திற்கு ஏறிச்சென்றார் என்பதையும் கிறிஸ்தவர்கள் தங்கள் நம்பிக்கையுடன் சேர்த்துக் கொண்டார்கள். இந்த நம்பிக்கைக்கு எதிர்மாறாக, இறைவன் தனது திருக்குர்ஆனில் 'இயேசு சிலுவையில் இறக்கவில்லை' என்று அறிவித்துள்ளான். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், "ஈஸா - அலை (இயேசு) தமது நூற்று இருபதாவது வயதில் மரணமடைந்தார்கள்"[1] என்று மிகத் தெளிவாக அருளியுள்ளார்கள். மேலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மரணமடைந்த வேளையில், நபிகள் நாயகத்துக்கு முன்னர் தோன்றிய அத்தனை தீர்க்கதரிசிகளும் மரணமடைந்து





விட்டார்கள் என்று முஸ்லிம்கள் யாவரும் உறுதியாக ஏற்றுக் கொண்டனர். நபிகள் நாயகத்தின் தோழர் ஒருவர் இதுபற்றிச் சந்தேகப்பட்டபோதும் இன்னும் சிலர், முஹம்மது (ஸல்) அவர்கள் இறைவனுடைய திருத்தூதராக இருந்திருந்தால் அன்னார் இறந்திருக்க மாட்டார்கள் என்று கூறியபோதும், ஹஸ்ரத் அபுபக்கர் (ரலி) அவர்கள் அப்படிக் கூறியவர்கள் மத்தியில் உரையாற்றி, திருக்குர்ஆனிலிருந்து இந்த வசனத்தை எடுத்தோதினார்கள். "முஹம்மது ஒரு தூதரேயல்லாது வேறல்ல, அவருக்கு முன்புள்ள எல்லாத் தூதர்களும் சென்று போனார்கள். அவர்கள் மரணமடைந்து விட்டாலோ, கொல்லப்பட்டு விட்டாலோ நீங்கள் (அவரை விட்டு) புறங்காட்டித் திரும்பி விடுவீர்களோ?"[2]

இந்தத் திருக்குர்ஆன் வசனத்தைச் செவியுற்றதும் நபிகள் பெருமானாரின் மரணத்தைப் பற்றிய எல்லாச் சந்தேகங்களும் அவர்களுடைய மனதைவிட்டு மறைந்துவிட்டன. முன்னுள்ள எல்லாத் தீர்க்கதரிசிகளையும் போன்று நபிகள் பெருமானாரும் மரணித்து விட்டார்கள் என்று முழு மனதோடு அவர்கள் நம்பினார்கள்.

மேலும் தீர்க்கதரிசிகளையும் அரசர்களையும் பற்றி அபூஜாபர் முஹம்மது இப்னு ஜரீர்-அல்-தபாரி எழுதிய புகழ் வாய்ந்த வரலாற்று நூலில் நாம் காண்பதாவது: நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மரணமடைந்ததும் பஹ்ரைன் முஸ்லிம்கள், நபிகள் நாயகம் உண்மையாளர்தாமா என்பதில் சந்தேகம் கொண்டு, 'முஹம்மது ஒரு தீர்க்கதரிசியாக இருந்திருந்தால் அவர் மரணமடைந்திருக்கமாட்டார்' என்று சொல்லியபடி தங்களுடைய பழைய மதத்தைப் பின்பற்றலாயினர். அப்துல் கைஸின் கோத்திரத்தைச் சேர்ந்த முஅல்லாவுடைய மகனும், மதீனாவில் தங்கியிருந்து போதிய அளவு மார்க்க அறிவைப் பெற்றிருந்தவருமான ஜரூத் தம்முடைய கோத்திரத்தாரைப் பார்த்து, "இறைவனுடைய தீர்க்கதரிசிகள் சென்ற காலத்திலும் இருந்து வந்தார்கள் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?" என வினவினார்.

'தெரியும்' என்று அவர்கள் பதிலுரைத்தார்கள்.

"அவர் மேலும், நீங்கள் கற்பனை செய்துதான் சொல்லுகிறீர்களா? அல்லது அதை நீங்கள் அறிவீர்களா?" என்றார்.

அவர்கள், "உண்மையிலேயே அது எங்களுக்குத் தெரியும்" என்று பதில் கூறினார்கள்.

அவர் மேலும் தொடர்ந்து "அவர்களுக்கு என்ன நேர்ந்தது" என்பதை உங்களால் சொல்லமுடியுமா?" என்று கேட்டார்.

அதற்கு அவர்கள், "அவர்கள் மரணித்து விட்டார்கள்" என்று பதில் கூறினார்கள்.

அப்போது அவர், அவர்கள் மரணமடைந்து விட்டதைப் போன்றே முஹம்மது நபி (ஸல்) அவர்களும் மரணித்து விட்டார்கள். மேலும், அல்லாஹ்வைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு எவருமில்லை என்றும், முஹம்மது (ஸல்) அவனுடைய திருத்தூதரென்றும் நான் சாட்சி கூறுகிறேன் என்று எடுத்துச் சொன்னார். அவர் காட்டிய உதாரணத்தைப் பின்பற்றி அவர்களும் அவ்வாறே கூறினார்கள். மேலும் தங்களுடைய தலைவனாகிய ஜாருதுக்கு வாழ்த்துக் கூறினார்கள்.[3]

இவ்விதமாக, அவர்கள் மனநிறைவு பெற்று இஸ்லாம் மார்கத்தில் உறுதியோடு இருந்தார்கள். ஆகவே நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன்னுள்ள தீர்க்கதரிசிகள் யாவரும் மரணித்தே யிருக்கிறார்களாதலால், நபிகள் நாயகத்துடைய மரணத்தில் வழக்கத்திற்கு மாற்றமானது ஒன்றுமில்லை என்று அறிகிறோம். இவ்விதமாக, இயேசு கிறிஸ்துவின் மரணம், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தோழர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட தர்க்கத்திற்கு இடமற்ற விஷயமாகும்.

ஆனால் காலம் செல்லச்செல்ல, பல்வேறு நாடுகளைச் சேர்ந்த கிறிஸ்தவர்கள், ஆயிரமாயிரமாக இஸ்லாம் மார்க்கத்தில் சேர்ந்தார்கள். துரதிருஷ்டவசமாகத் திருக்குர்ஆனைப் பற்றியும், இஸ்லாத்தின் போதனைகளைப் பற்றியும் போதிய அறிவு





பெறாதிருந்ததால், இவ்விதமாக மதம் மாறியவர்கள் இயேசு கிறிஸ்துவைப் பற்றிய தங்களுடைய பழைய பாரம்பரிய நம்பிக்கைகளையும், கிறிஸ்தவக் கொள்கைகளையும் இன்னும் பற்றிப் பிடித்துக் கொண்டேயிருந்து அவற்றை முஸ்லிம்களுக்கு மத்தியில் பரப்பியும் விட்டார்கள். முஸ்லிம்களோ அவர்கள் தங்களுடைய சகமார்க்கத்தவர்கள் என்பதால் அவர்கள்மீது நம்பிக்கை வைத்து, அவர்கள் அறிவிப்பைச் சரியென ஒப்புக்கொண்டு, இந்தக் கதைகளுக்கு ஏற்றபடித் திருக்குர்ஆன் வசனங்களுக்கு விளக்கம் கூற ஆரம்பித்தனர். அதன் விளைவாக நபிகள் பெருமானாரின் தோழர்கள் எல்லாராலும் ஒப்புக்கொள்ளப் பட்டிருந்த 'இயேசு இயற்கை மரணமடைந்தார்' என்ற விஷயம், முஸ்லிம்களால் மறுத்துரைக்கப்பட்டது. இயேசு தமது பூத உடலோடு வானத்துக்கு ஏறிச் சென்றார் என்றும், பிற்காலத்தில் அவர் அங்கிருந்து இறங்கி வருவார் என்றும் ஒரு நம்பிக்கை, முஸ்லிம் உலகத்திற்குள் எவ்வளவு தூரம் பரவியிருந்ததென்றால், அதற்கு எதிராகப் பேசுவதுகூட மதத்துரோகம் என்று கருதப்பட்டது.

இயேசுவின் சிலுவை மரணத்தை மறுத்துக்கூறும் திருக்குர்ஆன் வசனம் இவ்வாறு அமைந்துள்ளது. "மேலும் அல்லாஹ்வுடைய தூதர். மர்யத்தின் மகன் ஈஸா மஸீஹை நாங்கள் கொன்றுவிட்டோம் என்று அவர்கள் (யூதர்கள்) கூறினார்கள். ஆனால் அவர்கள் அவரைக் கொலை செய்யவுமில்லை; சிலுவையில் அறைந்து கொல்லவுமில்லை. ஆனால் அவர் அவ்வாறு அவர்கட்குத் தோற்றமளிக்குமாறு செய்யப்பட்டு விட்டார் (அதாவது அவர்களுடைய பார்வைக்கு ஈஸா மரணித்தவராகத் தோன்றினார்...) ஆனால் நிச்சயமாக அவர்கள் அவரைக் கொன்று விடவில்லை. மாறாக, அல்லாஹ் அவருக்கு தன்னிடம் உயர்வைக் கொடுத்தான். அல்லாஹ் வல்லவனும் நுண்ணறிவுள்ளவனுமாவான்."[4]

யூதர்கள் இயேசுவைக் கொல்லவில்லை என்று இந்த வசனத்தில் தெளிவாகக் கூறியிருப்பதால், எந்த ஒரு முஸ்லிமும் இயேசு சிலுவையில் மரணித்தார் என்று கூறயியலாது. ஆகவே, சிலுவையில் அறையப்பட்டவர் உண்மையிலேயே மரித்து விட்டார்

என்று கிறிஸ்தவ மதத்திலிருந்து மதம் மாறி வந்தவர்கள் கூறியதை, ஒரு புறத்தில் முஸ்லிம்கள் ஒப்புக் கொண்டுவிட்டு, மறுபுறத்தில் சிலுவையில் அறையப்பட்ட அந்த மனிதர் இயேசு கிறிஸ்து என்பதை மறுத்தார்கள். அவர்கள் கூறியது இதுதான்; யூதர்களால், இயேசு கிறிஸ்து ஓர் அறையில் சிறைவைக்கப்பட்டிருந்தபோது, இறைவன் தம்முடைய தூதர் ஒருவரை அனுப்பினான். அத்தூதர் கூரைச் சாளரத்தின் வழியாக அவரை வானத்திற்குத் தூக்கிச் சென்றுவிடவே, அறையைக் காத்து நின்ற காவலாளி, இயேசுவைப் போன்றவராக ஆக்கப்பட்டார். தண்டனை அளிப்பவர்கள் இயேசுவுக்குப் பகரமாக இங்கு நின்ற இந்தக் காவலாளியைக் கூட்டிச் சென்று சிலுவையில் அறைந்து கொன்றார்கள் என்று முஸ்லிம்கள் கூறினார்கள். முஸ்லிம் விரிவுரையாளர்களில் சிலர், இயேசு கிறிஸ்து மூன்று தினங்கள் இயற்கை மரணமடைந்தவராக இருந்து, அதன் பின்னர் வானத்திற்கு ஏறிச் சென்றார் என்று சொல்லும் அளவுக்குச் சென்றிருக்கிறார்கள். மற்றொருவர் கிறிஸ்துவுக்கு ஒப்பாக ஆக்கப்பட்டார் என்ற கருத்து திருக்குர்ஆனில் காணப்படவில்லை. நபிகள் பெருமானாரின் எந்தவொரு வாக்கியமும் இதனை ஏற்றுக் கொள்ளவுமில்லை. இவ்விஷயம் சம்பந்தப்பட்ட எல்லாக் கதைகளும் ஆதாரமற்றவை, நம்பத் தகுதியற்றவை எனலாம்.

மேலும், வேறொருவனை இயேசுவுக்கு ஒப்பாக ஆக்கி, அவனை யூதர்கள் வசம் ஒப்படைப்பதில் எவ்விதமான அர்த்தமிருப்ப தாகவும், நமக்குத் தோன்றவில்லை. இயேசுவை இறைவன் வானத்துக்குத் தூக்கிச் சென்றுவிட்டால் இயேசுவுக்குப் பகரமாகக் கருதப்படும் ஒருவரை யூதர்களிடம் இயேசுவைக் கொன்று விட்டோம் என்றும், அவரை சபிக்கப்பட்டவர் என நிரூபித்து விட்டோம் என்றும் பெருமையடிக்கும் பொருட்டு இறைவன் யூதர்களைத் திருப்திப்படுத்த விரும்பினானா? மேலும் இயேசுவுக்குப் பகரமாக நின்ற அந்த ஆள், தான் இயேசுவல்ல என்று மறுத்துரைத்தாக ஓர் இடத்திலும் சொல்லப்பட வில்லை. அந்த ஆள் இதனை எளிதில் நிரூபித்துவிட்டுத் தப்பித்துக் கொண்டிருக்கலாம்.





குறைந்தபட்சம், அவனுடைய நண்பர் அல்லது உறவினரில் யாராவது அவன் மறைந்து விட்டதை கண்டு அவனைத் தேடி அலைந்திருப்பார்கள். இந்தக் கதை உண்மையானதாயிருந்தால் யூதர்கள் இயேசுவை மோசக்காரர் என்றும் கள்ளத் தீர்க்கதரிசி என்றும் நம்பியதற்காக அவர்களைக் கண்டிப்பதில் நியாயமில்லை. அவர் வானத்துக்குப் பறந்து செல்லுவதை அவர்கள் பார்க்கவில்லை. இயேசுவைப்போலத் தோற்றமளிக்கும்படி ஆக்கப்பட்ட காவலாளி, தான் மேசியா அல்ல என்பதை மறுத்துரைக்கவும் இல்லை. அந்த ஆள் இயேசுதான் என்று நம்பிக்கொண்டு யூதர்கள் அவரைச் சிலுவையில் அறைந்தார்கள். ஆகவே இவ்விஷயத்தில் யூதர்கள் இயேசுவை நம்ப மறுத்ததற்காக, இறைவனுடைய பார்வையில் மன்னிக்கப்பட்டவர்களா யிருப்பார்கள். இப்படிக்கூறுவது மேற்சொன்ன திருக்குர்ஆன் வசனத்தில் அடங்கியுள்ள பொருளுக்கு நேர் முரணானது. அதாவது அவரைச் சிலுவையில் அறைந்து தாங்கள் கொன்றுவிட்டதாக யூதர்கள் கூறுவதால், யூதர்கள் இறைவனின் சாபத்தைப் பெற்றவராகிறார்கள் என்று அவ்வசனம் தெளிவாகக் கூறுகிறது.

இந்த வசனம் தவிர, இயேசு இயற்கை மரணமடைந்தார் என்பதை தெளிவாகக் காட்டக்கூடிய இன்னும் பல வசனங்கள் திருக்குர்ஆனில் இருக்கின்றன. உதாரணமாக இறைவன் இயேசுவிடம் கேள்வி கேட்பதாக திருக்குர்ஆனில் நாம் இவ்வாறு காண்கிறோம்.

“மர்யமின் மகன் ஈசாவே! நீர் மக்களிடம் அல்லாஹ்வை அன்றி என்னையும் என் தாயாரையும் இரண்டு கடவுள்களாக ஆக்கிக் கொள்ளுங்கள் என்று கூறினீரா? என அல்லாஹ் கேட்டபோது அவர் நீ தூயவன். எனக்குத் தகாததை நான் கூறவில்லை. நான் அவ்வாறு கூறியிருப்பின், நிச்சயமாக நீ அதனைத் தெரிந்திருப்பாய்.

நீ எனக்குக் கட்டளையிட்டபடி என்னுடைய இறைவனும் உங்களுடைய இறைவனுமாகிய அல்லாஹ்வை வணங்குங்கள்

என்றே நான் அவர்களிடம் கூறினேன். நான் அவர்களுடன் இருந்த காலம் வரை அவர்களுக்கு நான் சாட்சியாக இருந்தேன். ஆனால் நீ எனக்கு மரணத்தைத் தந்தபின் நீயே அவர்களை கண்காணித்தவனாக இருந்தாய். மேலும் நீயே எல்லாவற்றுக்கும் சாட்சியாளனாக இருக்கிறாய்”[5] என்று கூறினார்.

இறுதித் தீர்ப்பு நாளில் இறைவன் இயேசுவிடம் கேள்வி கேட்கும்போது, தாம் இயற்கை மரணமடைந்தாகவும் அந்த நேரத்தில் தாம் இறைத்தன்மை பெற்றவர் என்ற எவ்வித எண்ணமும், கிறிஸ்தவர் -களுக்கு மத்தியில் இருந்ததில்லை என்றும் இயேசு அறிவிப்பார் என்பது இந்த வசனங்களிலிருந்து தெளிவாகிறது. இயேசு வானத்தில் இன்னும் உயிரோடு இருந்து வருகிறார் என்றும், அவர் மீண்டும் இவ்வுலகத்திற்கு வருவதாக இருந்தால் இலட்சக்கணக்கான கிறிஸ்தவர்கள் அவரைக் கடவுளாகக் கருதிக் கொண்டிருக்கும் ஒரு நிகழ்ச்சியை, அவர் எதிர்த்து நிற்க வேண்டியவராக இருப்பார். அப்படியானால் இறைவனின் முன்னிலையில் இத்திருக்குர்ஆன் வசனத்தில் கூறியுள்ளதைப் போன்று மறுத்துரைக்காமல், கிறிஸ்தவர்கள் தம்முடைய இறைத்தன்மையில் நம்பிக்கை கொண்டிருப்பது நமக்குத் தெரியாது என்று கூற முடியாத நிலையில் இருப்பார். எவ்வாறாயினும், இயேசு சிலுவையில் அறையப்பட்டபோதிலும், அவர் சிலுவையில் மரணித்துவிடவில்லை. ஆனால் பின்னர் இயற்கை மரணமடைந்தார் என்ற உண்மை, வாக்களிக்கப்பட்ட மஸீஹ் தோன்றி உண்மையை வெளியிடும்வரை, நூற்றாண்டு காலமாக முஸ்லிம்களுக்கு மறைக்கப் பட்டதாகவே இருந்தது. இயேசுவுடைய சிலுவை மரணத்தை மறுத்து தமது ‘மஸீஹ் இந்துஸ்தான் மே’ என்ற நூலின் இரண்டாம் அத்தியாயத்தில் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) இந்த வாக்கியத்தை விவரித்து இவ்வாறு எழுதுகிறார்கள்: “சர்வ வல்லமையுள்ள இறைவன் கூறுகிறான்: யூதர்கள் இயேசுவை வெட்டிக் கொல்லவுமில்லை. அவரை சிலுவையில் அறைந்து கொல்லவுமில்லை. மாறாக, சிலுவையில் இயேசு மரித்து விட்டதாக அவர்கள் சந்தேகங் கொண்டார்கள். இயேசு (ஈசா - அலை)





உண்மையிலேயே சிலுவையில் மரித்துவிட்டார் என்று அவர்களுக்கு மனநிறைவு ஏற்படுத்தக்கூடிய எவ்வித ஆதாரங்களும் அவர்களிடம் இல்லை. இயேசு சிலுவையில் அறையப்பட்டதும், அவர்கள் அவரைக் கொல்லுவதற்கு முடிவு செய்திருந்ததும் உண்மையாக இருந்தாலும் உண்மையாகவே இயேசு சிலுவையில் மரித்து விட்டார் என்று ஊகிப்பது யூதர்கள், கிறிஸ்தவர்கள் ஆகிய இருவர் பேரிலும் தவறாகும் என்று இவ்வசனங்களில் எல்லாம் வல்ல இறைவன் தெரிவிக்கிறான். நிச்சயமாக அவர்கள் அவரைக் சிலுவையில் அறைந்து கொல்லவில்லை. சிலுவை மரணத்திலிருந்து இயேசுவைக் காப்பாற்றுவதற்கான சூழ்நிலைகளை இறைவன் உண்டாக்கி விட்டான்.

ஒருவர் நீதிமானாக இருந்தால், யூதர்களும் கிறிஸ்தவர்களும் நம்பியிருந்ததற்கு மாற்றமாகத் திருக்குர்ஆனில் என்ன சொல்லப் பட்டிருந்ததோ அதுவே உண்மையாக இருந்தது என்பதை அவர் சொல்லியாக வேண்டும். சிலுவை மரணத்தில் இருந்து இயேசு காப்பாற்றப்பட்டார் என்பதை, உன்னதத் தகுதியுள்ள தற்கால ஆராய்ச்சியாளர் ஒருவர் நிரூபித்துள்ளார். “இயேசுவின் எலும்புகள் முறிக்கப்படாதிருக்கையில், இரண்டு அல்லது மூன்று மணி நேரத்திற்குள் இயேசு மரித்துவிட்டார் என்பது எப்படி முடியும்?” என்ற கேள்விக்கு யூதர்களால் ஒருபோதும் பதில் சொல்ல இயலவில்லை என்பதை எழுத்துச் சான்றுகள் எடுத்துக் காட்டுகின்றன. இந்த விஷயமே யூதர்களை, தாங்கள் இயேசுவை வாளினால் கொன்று விட்டதாக ஒரு நியாயவார்த்தை உற்பத்தி செய்யத் தூண்டியது. ஆனால் இயேசு வாளினால் கொல்லப்பட்டார் என்று யூதர்களின் பழங்கால வரலாறு கூறவில்லை. இறைவனுடைய உன்னதத் தன்மையாலும், வல்லமையாலும் அப்போது இருள் சூழ்ந்து, நில நடுக்கம் ஏற்பட்டது. பிலாத்துவின் மனைவி ஒரு கனவு கண்டாள். சிலுவையில் அறையப்பட்ட உடலை சிலுவையில் வைத்திருப்பது சட்ட விரோதமாகக் கருதப்படும் ஓய்வுநாள் இரவு வந்தது. தம்முடைய மனைவி கண்ட கனவினால் நியாயாதிபதி இயேசுவை விடுதலை செய்ய நாட்டமுடையவரானார்.

இவையாவும் இறைவனால் நடத்தப்பெற்றன. அதோடுகூட, அவர் மரணித்து விட்டார் என பிறர் நம்பும் வகையில் மயக்கடையும் படியும் செய்யப்பட்டார்.

பயங்கரமான அடையாளங்களும், நிலநடுக்கமும் மற்ற நிகழ்ச்சிகளும் யூதர்களின் மனதில் இறைத்தண்டனை பற்றிய பயத்தை உண்டாக்கிவிட்டன. தவிரவும், ஓய்வு நாள் இரவில் சடலங்கள் சிலுவையில் இல்லாமல் இருக்கச் செய்யும் வழக்கமும் அக்காலத்தில் நடைமுறையில் இருந்து வந்தது. இயேசு மயக்க நிலையில் இருந்ததை கண்ணுற்ற யூதர்கள், அவர் இறந்துவிட்டதாக எண்ணினார்கள். அப்போது இருளடர்ந்து இருந்தது. நிலநடுக்கமும் பெருங்குழப்பமும் உண்டாகியிருந்தது. தங்களுடைய வீடுகளைப் பற்றிய கவலை அவர்களைப் பற்றிக் கொண்டது. அத்தகைய இருளிலும், நிலநடுக்கத்திலும், குழந்தைகள் எவ்வளவு துன்புற்றிருக்க வேண்டும்? இந்த மனிதர் ஒரு பொய்யராகவும், மத விரோதியாகவும் இருந்தால், அவர், துன்பமனுபவித்த காலத்தில் இப்படிப்பட்ட பயங்கரமான அடையாளங்கள் ஏன் காட்டப்பட்டன? என்ற பயம் அவர்களுடைய உள்ளத்தில் நிறைந்திருந்தது. இயேசு உண்மையிலேயே இறந்து விட்டாரா? அல்லது அவருடைய அசல் நிலைமைதான் என்ன? என்பதைப்பற்றி தங்களைத் தாங்களே திருப்திப்படுத்திக் கொள்ள முடியாத அளவுக்கு அவர்கள் நிலைகுலைந்து போய் இருந்தார்கள்.

அவ்வாறாயினும் உண்மையிலேயே இறைவன் இயேசுவைக் காப்பதற்காகச் செய்த இறை திட்டமே நடந்தேறியது. இதுவே நாம் முன்னர் கூறிய திருக்குர்ஆன் வசனத்தில் குறிப்பாகச் சொல்லப் பட்டிருக்கிறது. அதாவது யூதர்கள் இயேசுவைக் கொல்லவில்லை. அவர்கள் இயேசுவைக் கொன்றுவிட்டதாக அவர்களை இறைவன் நினைக்கச் செய்தான். அந்தச் சூழ்நிலை நேர்மையாளரை இறைவனிடத்தில் நம்பிக்கை வைக்குமாறு தூண்டுகிறது. அவன் நாடியபடி அவனது அடியார்களை அவனால் காப்பாற்ற முடியும்.





அதே புத்தகத்தில் மேலும் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) கூறுகிறார்கள்: “இயேசுவின் காலத்தில், புத்தமதக் கோட்பாடுகள் பாலஸ்தீனத்தை எட்டியிருந்தன என்று எவ்வகையிலேனும் நிரூபிக்க விரும்புகிற ஐரோப்பிய ஆராய்ச்சியாளர்களின் முயற்சிகளை, நான் ஒப்புக்கொள்ளவில்லை. பழங்கால புத்தமதக் கிரந்தங்களில் இயேசுவுடைய பெயர் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதால் பாலஸ்தீனத்தில் புத்தமதம் பற்றித் துப்புக் கண்டுபிடிக்கும் அருவெறுக்கத்தக்க முயற்சியை ஆராய்ச்சியாளர்கள் கைக்கொள்வது வருத்தத்திற்குரிய விஷயமாகும். இவர்கள் இயேசுவின் ஆசீர்வதிக்கப்பட்ட அடிச்சுவடுகளை மலைவளம் மிக்க நேபாளம், திபெத்து, காஷ்மீர் ஆகிய பகுதிகளில் ஏன் தேடக்கூடாது?

“ஆயிரம் இருள் போர்வைகளுக்கடியில் மறைக்கப்பட்டுக் கிடக்கும் உண்மையை இந்த ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடிப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. மனிதனை வழிபடும் வழக்கம் எல்லைகளைக் கடந்து உலகம் முழுவதும் பரவிவிட்டதாகவும், சிலுவை வணக்கமும், மனிதப்பலி என நம்பப்படும் கொள்கையும், இலட்சக் கணக்கான மக்களை உண்மையான இறைவனிடமிருந்து பிரித்து விட்டன என்பதையும் வானத்திலிருந்து பார்த்த இறைவன், தன்னுடைய ஓர் ஊழியரை நசரேயனாகிய இயேசுவின் பெயரிலுள்ள சிலுவை மார்க்கத்தை உடைத்தெறிவதற்காக அனுப்பி வைத்தான். ஆகவே ஆதிகாலத்தில் அளிக்கப்பட்ட வாக்குறுதிக்கொப்ப, அவரே வாக்களிக்கப்பட்ட மஸீஹாகத் தோன்றினார். சிலுவையை உடைக்கும் நேரம், அதாவது சிலுவைக் கொள்கையின் தவறுகள் வெட்ட வெளிச்சமாக்கப்படும் வேளை வந்தது... இயேசு வானத்திற்கு ஏறிச் சென்றார் என்ற கருத்தில், அது தப்பாக இருந்தபோதிலும் ஓர் இரகசியம் அடங்கியிருக்கிறது. மேசியாவின் உண்மை மறக்கப்பட்டு பழக்கத்தில் இல்லாமலே போய்விட்டது - புதைகுழியின் மண், பிணத்தைத் தின்று விடுவது போல. இந்த மேசியாவின் உண்மை, வானத்தில் மனித வடிவத்தில் வாழ்ந்து கொண்டிருப்பதாக நம்பப்பட்டது. ஆகவே, தற்காலத்திய இந்த

உண்மை பூமிக்கு இறங்கிவர வேண்டியது தடுக்க முடியாததாக இருந்தது. எனவே இக்காலத்தில் அது உயிருள்ள மனித வடிவத்தில் பூமிக்கு இறங்கி வந்திருக்கிறது. அதுவே சிலுவையை உடைத்தெறிந்திருக்கிறது... ஆகையால் நான் வாளை ஏந்திக் கொண்டு வந்திருக்கிறேன் என்று எண்ணாதீர்கள். இல்லை, உருவிய எல்லா வாள்களையும் அவற்றின் உறைக்குள் போடுவதற்கே நான் வந்திருக்கிறேன். உலகம் இருளிலேயே பெருஞ்சண்டையை நடத்திக் கொண்டிருக்கிறது. அநேகர் தங்களுக்கு நன்மை நாடக்கூடியவர்களைத் தாக்கியிருக்கிறார்கள். அநேகர் இரக்க உணர்வுள்ள நண்பர்களின் இருதயத்தைக் காயப்படுத்தி, தங்களின் நேசர்களுக்குத் தீங்கு விளைவித்திருக் கிறார்கள். ஆனால், இப்போதோ இருள் இல்லை. இரவு போய் பகல் வந்திருக்கிறது. இதனைப் பயன்படுத்திக் கொள்ளுபவர்களே ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்."

இவ்விதமாக 1350 ஆண்டுகளுக்கு முன்னர், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் சிலுவையை முறித்து இயேசுவின் சிலுவை மரண நம்பிக்கையிலுள்ள பொய்மையை எடுத்துக்காட்டுவார்கள் என்றுரைத்த தீர்க்கதரிசனம் நிறைவேறிவிட்டது. தம்முடைய இரண்டாவது வருகையின்போது "பூமியிலுள்ள சகல கோத்திரத்தாரும் கண்டு புலம்புவார்கள்"[6] என்று இயேசுகூடச் சொன்னாரே, அதுவும் நிறைவேற்றப்பட்டு விட்டது. பூமியில் (அதாவது பாலஸ்தீனத்தில்) வாழ்ந்துவரக்கூடிய கிறிஸ்தவர்கள், யூதர்கள், முஸ்லிம்கள் ஆகியோர் இயேசுவைப் பற்றிய தங்கள் நம்பிக்கை தவறாக இருந்திருக்கிறது என்பதை அறியும்போது அவர்கள் வருந்துவார்கள் என்பதே இயேசு சொன்னதன் பொருளாகும்.

கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் கான்ஸ்டன்டைன் காலத்தில், கிறிஸ்தவ மதத்தின் அடையாளமாகச் சிலுவை பகிரங்கமாக ஏற்றுக் கொள்ளப்பட்டதைப் போலவே,[7] கிறிஸ்தவர்கள் தங்கள்





நம்பிக்கையின் பொய்மையை உணரும்போது, சிலுவைகள் எல்லாம் உடைக்கப்பட்டு விடும் என்று வாக்களிக்கப்பட்ட மஸீஹின் வாய்மொழி மூலமாக இறைவன் முன்னறிவிப்புச் செய்திருக்கிறான். "இன்றிலிருந்து மூன்றாவது நூற்றாண்டு கழிவதற்குள், வானத்திலிருந்து இயேசு இறங்கி வருவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் எல்லாரும் - அவர்கள் கிறிஸ்தவர்களாயினும் சரி, முஸ்லிம்களாயினும் சரி - அதில் நம்பிக்கை இழந்து இப்போது இவ்வளவு அன்போடு போற்றி வரும் பொய்யான நம்பிக்கையை கைவிட்டு விடுவார்கள். அப்போது உலகத்தில் ஒரே மார்க்கமும் ஒரே தலைமையுமே காணப்படும். விதையை விதைப்பதற்காக நான் அனுப்பப்பட்டேன். நான் விதையை விதைத்து விட்டேன். அது இப்போது வளர்ந்து பூக்களையும் பழங்களையும் அந்தந்தப் பருவத்தில் தாங்கி நிற்கும். அதனைப் பிடுங்கி எறியக்கூடியவர் எவருமில்லை."[8]

பல்வேறு சமுதாயத்தின் நபிமார்கள் அருளிய தீர்க்கதரிசனங்கள் யாவற்றையும் நிறைவேற்றி வைப்பதற்காக இக்காலத்தில் இறைவனால் அனுப்பி வைக்கப்பட்டுள்ளவரே வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) என்னும் இறைதூதராவார். நான் இந்த நூலை முடிப்பதற்கு முன் அன்னாருடைய வார்த்தைகளைக் கொண்டே பிரார்த்தனை புரிய விரும்புகிறேன். அவர் கூறியதாவது:

"எங்கள் அன்புக்குரிய அல்லாஹ்வே, ஒரு மனிதரைக் கடவுளாக வணங்குவதிலிருந்து கிறிஸ்தவர்களைக் காப்பாயாக. இக்காலத்திற்காக உனது தீர்க்கதரிசிகள் அருளிய வாக்குறுதிகளை நிறைவேற்றி வைப்பாயாக. முட்களிலிருந்து காயம்பட்டவர்களைத் தூக்குவாயாக. அவர்களை உன்னுடைய 'இரட்சிப்பு' என்னும் நீரூற்றில் தூய்மைப்படுத்துவாயாக. உன்னுடைய 'இரட்சிப்பு' என்பது உன்னை அறிந்துகொள்ளுவதிலும், உன்னை நேசிப்பதிலுமே அடங்கி இருக்கிறது. மற்றபடி, ஒரு மனிதருடைய இரத்தத்தினால் இரட்சிப்பு ஏற்படுவதில்லை. இரக்கச் சித்தமுள்ள

இறைவா, கிறிஸ்தவர்கள் ஒரு மனிதரை வணங்குவது நெடுங்காலமாக நடந்து வந்திருக்கிறது. ஆயினும் இறைவா, அவர்கள்மீது கருணைகாட்டி, அவர்களுடைய கண்களைத் திறப்பாயாக. சர்வ வல்லமையும், கருணையும் நிறைந்த இறைவா! எல்லாக் காரியங்களும் உன்னால் ஆகும். ஆகவே, சிலுவை தண்டனை மற்றும் இயேசுவின் இரத்தம் ஆகிய பொய்த் தத்துவங்களில் இருந்து அவர்களை விடுவிப்பாயாக. சர்வ வல்லமையுள்ள இறைவா! அவர்களுடைய நலனுக்காக நான் வேண்டுவதைக் கேட்டருளி, அவர்கள் உன்னைப் பார்க்குமாறு அவர்களுடைய இதயங்களை தெய்வீக ஒளியினால் ஒளியூட்டுவாயாக. அவர்கள் உன்னைக் கண்டு கொள்ளுவார்கள் என்று யாரால் கற்பனை செய்து பார்க்க இயலும்? அவர்கள் ஒரு (மனிதப்) பிறவியை வணங்குவதைத் தவிர்ப்பார்கள், உன்னுடைய சத்தத்தைக் கவனிப்பார்கள் என்று யாருடைய மனதில் தோன்றியிருக்கிறது? ஆனாலும் இறைவா எல்லாக் காரியங்களும் உன்னால் ஆகும். ஆகவே, நோவாவின் காலத்தில் நீ செய்தது போல அவர்களை அழித்துவிடாதிருப்பாயாக. ஏனென்றால் அவர்கள் யாவரும் உன்னுடைய படைப்புகளே. அவர்கள்மீது இரக்கம் காட்டுவாயாக. அவர்கள் உண்மையை ஏற்றுக் கொள்ளுமாறு அவர்களுடைய இதயங்களைத் திறந்தருள்வாயாக. ஆமீன்."

இலண்டன் ஜலாலுத்தீன் ஷம்ஸ்
14.3.1945 இலண்டன் பள்ளிவாயிலின் இமாம்





## குறிப்புகள்


1. **Isabah fi-shur-his-Sahabad, Vol. 5, p.54 and Kanzul Ummal Vol. 7**

   **- Reported by Ibnu Omar and Tabarani reports from Hazrat Fatima.**
2. **Bukhari Vol. 3, p.63 Osamaniyya Misriyya press, 1932**
3. **Tarikh-ur-Rusal Wal Mulook, by Abu Djafar Muhammad Ibn Djarir-at - Tabari-pp. 1058-59 Brill. 1890.**
4. *திருக்குர்ஆன் 4:158,159*
5. *திருக்குர்ஆன் 5:116,117*
6. *மத்தேயு 24 : 30*
7. **Ency. Britt. Ed 11, "Cross".**
8. *வாக்களிக்கப்பட்ட மஸீஹின் தஷ்கீராதுஷ் ஷஹாததைன் - பக்கம் 65 - காதியான், 1903*


